அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–२१

(देवीस्तोत्राणि)



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா-21

(தேவீ ஸ்தோத்ரங்கள்)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்.

1967





| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ லலிதா பஞ்சரத்னம் | 1 — 8 |
| 2. | கௌரீ தசகம் | 9 — 22 |
| 3. | ஸ்ரீ த்ரிபுரஸுந்தரி அஷ்டகம் | 23 — 32 |
| 4. | மந்த்ரமாத்ருகா புஷ்பமாலாஸ்தவம் | 33 — 53 |
| 5. | ஆனந்த லஹரி | 54 — 77 |
| 6. | ஸ்ரீ சாரதா புஜங்கப்ரயாதாஷ்டகம் | 78 — 85 |
| 7. | பவானீ புஜங்கம் | 86 — 101 |
| 8. | கல்யாண வ்ருஷ்டி ஸ்தவம் | 102 — 117 |
| | ச்லோகாநுக்ரமணிகை | i — iii |



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

சங்கர பகவத்பாதாசார்யாள் அருளிய எல்லா ஸ்தோத்திரங்கள் வேதாந்த பிரகரணங்களையும் தமிழ் உரையுடன் வெளியிட்டு வரும் ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலையில் இது 21வது மலர். இதுவரை 20 மலர்களில் கணபதி ஸுப்ரஹ்மண்ய ஸ்தோத்திரங்களும், சிவ ஸ்தோத்திரங்களும், விஷ்ணு ஸ்தோத்திரங்களும் அநேகம் பிரகரணங்களும் வெளி வந்துள்ளன. தேவீ ஸ்தோத்திரங்களில் ஸௌந்தர்யலஹரி ஒன்று மட்டும் ஏற்கனவே (7-வது) தனி மலராக வந்துள்ளது. இந்த மலரில் எட்டு தேவீ ஸ்தோத்திரங்கள் வழக்கம்போல் பதவுரை கருத்துரைகளுடன் அச்சிடப்பட்டுள்ளன. மற்ற தேவீ ஸ்தோத்திரங்களும் பிரகரணங்களும் பின்னால் வெளிவரும்.

ஸ்தோத்திரங்களில் லலிதா, கௌரீ, த்ரிபுரஸுந்தரி, சாரதா, பவானி என்று வெவ்வேறு பல பெயர்கள் கூறப்பட்டுள்ள போதிலும், எல்லா சக்திகளையும் பராசக்தி ஸ்வரூபமாகத்தான் கூறுகிறார். அந்த பராசக்தி ஜகத்காரணமான ஸச்சிதானந்த ப்ரஹ்ம ஸ்வரூபம்தான் என்பதையும் கூறுகிறார்.

**विश्वस्य सृष्टिविलयस्थितिहेतुभूतां** (பக்கம் 5) **शालभञ्ज-स्थापितसुसाखिललोकां** (பக்கம் 9) **सत्यज्ञानानन्दमयीं** (பக்கம் 10) **तामध्यात्मज्ञानपद्व्या गमनीयां** (பக்கம் 18) **चिदानन्दलतिका** (பக்கம் 60) **चिदानन्दरूपां** (பக்கம் 86) **आनन्दसंवित्स्वरूपां** (பக்கம் 95) அர்த்த ஞானத்துடன் இந்த ஸ்தோத்திரங்களைப் படிப்பவர்களின் மனம் உருகி தானாகவே ஜகதம்பிகையின் திவ்ய சரணகமலங்களில் ஈடுபட்டு அங்கேயே நிலைக்கும்படி மிக அழகாக தேவியின் மஹிமைகளை எடுத்துக்கூறுகிறார்.

இதில் முதலாவதான லலிதா பஞ்சரத்னம் பிராதஸ் ஸ்மரண ஸ்தோத்திரமாக அமைந்துள்ளது. கௌரீ தசகத்தில் ஒவ்வொரு சுலோகத்தின் நான்காவது பாதத்திலும் தேவியைத் தாயாகக் கூறுகிறார். '**गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे**' சாரதா புஜங்கத்தில் '**भजे शारदाम्बामजस्रं मदम्बां**' என்று 'என் தாயார்' எனக் கூ

சிருங்கேரியில் தான் ஸ்தாபித்த ஸ்ரீ சாரதாம்பாள் பேரில் இயற்றியுள்ள ஸ்தோத்ரம் இது. இரண்டாவது சுலோகத்தில் 'तुङ्गभद्रा' என்று குறிப்பிடுகிறார். த்ரிபுரஸுந்தரி அஷ்டகத்தில் காளிதாஸன் கூறியுள்ளபடி ச்யாமளா என்றும் மாதங்கி என்றும் கூறப்படும் தேவியை வீணாபாணியாக வர்ணிக்கிறார். மந்த்ரமாத்ருகா புஷ்பமாலாஸ்தவமும், கல்யாண வ்ருஷ்டி ஸ்தவமும் ஸ்ரீவித்யா மந்திராக்ஷரங்கள் அடங்கியது. இதில் முதலாவதில் பூஜையில் செய்யும் உபசாரங்கள் கூறப்பட்டிருப்பதால் இதைப் படிப்பதால் பூஜாபலனும் கிடைக்கிறது. பரமசிவனுடைய பெருமைகள் எல்லாம் பராசக்தியால் ஏற்பட்டது என்பதைப் பலவாறாகக் காட்டுகிறார் 'ஆனந்த லஹரியில்'. பவானீ புஜங்கத்தில் அம்பிகையின் பாதம் முதல் சிரஸ்ஸு வரை அங்கங்களை வர்ணிக்கிறார்.

லம்போதர ஜனனியின் திவ்ய மஹிமைகளை எடுத்துக்கூறும் இந்த மலரை ஸகல விக்னங்களையும் போக்கும் அந்த கணபதியை விசேஷமாகப் பூஜிக்கும் சுபதினமான பிலவங்க ஆவணி விநாயக சதுர்த்தி புண்ய காலத்தில் பம்பாய்க்கு விஜயம் செய்து அங்கு தங்கி யாவருக்கும் அருள் புரியும் சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு அவர்களின் திவ்ய சரண கமலங்களில் பக்தி பூர்வமாக ஸமர்ப்பணம் செய்கிறோம்.

*K. V. சுப்பரத்னம் அய்யர்,*
*பொதுக்காரியதர்சி*
*அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி*

॥ श्रीः ॥

# ॥ श्रीललितापञ्चरत्नम् ॥

# ஸ்ரீ லலிதா பஞ்சரத்னம்

[காலையில் விழிப்பு வந்தவுடன் முதல் கார்யமாக பகவானை தியானம் செய்யவேண்டுமென்று சாஸ்திரமும் ஸம்பிரதாயமும் இருப்பதையனுஸரித்து சுத்த சைதன்யத்தை அனுஸந்தானம் செய்யக்கூடிய பரமஹம்ஸர்களுக்கு மூன்று சுலோகங்களை ஸ்ரீமத் ஆசார்யாள் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறபடி மற்றவர்களுக்கு உபயோகப்படும்படியாய் பராசக்தியான லலிதாம்பிகையைப் பற்றி ஐந்து சுலோகங்கள் அனுக்ரஹம் செய்திருக்கிறார்கள். அவைகளில் முதல் சுலோகத்தில் அம்பிகையின் முகாரவிந்த ஸ்மரணமும் இரண்டாவதால் கராரவிந்த பஜனமும், மூன்றாவதால் பாதாரவிந்த வந்தனமும், நான்காவதால் பரதத்வானுஸந்தானமும், ஐந்தாவதால் நாம ஸங்கீர்த்தனமுமாக விதித்துவிட்டு இந்த ஸ்தோத்திரத்தை அதிகாலையில் சொல்வோருக்கு ஐஹிக ஆமுஷ்மிக சிரேயஸுகளையெல்லாம் பரதேவதை கொடுப்பாளென்ற உறுதியை கடைசியான ஆறாவது சுலோகத்தில் சொல்லி முடிக்கிறார். ஸ்ரீ பகவத்பாத ஸ்தோத்ரங்களில் இந்த ஸ்ரீ லலிதா பஞ்சரத்னம், மூன்று சுலோகங்களுள்ள ஆத்ம தத்வ விஷயக ஸ்தோத்ரம் இவ்விரண்டும் ப்ராதஸ்மரண ஸ்தோத்ரமாக அமைந்துள்ளன.]

प्रातः स्मरामि ललितावदनारविन्दं
बिम्बाधरं पृथुलमौक्तिकशोभिनासम् ।
आकर्णदीर्घनयनं मणिकुण्डलाढ्यं
मन्दस्मितं मृगमदोज्ज्वलफालदेशम् ॥ १ ॥

ப்ராத: ஸ்மராமி லலிதா வதநாரவிந்தம்
பிம்பாதரம் ப்ருதுல மௌக்திக சோபிநாஸம் ।
தீர்க்க நயனம் மணிகுண்டலாட்யம்
மந்தஸ்மிதம் ம்ருகமதோஜ்வல பாலதேசம் ॥

**बिम्ब**–கோவைப்பழம்போலுள்ள, **अधरं**–உதடுகளையுடையதும், **पृथुल**–பெரிதான, **मौक्तिक**–முத்தினால் செய்யப்பட்ட மூக்குத்தியினால், **शोभि**–சோபிக்கிற, **नासं**–மூக்கையுடையதும், **आकर्ण**-காதுவரை, **दीर्घ**-நீண்ட, **नयनं**–கண்களையுடையதும், **मणि**–நவரத்னங்களால் செய்யப்பட்ட, **कुण्डल**–குண்டலங்களினால், **आढ्यं**–மிகவும் சோபிக்கிறதும், **मन्दस्मितं**–புன்சிரிப்புடன் கூடியதும், **मृगमद**–கஸ்தூரி திலகத்தினால், **उज्ज्वल**–மிகவும் பிரகாசிக்கிற, **फालदेश**–நெற்றி பிரதேசத்தோடு கூடியதுமான, **ललिता**–லலிதாதேவியினுடைய, **वदन-अरविन्दं**–முக பத்மத்தை, **प्रातः**-காலையில், **स्मरामि**-ஸ்மரிக்கிறேன்.

*தேவதைகளை முகத்திலிருந்து பாதம் வரை வர்ணிப்பது ஒரு கிரமம். பாதத்திலிருந்து முகம் வரை வர்ணிப்பது மற்றொரு கிரமம். இந்த ஸ்தோத்திரத்தில் முதல் கிரமம் கைக்கொள்ளப் பட்டிருக்கிறது. பரதேவதையின் முகாரவிந்தத்திலுள்ள ஒவ்வொரு அம்சத்தின் அழகையும் ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துக்காட்டுகிறார். அவளுடைய முகம் தாமரை போல் பிரகாசிக்கிறது. அதிலுள்ள உதடுகள் கோவைப்பழம்போல் சிவந்திருக்கின்றன. அவள் நாசிகையில் உள்ள புல்லாக்கில் தொங்கும் பெரிய நல்முத்து பிரகாசமுள்ளது அவளுடைய கண்கள் காதுவரை நீண்டிருக்கின்றன. காதுகளிலும் நவரத்னங்கள் பதித்த குண்டலங்களை தரிக்கிறாள். பக்தர்களிடத்தில் விசேஷ அனுக்ரஹபுத்தியுடன் புன்சிரிப்புடன் விளங்குகிறாள். நெற்றியில் இட்டிருக்கும் கஸ்தூரி திலகமானது மிகவும் பிரகாசிக்கிறது. இவ்விதமாக ஸ்வபாவ சோபையுடன் அலங்கார சோபையும் சேரும் போது அவளுடைய மூர்த்தி காலையில் ஸ்மரணம் செய்வதற்கு அதி ரமணீயமாகவேயிருக்கும் என்பதைக் குறிக்கிறார்.* (1)

प्रातर्भजामि ललिताभुजकल्पवल्लीं
रत्नाङ्गुलीयलसदङ्गुलिपल्लवाढ्याम् ।
माणिक्यहेमवलयाङ्गदशोभमानां
[1] पुण्ड्रेक्षुचापकुसुमेषुसृणीर्दधानाम् ॥ २ ॥

1. 'पाशेक्षुचाप' என்று பாடம் இருக்கலாமென்று தோன்றுகிறது.

*ப்ராதர் பஜாமி லலிதா புஜகல்பவல்லீம்*
*ரத்நாங்குளீய லஸதங்குளி பல்லவாட்யாம் ।*
*மாணிக்ய ஹேம வலயாங்கத சோபமாநாம்*
*புண்ட்ரேக்ஷு சாப குஸுமேஷு ஸ்ருணீர்ததாநாம் ॥*

**रत्न**–ரத்னங்கள் பதித்த, **अंगुलीय**–மோதிரங்களால், **लसत्**–பிரகாசிக்கிற, **अंगुलि**–விரல்களாகிற, **पल्लव**–துளிர்களால், **आढ्यां**–சோபிக்கிறதும், **माणिक्य**–மாணிக்கம், **हेम**–தங்கம் இவைகளால் செய்யப்பட்ட, **वलय**–வளையல்கள், **अङ्गद**–தோள்வளைகள் இவைகளுடன், **शोभमानां** – சோபிக்கிறதும், **पुण्ड्र-इक्षु** – வெள்ளைக் கரும்பு ஆகிற, **चाप**–வில், **कुसुम**–புஷ்பமாகிற, **इषु**–அம்பு, **सृणीः**–அங்குசம் இவைகளை **दधानां**–தரித்துக்கொண்டிருக்கிறதுமான, **ललिता**–லலிதாம்பிகையின், **भुज**–புஜமாகிற, **कल्प-वल्ली**–கல்பகக்கொடியை, **प्रातः**–காலையில், **भजामि**–பஜிக்க

*தேவியையண்டினவர்களுக்கு வேண்டிய அபீஷ்டங்களையெல்லாம் கொடுத்தருளுவதற்கு அவள் ஸித்தமாயிருப்பதினால் அவளுடைய புஜம் கேட்டதையெல்லாம் கொடுக்கும் கல்பலதை போலிருப்பதாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அந்தக் கொடியில் தோன்றிப்பிரகாசிக்கும் துளிர்கள் தான் ரத்னங்கள் பதித்த மோதிரங்களுடன் கூடின மிருதுவான விரல்கள். அப்புஜங்களில் மணிக்கட்டுப் பிரதேசத்தில் வளையல்களும் தோள்பக்கம் தோள் வளைகளும் மாணிக்கம் இழைத்த தங்கத்தில் செய்ததாக பிரகாசிக்கின்றன. அவளுடைய கைகளில் ஒன்றில் கரும்பு வில்லையும் மற்றொன்றில் புஷ்பபாணத்தையும் மற்றொன்றில் அங்குசத்தையும் தரித்துக்கொண்டிருக்கிறாள். இங்கே சொல்லவில்லையானாலும் நான்காவது கையிலுள்ள பாசத்தையும் சேர்த்து கொள்ளவேண்டும். அந்த பாசம் என்பது ராகஸ்வரூபமென்றும், அங்குசமென்பது கோபஸ்வரூபமென்றும், மனஸே கரும்பு வில் என்றும், தன்மாத்திரைகள் என்ற ஸூக்ஷ்ம பூதங்களே அம்புகள் என்றும், லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.* (2)

प्रातर्नमामि ललिताचरणारविन्दं
भक्तेष्टदाननिरतं भवसिन्धुपोतम् ।

पद्मासनादिसुरनायकपूजनीयं
पद्माङ्कुशध्वजसुदर्शनलाञ्छनाढ्यम् ॥ ३ ॥

*ப்ராதர் நமாமி லலிதாசரணாரவிந்தம்*
*பக்தேஷ்டதான நிரதம் பவஸிந்துபோதம் ।*
*பத்மாஸநாதி ஸுரநாயக பூஜநீயம்*
*பத்மாங்குஶ த்வஜ ஸுதர்ஶநலாஞ்சநாட்யம் ॥*

**भक्त**–பக்தர்களால், **इष्ट**–விரும்பப்படுவதையெல்லாம், **दान**–கொடுப்பதில், **निरतं**–எப்பொழுதும் ஈடுபட்டதாகவும், **भव**–ஸம்ஸார மாகிற, **सिन्धु**–ஸமுத்திரத்தைத் தாண்டுவதற்கு, **पोतं**–ஓடமாகவும், **पद्मासन**–தாமரையில் வீற்றிருக்கும் பிரஹ்மா, **आदि**–முதலான, **सुरनायक**–தேவ சிரேஷ்டர்களால், **पूजनीयं**–பூஜிக்கத்தக்கதாகவும், **पद्म**–பத்மம், **अंकुश**–அங்குசம், **ध्वज**–த்வஜம், **सुदर्शन**–சக்கிரம் இவைகளாகிய, **लाञ्छन**–ரேகைகளுடன், **आढ्यं**–நிறைந்துபிரகாசிக் கிறதாகவும் உள்ள, **ललिता**–லலிதாதேவியின், **चरण**–பாதங்களாகிற, **अरविन्दं**–தாமரையை, **प्रातः**–காலையில், **नमामि**–நமஸ்கரிக்கிறேன்.

*அம்பிகையின் பாதாரவிந்தத்தைஸேவிக்கும் பக்தர்களுடைய ஸகலவிதமான ஐஹிக ஆமுஷ்மிக சிரேயஸுகளையும் கொடுக்க அவளுக்கு முடியுமென்பது மாத்திரமில்லை. ஸம்ஸாரக்கடலையே தாண்டிவைத்து மோக்ஷ பதவியைக் கொடுக்க வல்லமையுள்ளது அப்பாத ஸேவை. ஜகத்தின் ஸ்ருஷ்டிகர்த்தா பிரஹ்மா முதல் ஸகல தேவர்களும் அவளுடைய பாதத்தை பூஜித்து வருகிறார்கள். அவளே ஸர்வோத்தமையான தேவதை என்று காட்டக்கூடிய ஸாமுத்திரிகா லக்ஷணங்கள அவள் பாதத்தில் அமைந்திருக் கின்றன. பத்மரேகை, அங்குசரேகை, த்வஜரேகை, சக்கிர ரேகையெல்லாம் அங்கு விளங்குகின்றன.* (3)

*இவ்விதமாக பரதேவதையின் உபாஸ்யமான ரூபத்தை மூன்று சுலோகங்களால் வர்ணித்துவிட்டு அவளுடைய தாத்விக ஸ்வரூபத்தை மேலால் காட்டுகிறார்:—*

प्रातः स्तुवे परशिवां ललितां भवानीं
त्रय्यन्तवेद्यविभवां करुणानवद्याम् ।

विश्वस्य सृष्टिविलयस्थितिहेतुभूतां
विद्येश्वरीं निगमवाङ्मनसातिदूराम् ॥ ४ ॥

*ப்ராத: ஸ்துவே பரஶிவாம் லலிதாம் பவாநீம்*
*த்ரய்யந்த வேத்ய விபவாம் கருணாநவத்யாம் ।*
*விச்வஸ்ய ஸ்ருஷ்டி விலய ஸ்திதி ஹேது பூதாம்*
*வித்யேச்வரீம் நிகம வாங்மநஸாதி தூராம் ॥*

**पर**-ஸர்வோத்க்ருஷ்டமான, **शिवां** – மங்களஸ்வரூபிணியாயும், **भवानीं**-பரமேசுவரருடைய பத்னியாயும், **त्रय्यन्त**-வேதங்களின் கடைசி பாகங்களாகிய உபநிஷத்துக்களாலேயே, **वेद्य**-அறியக்கூடிய, **विभवां**-மஹிமையுடையவளாயும், **करुणा**-கருணையில், **अनवद्यां**-எவ்வித குறையும் சொல்ல முடியாதவளாயும், **विश्वस्य**-பிரபஞ்சத்தினுடைய, **सृष्टि**-உத்பத்தி, **विलय**-லயம், **स्थिति**-இருப்பு இவைகளுக்கு, **हेतु-भूतां**-காரணமாக இருக்கிறவளாயும், **विद्या**-ஸகல வித்யைகளுக்கும் **ईश्वरीं**-அதிதேவதையாயும், **निगम**-வேதங்களுக்கும், **वाक्**-வாக்குக்கும் **मनस**-மனஸிற்கும், **अतिदूरां**-எட்டாமல் வெகு தூரத்தில் இருப்பவளாயும் உள்ள, **ललितां**-லலிதாம்பிகையை, **प्रात:**-காலையில் **स्तुवे**-ஸ்துதி செய்கிறேன்.

*பராசக்தியான லலிதாம்பிகையை பரப்ரஹ்ம மஹிஷீயென்று வேறு இடத்தில் வர்ணித்திருக்கிறதை அனுஸரித்து இங்கே காமேசுவரர் என்ற அவஸரத்தில் பரமசிவனின் பத்னியென்ற முறையில் பரசிவை என்று சொல்லப்படுகிறாள். ஸர்வமங்களா என்றும் அவளுக்குப் பெயர் உண்டு. அவளுடைய மாஹாத்மியத்தை பிரத்யக்ஷம் அனுமானம் முதலிய லௌகிக பிரமாணங்கள் மூலமாய் அறியமுடியாது. உபநிஷத்துக்கள் மூலமாயும் ஸாக்ஷாத்தாக அறியமுடியாமல் போனாலும் இது இல்லை இது இல்லை யென்று மற்றவையெல்லாம் தள்ளி ஒருவாறு அறிந்து கொள்ளலாம். ஜகத்தை ஸ்ருஷ்டி செய்வது பிரஹ்மா, ஸம்ரக்ஷிப்பது விஷ்ணு, உபஸம்ஹரிப்பது ருத்ரர், என்று ஸாதாரணமாகச் சொல்லப்படுகிறபோதிலும் இந்த அம்பிகை தான் அந்த தேவதைகளுக்கு சக்தியைக் கொடுப்பதால் வாஸ்தவத்தில் இவளே ஸ்ருஷ்டி ஸ்திதி ப்ரளயகாரணமாகிறாள். சுத்த ப்ரஹ்ம சைதன்யத்தை அறிவிக்கும் பிரஹ்ம*

வித்தையோ, மற்றும் வேறு விஷயங்களை அறிவிக்கும் ரிக்வேதாதி ஸகல அபரவித்தைகளோ எல்லாவற்றிற்கும் ஞானஸ்வரூபிணியான இவளே அதிதேவதை. அவளுடைய ஸ்வரூபத்தை நேர்முகமாகச் சொல்வதற்கு வேதமே சக்தியற்றிருக்கையில் லௌகிகமான வாக்கோ மனஸோ எப்படி அதை எட்டமுடியும்? எட்ட முடியாமல் போனாலும் அவளுடைய அபாரமான கருணையை நாம் ஸம்பாதித்துக்கொண்டு க்ஷேமத்தை அடையலாம். ஸ்தோத்ரம் செய்ய சக்தியற்று தியானம் செய்ய முடியாமல் இருந்தாலும்கூட அவளுடைய ப்ரஸித்தமான நாமாக்களை உச்சரிக்கலாமே என்று அடுத்தசுலோகத்தில் அந்த ஸாதனத்தை எடுத்துக்காட்டுகிறார். (4)

प्रातर्वदामि ललिते तव पुण्यनाम
कामेश्वरीति कमलेति महेश्वरीति ।
श्रीशांभवीति जगतां जननी परेति
वाग्देवतेति वचसा त्रिपुरेश्वरीति ॥ ५ ॥

ப்ராதர் வதாமி லலிதே தவ புண்யநாம
காமேச்வரீதி கமலேதி மஹேச்வரீதி ।
ஸ்ரீ ஶாம்பவீதி ஜகதாம் ஜநநீ பரேதி
வாக்தேவதேதி வசஸா த்ரிபுரேச்வரீதி ॥

**कामेश्वरी**—காமேசுவரருக்கு பத்னியாக காமேசுவரீ, **इति**—என்றும், **कमला**-ஹ்ருதயகமலத்தில் வீற்றிருக்கும் மஹாலக்ஷ்மியென்ற முறையில் கமலா, **इति**—என்றும், **महेश्वरी**—மஹேசுவரருடைய சக்தி யென்ற பாவனையில் மஹேசுவரி, **इति**—என்றும், **श्रीशांभवी**—ஸர்வைசுவர்யமும் பொருந்திய சம்புவின் சக்தியென்ற முறையில் ஸ்ரீசாம்பவீ, **इति**—என்றும், **जगतां**—ஸகல உலகங்களையும் உண்டுபண்ணின, **परा**—உத்தமமான, **जननी**-தாயார், **इति**—என்றும், **वाग्देवता**—ப்ரஹ்மாவின் சக்திரூபிணி யென்ற முறையில் மஹா ஸரஸ்வதியான வாக்குகளுக்கெல்லாம் அதிதேவதை, **इति**—என்றும், **त्रिपुरेश्वरी**—முப்புரங்களையும் ஸம்ஹரித்த பரமசிவனின் சக்தி என்ற காரணத்தினால் த்ரிபுரேச்வரி, **इति**-என்றும், **ललिते**—ஹே லலிதே, **तव**-உன்னுடைய, **पुण्य-नाम**—

புண்யமான நாமாவை, **वचसा**–வாக்கினால், **प्रातः**–காலையில், **वदामि**–சொல்கிறேன்,

*பரதத்வத்தின் சக்தியான மாயை ஒன்றாகவேயிருந்த போதிலும் ஸத்வ-ரஜஸ்.தமோ குணங்களில் தாரதம்யம் ஏற்படும் போது அவளே துர்க்கா, லக்ஷ்மீ, ஸரஸ்வதியாகத் தனித்தனி யாக தோற்றமளிக்கிறாள். அவ்வொவ்வொரு அம்சத்திலும் ஒவ்வொரு ஸமயம் தனித்தனி அவஸரங்களில் தனித்தனி அவாந் தர சக்திகளை ஆவிர்பாவம் செய்யும்போது அவளுக்கே தனித் தனி ரூபங்களும் நாமங்களும் ஏற்படுகின்றன. அவளுடைய சக்தி எப்படி அனந்தமோ அதேமாதிரி அவள் ரூபங்களும் அனந்தமே யாகும். அப்படியே நாமங்களும் அனந்தமேயாகும். அவைகளில் எதை வாக்கினால் உச்சரித்தாலும் அம்பிகையையே ஸ்தோத்திரம் செய்ததாக ஆகுமானதினால் சில முக்கிய நாமாக்கள் மாத்திரம் இந்த சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன, ஸர்வ ஜகந் நியந்தாக்களாயும் காரணேசர்களாகவும் சொல்லப்படுகிற பிரஹ்மா, விஷ்ணு, ருத்ரர் ஆகிய த்ரிமூர்த்திகளும் தங்கள் தங்கள் செயல்களை செய்து வருகிறார்களென்பதும் பராசக்தி யான இவளுடைய ஸஹாயத்தினால்தான் என்பதே முக்கிய தாத்பர்யம்.* (5)

*இவ்விதமாக ரத்னங்கள் போலமைந்த ஐந்து சுலோகங்களை யும் அனுஸந்தானம் செய்வதால் ஏற்படக்கூடிய மஹத்தான பலனை கடைசி சுலோகத்தில் எடுத்துச் சொல்லுகிறார்:—*

**यः श्लोकपञ्चकमिदं ललिताम्बिकायाः**
**सौभाग्यदं सुललितं पठति प्रभाते ।**
**तस्मै ददाति ललिता झटिति प्रसन्ना**
**विद्यां श्रियं विमलसौख्यमनन्तकीर्तिम् ॥ ६ ॥**

*ய: ச்லோக பஞ்சகமிதம் லலிதாம்பிகாயா:*
*ஸௌபாக்யதம் ஸுலலிதம் படதி ப்ரபாதே ।*
*தஸ்மை ததாதி லலிதா ஜடிதி ப்ரஸந்நா*
*வித்யாம் ச்ரியம் விமலஸௌக்யமநந்த கீர்த்திம் ॥*

**सु-ललितं**–மிக லலிதமாக அமைந்து, **सौभाग्यदं**–உத்தமமான பாக்யத்தைக்கொடுக்கக்கூடிய, **इदं**–இந்த, **ललिताम्बिकायाः**–லலிதா அம்பிகை விஷயமான, **श्लोकपञ्चकं**–ஐந்து சுலோகங்களையும், **यः**–எவன், **प्रभाते**–பொழுது விடியும் போது, **पठति**–சொல்கிருனே, **तस्मै**–அவனுக்கு, **ललिता**-லலிதாதேவியானவள், **झटिति**–உடனே, **प्रसन्ना**–பிரஸன்னேயாகி, **विद्यां**–வித்யையையும், **श्रियं**–ஸம்பத்தையும், **विमल-सौख्यं**–துக்கம் கலக்காத சுத்தமான ஸுகமென்ற மோக்ஷ பதவியையும், **अनन्तकीर्त्तिम्**-எல்லையற்ற கீர்த்தியையும், **ददाति**–கொடுக்கிருள்.

*ஸகலவிதமான புருஷார்த்தங்களையும் அம்பிகை கொடுப்பதற்கு ஸித்தமாயிருந்தபோதிலும் முன்சொன்ன ரீதியாய் கல்பகலதைபோல பக்தர்கள் எது எதை அபேக்ஷிக்கிருர்களோ அதையேதான் அவள் கொடுப்பாள். அம்பிகையை ஆராதிப்பவர்களுடைய பலவித வாஸனைகளுக்குத் தக்கபடியே அவர்களுடைய அபேக்ஷைகளும் இருக்குமாதலால் பலவிதமாக பலனை சொல்லும்படி ஏற்படுகிறது. அல்பமான எவ்வித பலனிலும் அபேக்ஷையில்லாமல் நித்யஸுகத்தையே அபேக்ஷிக்கும் பக்தருக்கு அதையும் கொடுக்க அவள் ஸித்தமாயிருக்கிருள். அதனலேயே அவளுக்கு புக்தி முக்தி ப்ரதாயினீ என்ற பெயரும் ஏற்பட்டிருக்கிறது. ஸர்வலோக ஜனனியான அம்பிகையிடம் அல்ப பலனை அபேக்ஷிப்பது உசிதமில்லை யென்பதே ஸ்ரீமத் ஆசார்யாரின் தாத்பர்யம். இந்த சுலோகத்தில் "எவன்" என்று பும்லிங்கசப்தம் உபயோகித்தபோதிலும் அது "எவள்" என்பதற்கும் உபலக்ஷணமாகும் அப்பொழுது "ஸௌபாக்யதம்" என்ற பதமானது "பர்த்தாவின் விசேஷ அபிமானத்திற்குப் பாத்திரமாகி தீர்க்கமான ஸௌமங்கல்யத்தை கொடுக்கக் கூடியது" என்று அர்த்தம் செய்துகொள்ளலாம்.* (6)

லலிதா பஞ்சரத்னம் முற்றும்

## २. गौरीदशकम् ॥

## கௌரீ தசகம்

[காலையில் எழுந்திருந்தவுடன் பராசக்தியை லலிதாம்பிகை என்ற அவஸரத்தில் தியானம் செய்து ஸ்மரிக்கவேண்டியதற்காக லலிதா பஞ்சரத்னம் என்று ஐந்து சுலோகங்களை அனுக்ரஹித்த ஸ்ரீமத் ஆசார்யாள் அந்த ஜகன்மாதாவையே கௌரீ என்ற அவஸரத்தில் காலையில் ஸ்மரிப்பதற்காக பத்து சுலோகங்கள் அனுக்ரஹித்துக் கொடுத்திருக்கிறார்கள். அவளுடைய ரூப ஸௌந்தர்யத்தை வர்ணிப்பதுடன் அவளை வெளிப்பிரபஞ்சத்திலும் நம் தேஹத்திலுமே உபாஸிக்கவேண்டிய கிரமத்தையும் அவளுடைய தாத்விகமான ஸ்வரூபத்தையும் எடுத்துக்காட்டி அவளுடைய ஸ்மரணத்தினால் ஏற்படக்கூடிய உத்தமமான பலனை கடைசி 11வது சுலோகத்தில் குறிப்பிடுகிறார்.]

लीलालब्धस्थापितलुप्ताखिललोकां
लोकातीतैर्योगिभिरन्तश्चिरमृग्याम् ।
बालादित्यश्रेणिसमानद्युतिपुञ्जां
गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ १ ॥

லீலாலப்த ஸ்தாபித லுப்தாகில லோகாம்
லோகாதீதைர் யோகிபிரந்தச்சிரம்ருக்யாம் ।
பாலாதித்ய ச்ரேணி ஸமாந த்யுதிபுஞ்ஜாம்
கௌரீமம்பாமம்புருஹாக்ஷீ மஹமீடே ॥

**लीला**-விளையாட்டாக, **लब्ध [आरब्ध]**-உண்டாக்கி, **स्थापित**-இருக்கும்படி செய்து, **लुप्त**-உபஸம்ஹாரம் செய்யப்படும், **अखिल**-ஸகலமான, **लोकां**-உலகங்களையுடையவளாயும், **लोकातीतैः**-உலகங்களுக்கெல்லாம் மேல்போன, **योगिभिः**-யோகிகளால், **अन्तः**-தங்களுக்குள்ளே, **चिरमृग्यां**-வெகுகாலம் தேடத்தகுந்தவளாயும், **बालादित्य**-இளம் ஸூரியன்களுடைய, **श्रेणि**-வரிசைகளுக்கு, **समान**-ஸமானமான **द्युतिपुञ्जां**-பிரகாசக் கூட்டத்துடன் கூடியவளாயும், **अम्बुरुहाक्षीं**-கமலம் போல் கண்களையுடையவளாயும் உள்ள, **अम्बां**-தாயாரான, **गौरीं**-கௌரியை, **अहं**-நான், **ईडे**-ஸ்துதிக்கிறேன்.

எல்லா உலகங்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி லயம் எல்லாம் அம்பிகையினுலேயே செய்யப்படுகிறது. இவ்வளவு பெரிய கார்யம் செய்வது அவளுக்கு சிரமமில்லையாவென்றால் அவளுடைய ஸங்கல்ப மாத்திரத்தினுலேயே எல்லாவற்றையும் அவள் நடத்துவதால் இது அவளுக்கு ஒரு லீலையே தவிர வேறில்லை. இவ்வித மஹிமையுள்ளவளை ஸாமான்யமாக ஸாக்ஷாத்காரம் செய்வது ஸாத்தியமில்லைதான். ஆனல் இஹலோகததிலோ பரலோகங்களிலோ எவ்வித ஆசையுமற்று யோகநிஷ்டையில் இருந்து தனக்குள்ளேயே அவளை வெகு நாட்களாகத் தேடிவரும் பெரியோர்களுக்கு அறியக்கூடியவளாக ஆகலாம். அவ்விதம் தனக்குள்ளேயே தேடுவதற்கு சக்தியற்றவர்களை அனுக்ரஹிப்பதற்காகவே அவள் பல பாலஸூர்யன்களுடைய பிரகாசத்துடன் தியானத்திற்குரிய ருபத்துடன் விளங்குகிருள். அவ்விதமான ருபத்தை தரிக்கும்போது அவளை அழகிய தாமரைக்கண்களுடன் கூடிய தாயாக அனுஸந்தானம் செய்து ஆராதிக்கமுடியும். (1)

இவ்விதம் அவள் ருபம் தரித்தபோதிலும் அவளுடைய வாஸ்தவமான ஸ்வருபம் அந்த யோகிகளுக்குத்தான் நன்கு விளங்கும். அப்படி விளங்கும்படி அவர்கள் அவலம்பிக்கும் ஸாதனங்களையும் அவர்கள் அறிந்துகொள்ளும் வாஸ்தவ ஸ்வருபத்தையும் அடுத்த சுலோகம் விஸ்தரிக்கிறது :—

प्रत्याहारध्यानसमाधिस्थितिभाजां
नित्यं चित्ते निर्वृतिकाष्ठां कलयन्तीम् ।
सत्यज्ञानानन्दमयीं तां तनुरूपां
गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ २ ॥

ப்ரத்யாஹார த்யாந ஸமாதிஸ்திதிபாஜாம்
நித்யம் சித்தே நிர்வ்ருதிகாஷ்டாம் கலயந்தீம் ।
ஸத்யஞானநந்தமயீம் தாம் தநுருபாம்
கௌரீமம்பாமம்புருஹாக்ஷீமஹமீடே ॥

**प्रत्याहार**—வெளிவிஷயங்களிலிருந்து மனஸைத்திருப்பி இழுத்து, **ध्यान**—ஏகாக்ரமாக தியானம் செய்து, **समाधि**—சித்த விருத்தியேயில்லாத ஸமாதி நிலையில், **स्थिति**—ஸ்திரமாயிருப்பதை, **भाजां**—அடைந்தவர்

களுடைய, **चित्ते**-சித்தத்தில், **नित्यं** எப்பொழுதும், **निर्वृति**-ஆனந்தத்தின், **काष्ठां**-எல்லையை, **कलयन्ती**-[illegible]பவளாயும், **सत्य**-என்றும் இருக்கும் தன்மை, **ज्ञान**-அறிவாகவேயிருத்தல், **आनन्द-मयीं**-ஆனந்தமாயிருத்தல் என்கிற ஸ்வபாவத்துடன் கூடினவளாயும், **तनुरूपां**-வெகு ஸூக்ஷ்மமான ஸ்வரூபத்தையுடையவளாயும், **अम्बुरुहाक्षीं**-தாமரைக் கண்களையுடையவளாயும் இருக்கிற, **तां**-அந்த, **अम्बां**-தாயாரான, **गौरीं**-கௌரியை, **अहं**-நான், **ईडे**-ஸ்துதிசெய்கிறேன்.

*முதல் சுலோகத்தில் யோகிகள் ஸகலவிதமான உலக ஆசைகளையும் விட்டு அம்பிகையை தனக்குள்ளேயே தேடுகிறார்கள் என்று சொல்லப்பட்டது எப்படித் தேடுகிறார்கள். தேடியடைந்தால் என்ன கிடைக்கிறது என்பதை இந்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் விவரிக்கிறார். யோகாப்பியாஸக் கிரமத்தில் யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, தியானம், ஸமாதி என்று எட்டு அங்கங்கள் உண்டு இவைகளில் முதல் நான்கும் சித்தத்தின் ஏகாக்ரத்திற்கு வெளி ஸாதனங்களாகவிருப்பதால் அவைகள் அவசியம் இருந்தேதீருமென்ற நியாயத்தினால் அவைகளை இங்கே குறிப்பிடவில்லை. உள்ளே தேடுகிறார்களென்று சொன்னபடியால் அவைகளை ஸித்தமாக வைத்துக்கொண்டு பிரத்யாஹாரத்தை ஸ்ரீமத் ஆசார்யார் குறிப்பிட்டிருக்கிறார். வெளிப்பதார்த்தங்களில் மனஸ் போகாமல் உள்ளே இழுத்து தியானத்தில் ஈடுபடச் செய்யவேண்டுமானால் தாரணை, நிலையில் நிறுத்துவதும் தானே ஏற்படுமானதினால் அதையும் தனியாகக் குறிப்பிட அவசியமில்லை. யோகாப்பியாஸம் செய்து விருத்தி நிரோதம் செய்கிறவர்களுக்கு ஸ்வரூபானந்தம் எப்படி ஏற்படுகிறதென்பதை யோகரீதியாகவே 5வது சுலோகத்தில் காட்டப்போகிறார். இப்பொழுது ஆனந்தானுபவம் ஏற்படுகிறதென்று மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஆனந்தம் விஷயானந்தம் போலல்ல. அம்பிகையின் ஸ்வரூபானந்தமே அது. அவள் ஸச்சிதானந்த ஸ்வரூபிணீ. இதுவே அவளுடைய வாஸ்தவமான ஸ்வரூபம்.* (2)

*ஆனாலும் அவ்விதம் யோக மார்க்கத்தில் பிரவேசிக்க முடியாதவர்களுக்கும் அனுக்ரஹம் செய்வதற்காக வெகு அழகான ஸகுணமூர்த்தியாக அவளே தோன்றுகிறாள் என்பதைக் காட்டுகிறார்:—*

चन्द्रापीडानन्दितमन्दस्मितवक्त्रां
चन्द्रापीडालंकृतनीलालकभाराम् ।
इन्द्रोपेन्द्राद्यर्चितपादाम्बुजयुग्मां
गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ३ ॥

*சந்த்ராபீடாநந்தித மந்தஸ்மித வக்த்ராம்*
*சந்த்ராபீடாலங்க்ருத நீலாளக பாராம் ।*
*இந்த்ரோபேந்த்ராத்யர்ச்சித பாதாம்புஜயுக்மாம்*
*கௌரீமம்பாமம்புருஹாக்ஷீமஹமீடே ॥*

**चन्द्र**-சந்திரனை, **आपीड**-சிரஸில் ஆபரணமாயுள்ள பரமேசுவரரால், **आनन्दित**-நன்கு ஆனந்திக்கப்பட்ட, **मन्दस्मित**-புன்சிரிப்போடுகூடிய **वक्त्रां**-முகத்தையுடையவளும், **चन्द्र**-சந்திரனாகிற (அல்லது சந்திரன் போலுள்ள), **आपीड**-ஆபரணத்தினால், **अलङ्कृत**-அலங்காரம் செய்யப் பட்ட, **नील**-கருப்பாயுள்ள, **अलक-भारां**-கட்டுக்கேசங்களையுடைய வளும், **इन्द्र**-தேவேந்திரன், **उपेन्द्र**-ஸ்ரீமந்நாராயணன், **आदि**-முதலான வர்களால், **अर्चित**-பூஜை செய்யப்பட்ட, **पाद**-கால்களாகிற, **अम्बुज-युग्मां**-இரண்டு பத்மங்களையுடையவளும், **अम्बुरुहाक्षीं**-தாமரைக் கண்களையுடையவளுமான, **अम्बां**-தாயாரான, **गौरीं**-கௌரியை, **अहं**-நான், **ईडे**-ஸ்துதிக்கிறேன்.

*சந்திரசேகரரான மஹேசுவரர் ஸ்வயமாகவே ஆனந்தரூபியா யிருந்தும் அவருக்கும் விசேஷ ஆனந்தத்தை அம்பிகையின் முகத்தில் உள்ள மந்தஸ்மிதம் கொடுக்கிறது. அவளுடைய மந்தஸ்மிதமாகிற ஒளிப்பிரவாஹத்தில் அவருடைய மனஸ் முழ்கி யிருக்கிறது.* **मन्दस्मितप्रभापूरमज्जत्कामेशमानसा** *என்று லலிதா ஸஹஸ்ரநாமம் வர்ணிக்கிறது. ஸ்திரீகள் சிரஸ்ஸிற்கு அலங்கார மாக ஸூர்யப்பிரபை சந்திரப்பிரபை என்ற நகைகளை தரிப்பதுண்டு. அப்படியே அம்பாளும் தரிக்கிறாள். அல்லது அஷ்டமீ சந்திரனால் பிரகாசிக்கிற முன் சிரோபாகமுடையவள்.* **अष्टमीचन्द्रविभ्राजदलिकस्थलशोभिता** *என்று லலிதா ஸஹஸ்ர நாமத்தில் சொல்லியபடி சந்திரனையே தரிக்கிறாள் என்றும் வைத்துக்கொள்ளலாம். அவளுடைய கிருபையை வேண்டி இந்திரன், நாராயணர் முதலான தேவர்கள் அவளுடைய பாத்ர*

விந்தங்களை அர்ச்சித்து வருகிறார்கள். இவ்வித மஹிமை பெற்ற அம்பிகையை நானும் எனக்குத் தகுந்தவாறு ஸ்தோத்திரம் செய்கிறேன். (3)

आदिक्षान्तामक्षरमूर्त्या विलसन्तीं
भूते भूते भूतकदम्बप्रसवित्रीम् ।
शब्दब्रह्मानन्दमयीं तां तडिदाभां
गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ४ ॥

*ஆதி க்ஷாந்தாமக்ஷர மூர்த்யா விலஸந்தீம்*
*பூதே பூதே பூதகதம்ப ப்ரஸவித்ரீம் l*
*ஶப்த ப்ரஹ்மாநந்தமயீம் தாம் தடிதாபாம்*
*கௌரீமம்பாமம்புருஹாக்ஷீ மஹமீடே ॥*

**अ आदि**–அகாரம் முதல், **क्ष-अन्तां**-க்ஷகாரம் முடியவளாக, **अक्षर**-அக்ஷரங்களேயே, **मूर्त्या**–உருவமாக அடைந்து **विलसन्तीं**–பிரகாசிக்கிற வளாயும், **भूते भूते**–ஒவ்வொரு ஸ்ருஷ்டி காலத்திலும், **भूत**–பஞ்ச மஹா பூதங்களின் (அல்லது பிராணி வர்க்கங்களின்) **कदम्ब**–ஸமூஹங்களை, **प्रसवित्रीं**–உண்டுபண்ணுகிறவளாயும், **शब्द**–சப்தஸ்வரூபமான, **ब्रह्म**–பிரஹ்மமாய், **आनन्दमयीं**–ஆனந்தம் நிறைந்தவளாயும், **तडित् आभां**–மின்னல் போல் பிரகாசிக்கிறவளாயும், **अम्बुरुह-अक्षीं**–தாமரைக் கண்ணுள்ளவளாயுமுள்ள, **अम्बां**–தாயாரான, **गौरीं**-கௌரியை, **अहं**–நான்,

*பிரபஞ்ச ஸ்ருஷ்டிக் கிரமத்தில் அவ்யக்தமாயிருந்த மாயா சக்தி ஆவிர்பாவமடையும்போது முதலில் சப்தரூபமாக பரிணமித்து பிறகே அர்த்தரூபமாய் பரிணமிக்கிறாள். அதாவது நாமத்தை உச்சரித்துக்கொண்டு ஒவ்வொரு ரூபத்தையும் ஸ்ருஷ்டிக்கிறார் என்று சொல்லப்படுவதால் அகாரம் முதல் க்ஷகாரம் வரையுள்ள எல்லா அக்ஷரங்களுமே அம்பிகையின் ஸ்வரூபமேயாகும். அக்ஷராத்மிகையான மாயா சக்தியே சப்தப் பிரஹ்மம் எனப்படும். அதன் பிறகே ஸ்தூலமான பஞ்ச பூதங்களாகிய பிருத்வீ அப் தேஜோ வாயு ஆகாசங்களும் அவை களால் ஆன உலகங்களும் ஸகல பிராணிகளுடைய சரீரங்களும் ஸ்ருஷ்டிக்கப்படுகின்றன. எவ்விதம் தாயாரின் கர்ப்பத்திலிருந்து*

வேருகத் தெரியாமலிருந்த சிசு பின்னல் பிரஸவித்த பிறகு தனியாக வியக்தமாகத் தெரிகிறதோ, அப்படியே பிரளய காலத்தில் காரணமான மாயையில் அடங்கியிருந்த நாமரூபாத்மக மான ஜகத் ஸ்ருஷ்டி காலத்தில் வியக்தமாகத் தெரிகிறது. இவ் விஷயம் 7வது சுலோகத்திலும் சொல்லப்படுகிறது. மாயா சக்தி சக்தனுகிய பகவானைத்தவிர வேறு இல்லாதபடியால் சக்தியும் பிரகாச ஸ்வருபமுள்ளது என்பதை மின்னல்போல் என்றும், ஸுக ஸ்வருபமுள்ளது என்பதை ஆனந்தமயீ என்றும் இங்கு குறிப்பிடப்பட்டிருக்கிறது. (4)

ஸர்வ ஜகத்திற்கும் ஆதாரமாய் ஸமஷ்டி ருபிணியாய் விளங்கும் பராசக்தியே வியஷ்டியான ஒவ்வொரு பிராணியின் சரீரத்திலும் இருந்து வருவதால் அவளை இங்கேயே ஸாக்ஷாத்கரிக்க முடியுமென்பதை அடுத்த சுலோகத்தில் காட்டு கிருர்.—

मूलाधारादुत्थितवीथ्या विधिरन्ध्रं
सौरं चान्द्रं व्याप्य विहारज्वलिताङ्गीम् ।
येयं सूक्ष्मात्सूक्ष्मतनुस्तां सुखरूपां
गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ५ ॥

மூலாதாராதுத்தித வீத்யா விதிரந்த்ரம்
ஸௌரம் சாந்த்ரம் வ்யாப்ய விஹார ஜ்வலிதாங்கீம் ।
யேயம் ஸூக்ஷ்மாத் ஸூக்ஷ்ம தநுஸ்தாம் ஸுகரூபாம்
கௌரீமம்பாமம்புருஹாக்ஷீ மஹமீடே

**या**—எந்த, **इयं**—இவள், **सूक्ष्मात्**—ஸூக்ஷ்மமான வஸ்துவைவிட, **सूक्ष्मतनुः**—ஸூக்ஷ்மமான ருபத்துடன் இருக்கிருளோ, **तां**—அந்த, **सुख-रूपां**—ஆனந்தஸ்வருபிணியாயும், **मूलाधारात्**-மூலாதார சக்ரத்திலிருந்து **उत्थित**—மேல் செல்லும், **वीथ्या**—வழியாக, **विधिरन्ध्रं**—பிரஹ்ம-ரந்திரத்தையும், **सौरं**—ஸூர்ய நாடியான பிங்களையையும், **चान्द्रं**—சந்திர நாடியான இளையையும், **व्याप्य**—வியாபித்து, **विहार**—ஸந்தோஷமாய், ஸஞ்சரிப்பதினல், **ज्वलित**—மிகவும் பிரகாசிக்கிற, **अङ्गीं**—சரீரத்தோடு கூடியவளாயும், **अम्बुरुहाक्षीं**—தாமரைக்கண்ணுள்ளவளாயுமுள்ள, **अम्बां**—தாயாரான, **गौरीं**-கௌரியை, **अहं**—நான், **ईडे**—ஸ்துதிக்கிறேன்.

பராசக்தியானவள் பிராணிகளின் சரீரத்தில் மூலாதாரம் என்கிற சக்கிரத்தில் குண்டலமிட்டு ஸர்ப்பம்போல் தூங்குகிற மாதிரி இருந்து வருகிறுள் என்றும் அவளை யோகாக்கினியால் எழுப்பிவிட்டால் அவள் அங்கிருந்து மெள்ள மெள்ள ஸுஷும்நா நாடிவழியாக ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி ஆக்ஞையாகிய ஐந்து சக்கிரங்களையும் தாண்டிக்கொண்டு உச்சந் தலையிலுள்ள ஸஹஸ்ரார பத்மம் என்று சொல்லப்படுகிற பிரஹ்மரந்திரத்தில் போய்ச்சேர்ந்தால் அங்கேயிருந்து அமிருதப் பெருக்கு ஏற்பட்டு எல்லா நாடிகளிலும் வியாபித்து நிரதிசயமான ஆனந்தஸ்பூர்த்தி ஏற்படுகிறதென்று சாஸ்திரம் சொல்லியபடி யோகிகள் அனுபவிக்கிருர்கள். அந்த ரீதியே இந்தசுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. (5)

முதலாவது சுலோகத்திலும் 4வது சுலோகத்திலும் பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டி செய்து ஸம்ரக்ஷித்து உபஸம்ஹாரம் செய்வதெல்லாம் பரதேவதையென்று சொல்லியிருக்கிறதே, உபநிஷத்துக்களிலோ பிரஹ்ம ஸூத்ரம் முதலான பிரமாண கிரந்தங்களிலோ பிரஹ்மத்தையல்லவா ஜகத்காரணமென்று சொல்லப்பட்டிருக்கிறது, என்ற ஸந்தேகம் வரக்கூடியதால் அதை நிவ்ருத்தி செய்வதற்காக அப்பரதேவதை பரமாத்மாவின் சக்தியாயிருப்பதால் அவருக்கு அதீனமாய்த்தான் ஜகத் ஸ்ருஷ்டியாதிகளைச் செய்கிறுளே தவிர ஸ்வதந்திரமாகச் செய்யவில்லை என்பதை மேலால் காட்டுகிறுர்:—

नित्यः शुद्धो निष्कल एको जगदीशः
साक्षी यस्याः सर्गविधौ संहरणे च ।
विश्वत्राणक्रीडनलोलां शिवपत्नीं
गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ६ ॥

*நித்ய: ஶுத்த: நிஷ்கல ஏகோ ஜகதீஶ:*
*ஸாக்ஷீ யஸ்யா: ஸர்கவிதௌ ஸம்ஹரணே ச ।*
*விச்வத்ராண க்ரீடந லோலாம் ஶிவபத்நீம்*
*கௌரீமம்பாமம்புருஹாக்ஷீமஹமீடே ॥*

**जगदीशः**–பிரபஞ்சத்திற்கெல்லாம் ஈசுவரனுயுள்ள பரமாத்மா, **नित्यः**–சாசுவதராய், **शुद्धः**–சுத்தராய், **निष्कलः**-அமசமற்றவராய், **एकः**-

ஒருவராய் இருந்துகொண்டு, **यस्याः**–எவளுடைய, **सर्गविधौ**–ஸ்ருஷ்டி செய்யும் முறையிலும், **संहरणे च**–ஸம்ஹாரம் செய்வதிலும், **साक्षी**–ஸாக்ஷியாக மாத்திரம் இருக்கிறாரோ அந்த, **विश्वत्राण**–உலகத்தை காப்பாற்றுவதான, **क्रीडन**–விளையாட்டில், **लोलां**–ஆசையுள்ளவளாயும், **शिवपत्नीं**–பரமேசுவரருடைய பத்னியாயும், **अम्बुरुहाक्षीं**–தாமரை கண்ணுடையவளாயும் இருக்கிற, **अम्बां**–தாயாரான, **गौरीं**–கௌரியை, **अहं**–நான், **ईडे**–ஸ்துதிக்கிறேன்.

*பிரபஞ்சமானது ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களுக்கு உள்பட்டிருப்பதால் சாசுவதமல்ல. ஸுகம், துக்கம், நல்லது, கெட்டது என்றெல்லாமிருப்பதால் சுத்தமுமல்ல. தேவர்கள், மனுஷ்யர்கள் மிருகாதிகள் என்றவாறெல்லாம் பேதத்தையடைந்து அவர்களுடைய கர்மானுஸாரமாக பலவித போக ஸாதனங்களாகிய லோகங்களாகவும் இருந்து வருவதால் அம்சமற்றதுமாகாது. இவ்வளவு வேற்றுமையடைந்ததை ஒன்று என்றும் சொல்வதற்கிடமில்லை. இவ்விதமாக ஜகத்திற்குரிய தோஷங்கள் ஜகத்காரண பதார்த்தத்திலும் இருக்குமென்று சொன்னால் அதுவும் ஜகத்திலேயே சேர்ந்ததாக ஆகுமே தவிர ஜகத்திற்கு ஈசன் என்று சொல்லமுடியாது. ஆகையால் ஜகதீசனயிருப்பவர் நித்யராய் சுத்தராய் அம்சரஹிதராய் ஏகராய் இருப்பதே நியாயம். அவர் தன் ஸ்வபாவத்திலிருந்து கொஞ்சமேனும் நழுவாமலிருந்தபோதிலும் அவருடைய ஸந்நிதி விசேஷத்தினால் அவருடைய சக்தி சேஷ்டித்து உலக வியாபாரங்களை செய்கிறாள். அவர் இருப்பதினாலேயே இந்த எல்லா வியாபாரங்களும் ஏற்படுகின்றன. காந்தக்கல் தானாக ஒன்றும் செய்யாமல் போனாலும் அதன் ஸமீபத்தில் போன இரும்பு ஊசி ஆடும். அவ்விதமே மாயா சக்தி செய்வதையெல்லாம் பகவான் ஸாக்ஷியாகவிருந்து பார்த்துக்கொண்டிருக்கிறார். அவள் பரதந்திரை என்பதைக் காட்ட அவளை பகவானின் பத்னியென்று சொல்லப்படுகிறது. (6)*

*பராசக்தி தான் ஏன் ஸ்ருஷ்டி செய்கிறாள் என்றால் ஸ்ருஷ்டி செய்வதால் அவளுக்காவது பகவானுக்காவது அடையவேண்டிய லாபம் இல்லையென்பது வாஸ்தவம். ஆனால் பிரளய காலத்தில் ஸகல ஜீவராசிகளும் ஆத்யந்திக நாசத்தையடையாமல் அவரவர்களுடைய கர்மபீஜங்களோடு காரணாவஸ்தையில் லயம் மாத்திரம் அடைந்திருப்பதினால் அந்த கர்மங்கள் பலன் கொடுக்கவேண்டிய காலம் ஏற்படும்போது ஜகத்தின் ஸ்ருஷ்டி அவசியமாகிறது.*

நாம் தூங்கிக்கொண்டு இருக்கும்போது நமக்குள் லயமாகி அடங்கியிருந்த கர்மாக்கள் பலனைக் கொடுப்பதற்காக நம்மை எழுப்பி விடுவதுபோல, ஜீவர்களுடைய கர்மாக்களே மாயையை சேஷ்டிக்கும்படி செய்கிறது. ஸ்ருஷ்டிக்கப்படும் உலகத்திலுள்ள எவ்வித தோஷங்களாலும் அவளும் கொஞ்சமேனும் பாதிக்கப் படாமல் ஆனந்தமாய் தன் நாதனுன பரமசிவனுடன் கைலாசத் தில் விஹரித்துக்கொண்டிருக்கிருள் என்பதைக் காட்டுகிருர்:—

यस्याः कुक्षौ लीनमखण्डं जगदण्डं
भूयो भूयः प्रादुरभूदुत्थितमेव ।
पत्या सार्धं तां रजताद्रौ विहरन्तीं
गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ७ ॥

*யஸ்யா: குக்ஷௌ லீநமகண்டம் ஜகதண்டம்*
*பூயோ பூய: ப்ராதுரபூதுத்திதமேவ ।*
*பத்யா ஸார்த்தம் தாம் ரஜதாத்ரௌ விஹரந்தீம்*
*கௌரீமம்பாமம்புருஹாக்ஷீமஹமீடே ॥*

**यस्याः**–எவளுடைய, **कुक्षौ**–உதரத்தில், **लीनं**–லயித்திருந்த, **अखण्डं**–துண்டுபடாத, **जगत्**–உலகமாகிற, **अण्डं**–முட்டையானது, **उत्थितं एव**-வெளிக்கிளம்பினதாகவே, **भूयो भूयः**-அடிக்கடி, **प्रादुरभूत्**-வியக்தமாக உண்டாயிற்ருே, **तां**–அந்த, **रजताद्रौ**–வெள்ளிமலையாகிற கைலாஸபர்வதத்தில், **पत्या सार्धं**–பதியுடன் கூட, **विहरन्तीं**–விஹாரம் செய்பவளாயும், **अम्बुरुहाक्षीं**–தாமரைக் கண்ணுள்ளவளாயும் உள்ள, **अम्बां**–தாயாரான, **गौरीं**–கௌரியை, **अहं**–நான், **ईडे**–ஸ்துதிக்கிறேன்.

உதரத்தில் கர்ப்பம் ஏற்பட்டால் அது கிரமப்படி வளர்ந்து வெளிப்படவேண்டிய ஸமயம் வந்தபோது அதை வெளிப் படுத்தாமல் எப்படி தாயாரால் இருக்க முடியாதோ அப்படியே தான் ஜீவர்களின் கர்ம பலன்கள் ஏற்பட்டு தீரவேண்டியதற்காக ஜகத்தின் ஸ்ருஷ்டியாதி கார்யங்களை ஜகன்மாதா செய்ய வேண்டியதாகவிருக்கிறது. இதனால் அவளுக்கு எவ்வித சிரமமாவது ஸுகதுக்காதி தோஷ ஸம்பந்தமாவது கிடையாத படியால் அவள் பகவானுடன் ஆனந்தமாகவே இருந்துவருகிருள்.

உலகத்தில் தாயார் வயிற்றிலுள்ள சிசு தாயாரைவிட வேறு ஜீவன். பிறந்த பிற்பாடு வேறு ஜீவன் தான் என்பது வியக்தமாகவே தெரிகிறது. ஜகத் அம்பாளின் கர்ப்பத்திலுள்ள முட்டை போல் தான் என்றால் ஜகத்திற்குத் தனியாக இருக்கும் தன்மை உண்டென்று ஏற்படக்கூடியதால் அதை நிராகரிப்பதற்காக அடுத்த சுலோகம்:—

यस्यामोतं प्रोतमशेषं मणिमाला
सूत्रे यद्वत्क्वापि चरं चाप्यचरं च ।
तामध्यात्मज्ञानपदव्या गमनीयां
गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ८ ॥

யஸ்யாமோதம் ப்ரோதமஶேஷம் மணிமாலா
ஸூத்ரே யத்வத் க்வாபி சரம் சாப்யசரம் ச ।
தாமத்யாத்ம ஞாநபதவ்யா கமநீயாம்
கௌரீமம்பாமம்புருஹாக்ஷீமஹமீடே ॥

**यद्वत्** – எவ்விதம், **मणिमाला**–ரதனங்களின் வரிசை, **सूत्रे**–கயிற்றில் இருக்கிறதோ அவ்விதம், **चरं च**–அசையும் பொருளும், **अचरं च अपि**–அசையாப்பொருளும், **क्वापि**–எங்கிருந்தாலும், **अशेषं**–பாக்கியன்னியில், **यस्यां**-எவளிடத்தில், **ओतं**–குறுக்கேயும், **प्रोतं**–நெடுகிலும் ஊடுருவியிருக்கின்றதோ, **तां**-அந்த, **अध्यात्म**-ஆத்மதத்வ விஷயமான, **ज्ञानपदव्या**–ஞான வழியாக, **गमनीयां**–அடையவேண்டியவளாயும், **अम्बुरुहाक्षीं**–தாமரைக்கண்ணுள்ளவளாயும உள்ள, **अम्बां**-தாயாரான **गौरीं**-கௌரியை, **अहं**–நான், **ईडे**–ஸ்துதிக்கிறேன்.

கயிற்றில் எப்படி மணிகள் கோர்க்கப்பட்டிருக்கின்றனவோ அதுபோல் என்பதினால் உலகம் உலைந்து சிதறிப்போகாமல் எல்லாவற்றையும் ஒன்றுசேர்த்து நிலைக்கும்படிச்செய்யும் தத்வம் அம்பிகை என்று ஏற்படுகிறது. ஆனால் அந்த திருஷ்டாந்தத்தில் கயிறு வேறு, மணிகள் வேறு என்றமாதிரி அம்பிகைக்கும் ஜகத்திற்கும் வேற்றுமையுண்டென்று நினைத்துவிடக்கூடாதென்பதற்காக நூல் எப்படி வஸ்திரத்தில் இப்படியும் அப்படியுமாக இருந்துகொண்டிருக்கின்றதோ, அதுபோலவே உலகத்தில் உள்ள ஸகல பதார்த்தங்களிலும் அம்பாள் வியாபித்திருக்கிறாள் என்கிறார். எப்படி வஸ்திரம் என்பதற்கு நூலைத் தவிர வேறு

ஸத்தை கிடையாதோ, எப்படி நூலை உருவிவிட்டால் வஸ்திரமே இல்லாமல் போய்விடுமோ, அதேமாதிரி ஜகத்திற்கு அம்பாளைத் தவிர்த்து ஸத்தை கிடையாது, அதிலிருந்து அம்பாளைப்பிரித்தால் ஜகத்தேயிராது, ஆகையால் ஜகத் என்பதே அம்பாளின் மாயிக மான தோற்றமே தவிர வேறில்லை. இவ்விஷயம் நன்கு அனுபவத்திற்கு வரவேண்டுமானால் வேதாந்த விசாரத்தில் இறங்கி சிரவண மனனாதிகளைச் செய்யவேண்டும் என்பதையும் இங்கே காட்டியிருக்கிறார். (8)

ஜகத்தின் ஸ்ருஷ்டி மிகப்பெரிய கார்யமாயிருப்பதால் அதற்கு பராசக்தி தேவையாயிருக்கலாம். ஸாமான்யமான உலக நடவடிக்கைகளுக்கு இங்குள்ள ஜீவர்களுடையவோ பதார்த்தங் களுடையவோ சக்தி போதாதாவென்றால் அந்த சக்தியும் அவளை சேர்ந்ததுதான். கல்லில் கெட்டியாயிருக்கும் சக்தி, ஜலத்தில் திரவமாயிருக்கும் சக்தி, அக்னியில் சுடும் சக்தி முதலிய எல்லா சக்திகளும் அவளுடையதே. அவளே தான் கல்லாகவும் ஜலமாகவும் அக்னியாகவும் மற்றும் பலவிதமாகவும் இருப்பவள். அப்படியே சேதனர்களும் அவர்களிடமுள்ள இச்சை, ஞானம், கிரியை முதலிய சக்திகளும் அவளேதான் **चिच्छक्तिश्चेतनारूपा, जडशक्तिर्जडात्मिका** என்று லலிதா ஸஹஸ்ரநாமத்தில் சொல்லிய படி ஸகலவிதமான சக்திகளும் அவளுடையவைகளே. அவளுடைய வியாப்தியில்லாமல் எதுவும் யாரும் சக்தியுள்ளவர் களாக இருக்கமுடியாது. அவள் ஸர்வமங்களரூபிணியாயிருந்து யார் யார் எப்படி எப்படி தன்னை ஆராதிக்கிறார்களோ அததற்குத் தக்கபடி பலன்களைக் கொடுக்க ஸித்தமாயிருக்கிறாள் என்பதைக்

**नानाकारैः शक्तिकदम्बैर्भुवनानि**
**व्याप्य स्वैरं क्रीडति येयं स्वयमेका ।**
**कल्याणीं तां कल्पलतामानतिभाजां**
**गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ ९ ॥**

நாநாகாரை:

வ்யாப்ய ஸ்வைரம் க்ரீடதி யேயம் ஸ்வயமேகா ।
கல்யாணீம் தாம் கல்பலதாமாநதிபாஜாம்
கௌரீமம்பாமம்புருஹாக்ஷீமஹமீடே ॥

**या**-எந்த, **इयं**-இவள், **स्वयं**-தான், **एका**-ஒருவளாயிருந்து கொண்டு, **नाना**-பலவித, **आकारैः**-ரூபங்களுள்ள, **शक्ति**-சக்தி களினுடைய, **कदम्बैः**-கூட்டங்களினால், **भुवनानि**-உலகங்களை, **व्याप्य**-வியாபித்துக்கொண்டு, **स्वैरं**-ஸ்வதந்திரமாக, **क्रीडति**-விளையாடு கிறாளோ, **तां**-அந்த, **कल्याणीं**-ஸர்வகல்யாண ரூபிணியாய், **आनति-भाजां**-நமஸ்காரம் செய்கிறவர்களுக்கு, **कल्पलतां**-கல்பலதை போல விரும்பினதையெல்லாம் கொடுக்கக் கூடியவளாய், **अम्बुरुहाक्षीं**-தாமரை நேத்திரமுள்ளவளாய் இருக்கும், **अम्बां**-தாயாரான, **गौरीं**-கௌரியை, **अहं**-நான், **ईडे**-ஸ்துதிக்கிறேன்.

*தன்னுடைய விபூதிகளினாலேயே ஸகல உலகங்களையும் வியாபித்துக்கொண்டு லீலையாகவே ஜகத்வியாபாரத்தை நடத்திக்கொண்டிருக்கிற அம்பிகையை அண்டினவர்களுக்கு ஸர்வ க்ஷேமமும் உண்டாகும். ஆனால், பக்தர்களுடைய கோரிக்கை க்ஷேமத்தில் மாத்திரம் என்பதில்லை, ஸுகத்தை அபேக்ஷிக்கிறதுபோலவே துக்க நிவிருத்தியையும் அபேக்ஷிப்பார்கள். வாஸ்தவத்தில் அந்த ஸுகமும் ஸம்பாதிக்கிற காலத்திலும், அனுபவ காலத்திலும் முடிந்த காலத்திலும், கவனித்துப் பார்த்தால் துக்கத்தையே கொடுக்கக்கூடியதாயிருப்பதால், அதை அபேக்ஷிப்பதும் உசிதமில்லைதான். இவ்விதமாக ஸுகத்தையடையவோ துக்கத்தை விலக்கவோ வேண்டுமென்ற எண்ணமே ராகத்தினாலும் துவேஷத்தினாலும் ஏற்படுகிறது. இவ்விரண்டுக்கும் காரணம் ஆசையென்பது. அதை நிவிருத்தி செய்துவிட்டால் தன்னைத்தவிர வேறு எந்த பதார்த்தத்திலும் ராகமோ, துவேஷமோ ஏற்படாது, ஸ்வரூப ஸுகமான நித்யானந்தம் தானாகவே பிரகாசிக்கும். அந்த ஆசையையும் அதனால் ஏற்படும் கஷ்டங்களையும் விலக்கிவிடுவதற்கும் அம்பிகையின் பாதாரவிந்தானுஸந்தானமேதான் ஸாதனம்.* (9)

**आशापाशक्लेशविनाशं विदधानां**
**पादाम्भोजध्यानपराणां पुरुषाणाम् ।**
**ईशामीशार्धाङ्गहरां तामभिरामां**
**गौरीमम्बामम्बुरुहाक्षीमहमीडे ॥ १० ॥**

*ஆஶா பாஶ க்லேஶ விநாஶம் விததாநாம்*
*பாதாம்போஜ த்யாநபராணும் புருஷாணும் |*
*ஈஶாமீஶார்த்தாங்கஹராம் தாமபிராமாம்*
*கௌரீமம்பாமம்புருஹாக்ஷீமஹமீடே ||*

**आशा**-ஆசையாகிய, **पाश**-கட்டினுல் ஏற்படும், **क्लेश**-கஷ்டங்களினுடைய, **विनाशं**-நாசத்தை, **पादाम्भोज**-பாதபத்மங்களின், **ध्यान**-த்யானத்தில், **पराणां**-ஈடுபட்டிருக்கும், **पुरुषाणां**-மனிதர்களுக்கு, **विदधानां**-செய்து கொடுப்பவளாயும், **ईशां**-பரமேசுவரியாயும், **ईश**-பரமேசுவருடைய, **अर्ध**-பாதி, **अङ्ग**-சரீரத்தை, **हरां**-எடுத்துக்கொண்டவளாயும், **अभिरामां**-வெகுமனேஹரமாயுள்ளவளாயும், **अम्बुरुहाक्षीं**-தாமரைக்கண்ணுடையவளாயும் இருக்கும், **तां**-அந்த, **अम्बां**-தாயாரான, **गौरीं**-கௌரியை, **अहं**-நான், **ईडे**-ஸ்துதிக்கிறேன்.

*முன்னுல் 3, 6, 7 சுலோகங்களில் அம்பிகையை பரமசிவனுடைய பத்னியாக வர்ணித்துவிட்டபடியால் அவளுடைய ஸ்வரூபம் வேறுதானே என்ற ஸந்தேகத்திற்கு இடமன்னியில் இந்த சுலோகத்தில் சக்தியும் சக்தனும் சேர்ந்து ஒரே தத்வமே தவிர வேறல்லவென்பதைத் துலக்கி அர்த்தநாரீசுவர அவஸரத்தை எடுத்துக்காட்டுகிறுர்.* (10)

*இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்வதால் ஏற்படும் பலனைக் கடைசியான 11வது சுலோகத்தில் காட்டுகிறுர் :—*

**प्रातःकाले भावविशुद्धः प्रणिधाना-**
**द्भक्त्या नित्यं जल्पति गौरीदशकं यः ।**
**वाचां सिद्धिं संपदमग्र्यां शिवभक्तिं**
**तस्यावश्यं पर्वतपुत्री विदधाति ॥ ११ ॥**

*ப்ராத:காலே பாவ விஶுத்த: ப்ரணிதாநாத்*
*பக்த்யா நித்யம் ஜல்பதி கௌரீ தஶகம் ய: |*
*வாசாம் ஸித்திம் ஸம்பதமக்ர்யாம் சிவ பக்திம்*
*தஸ்யாவச்யம் பர்வதபுத்ரீ விததாதி ||*

**यः**-எவர், **नित्यं**-பிரதிதினம், **प्रातःकाले**-காலை வேளையில், **प्रणि-धानात्**-ஏகாக்ரமாக தியானம் செய்து, **धाम्नि**-எண்ணத்தில், **विशुद्धः**-நல்ல சுத்தியுள்ளவனாய், **भक्त्या**-பக்தியோடு, **गौरीदशकं**-கௌரீ ஸம்பந்தமான பத்து சுலோகங்களை, **जल्पति**-சொல்கிருனோ, **तस्य**-அவனுக்கு, **वाचां**-வாக்குகளுடைய, **सिद्धिं**-ஸித்தியையும், **अग्र्यां**-மேலான, **संपदं**-ஸம்பத்தையும், **शिवभक्तिं**-சிவபக்தியையும், **पर्वत-पुत्री**-பர்வத ராஜபுத்திரியான கௌரீதேவி, **अवश्यं**-கட்டாயமாக, **विदधाति**-கொடுக்கிருள்.

*பத்து சுலோகங்கள் கொண்ட 'கௌரீதசகம்' என்ற இந்த ஸ்தோத்ரத்தை மனதில் கெட்ட எண்ணங்களில்லாமல் சுத்தமான மனத்துடனும் ஏகாக்ர புத்தியுடனும் அதாவது வேறு ஒன்றிலும் மனதைச் செலுத்தாமல் இதில் கூறப்பட்டபடி கௌரியின் ஸ்வருபத்திலேயே மனதைச் செலுத்திக்கொண்டு பக்தியுடன் ப்ரதிதினம் காலையில் பாராயணம் செய்பவருக்கு வாக்ஸித்தி, சிறந்த ஐசுவர்யம், ஞானதாதாவான பரமசிவனிடம் பக்தி இவை எல்லாவற்றையும் கட்டாயம் அருள்புரிகிருள். எந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்தாலும் அந்தரங்கசுத்தி, பக்தி, ஐகாக்ர்யம் இம்மூன்றும் அவசியமாக இருக்கவேண்டும்.*

கௌரீதசகம் முற்றும்.

॥ श्रीः ॥

# ३. श्रीत्रिपुरसुन्दर्यष्टकम् ॥

# ஸ்ரீ த்ரிபுரஸுந்தரி அஷ்டகம்

[சித்ஸ்வரூபமான ஆத்மாவை மூடிக்கொண்டு தானே ஆத்மா போல் பிரகாசித்து வருகிற ஜடமான ஸ்தூல-ஸூக்ஷ்ம-காரண சரீரங்களுக்கு அழகைக்கொடுப்பது அந்த ஆத்மாவின் சித் சக்தியேயாகும். இம்மூன்று சரீரங்களையும் மூன்று புரங்களாக பாவித்து அந்நகரங்களை சோபிக்கவைக்கிறவளாக அந்த சித் சக்தியை பாவிக்கும்போது அவளுக்கு த்ரிபுரஸுந்தரீ என்ற பெயர் ஏற்படுகிறது. அந்த சக்தியின் வலிமையினால்தான் அம் மூன்று சரீரங்களால் ஏற்பட்டிருக்கும் ஸம்ஸாரமாகிற கட்டி லிருந்து விடுதலையடைய வேண்டியிருக்கிறது. அம்முப்புரங்களை யும் நாசம் செய்து ஸ்வயம் ஜ்யோதிஸ்ஸாக விளங்கும் சுத்தமான சைதன்யமே பரமசிவனாகும். அவ்வித சித்சக்தியை த்ரிபுர ஸுந்தரி என்ற அவஸரத்தில் இந்த ஸ்தோத்திரத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் ஸ்துதிக்கிறார். ஆனால் இதில் அவள் உபாஸகர் களுக்காக தரித்திருக்கும் திவ்யமான மூர்த்தியையே வர்ணிக் கிறாரே தவிர அவளுடைய தத்வத்தை எடுத்துச்சொல்லவில்லை. அவளுடைய ரூபலாவண்யம், கருணை, பெருமை, ஸௌலப்யம் இவைபோலுள்ள மனோஹரமான அம்சங்களில் மனஸ் ஈடுபட்டு அம்பிகையை தியானம் செய்ய ஆரம்பித்தால் அவளுடைய தத்வம் தானாகவே விளங்குமென்று ஸ்ரீமத் ஆசார்யாளின் தாத்பர்யம்.]

कदम्बवनचारिणीं मुनिकदम्बकादम्बिनीं
नितम्बजितभूधरां सुरनितम्बिनीसेविताम् ।
नवाम्बुरुहलोचनां अभिनवाम्बुदश्यामलां
त्रिलोचनकुटुम्बिनीं त्रिपुरसुन्दरीं आश्रये ॥ १ ॥

கதம்பவந சாரிணீம் முநி கதம்ப காதம்பிநீம்
நிதம்ப ஜித பூதராம் ஸுர நிதம்பிநீ ஸேவிதாம் ।
நவாம்புருஹ லோசநாம் அபிநவாம்புத ச்யாமளாம்
த்ரிலோசந குடும்பிநீம் த்ரிபுரஸுந்தரீமாச்ரயே ॥

**कदम्ब-वन-चारिणीं**—கதம்ப வனத்தில், ஸஞ்சரிப்பவளாயும், **मुनि-कदम्ब-कादम्बिनीं** – முனிவர்களின் கூட்டத்திற்கு (அனுக்ரஹத்தை வர்ஷிக்கும்) மேகம் போலுள்ளவளாயும், **नितम्ब-जित-भूधरां**—நிதம்ப பிரதேசத்தால் மலையை ஜயித்தவளாயும், **सुर-नितम्बिनी-सेवितां**-தேவ ஸ்திரீகளால் ஸேவிக்கப்பட்டவளாயும், **नव-अम्बुरुह-लोचनां**—புதிதாய் மலர்ந்த தாமரைபோலுள்ள கண்களையுடையவளாயும், **अभिनव-अम्बुद-श्यामलां**-புதிதாய் ஏற்பட்ட மேகம்போல் சியாமளவர்ணமுள்ளவளாயும், **त्रिलोचन कुटुम्बिनीं**—முக்கண்ணனை பரமேசுவரருக்கு பத்னியாயும் உள்ள, **त्रिपुरसुन्दरीं**-த்ரிபுரஸுந்தரியை, **आश्रये**—ஆசிரயிக்கிறேன்.

*கதம்ப மரங்கள் மிகுந்ததான வனத்தில் ஸஞ்சரிப்பவள். மேகங்கள் மழையைப்பொழிந்து தாபத்தைப் போக்குவதுபோல காட்டிலிருந்துகொண்டு தன்னை நினைக்கும் முனிகணங்களின் ஆத்யாத்மிகாதி தாபங்களைப் போக்குகிறாள் அம்பிகை. அவளுடைய நிதம்ப பிரதேசம் பெரியதாயும் கடினமாயுமுள்ளது. தேவஸ்திரீகளெல்லோரும் அவளை ஸேவிக்கிறார்கள். புதிதாக மலர்ந்த தாமரைபோல் அழகிய கண்களுள்ளவள். புதிய நீருண்ட மேகம்போன்ற காந்தியுள்ளவள். முக்கண்ணனை பரமசிவனின் பத்னி. இந்த த்ரிபுரஸுந்தரியை சரணமடைகிறேன். **नीपोपवनवति** என்று ஸௌந்தர்யலஹரியில் ஆசார்யாளும் '**कदम्बवनवासिनी**' '**कादम्बकान्तारवासप्रिये**' என்று சியாமளா தண்டகததில் காளிதாஸனும் கூறியுள்ளார்கள். முக்கண்ணன் தனது மூன்றுவது நெற்றிக்கண்ணால் காமனை எரித்தார். அவருடைய குடும்பினி—மனைவி என்பதால் அவர் கோபத்தை அடக்கி அவர் மனதிற்கு இன்பமூட்டும் தன்மையுள்ளவள் என்று தெரிகிறது. ஆதலால் அம்பிகையின் அருள் பெற்றவருக்கு பரமசிவனின் ப்ரஸாதமும் கிடைக்கும்.* (1)

कदम्बवनवासिनीं कनकवल्लकीधारिणीं
महार्हमणिहारिणीं मुखसमुल्लसद्वारुणीम् ।
दयाविभवकारिणीं विशदरोचनाचारिणीं
त्रिलोचनकुटुम्बिनीं त्रिपुरसुन्दरीं आश्रये ॥ २ ॥

*கதம்பவந வாஸிநீம் கநகவல்லகீ தாரிணீம்*
*மஹார்ஹ மணி ஹாரிணீம் முக ஸமுல்லஸத்*
*வாருணீம் ।*
*தயா விபவ காரிணீம் விஶதரோசநாசாரிணீம்*
*த்ரிலோசந குடும்பிநீம் த்ரிபுரஸுந்தரீமாச்ரயே ॥*

**कदम्ब-वन-वासिनीं**-கதம்பவனத்தில் வஸிப்பவளாயும், **कनक-वल्लकी धारिणीं**-ஸுவர்ணமயமான வீணாவாத்யத்தை தரித்திருப்பவளாயும், **महार्ह-मणि-हारिणीं**-மிகவும் மதிப்புள்ள ரத்னங்களாலான மாலைகளையுடையவளாயும், **मुख-समुल्लसद्-वारुणीं**-வாயில் நன்கு சோபிக்கும் ஸுரையோடு கூடியவளாயும், **दया-विभव-कारिणीं**-தயையினால் ஐசுவர்யத்தைக் கொடுப்பவளாயும், **विशद-रोचना-चारिणीं**-சுத்தமான கோரோசனையை உபயோகிக்கிறவளாயும், **त्रिलोचन-कुटुम्बिनीं**-முக்கண்ணன் பத்தினியாயும் உள்ள, **त्रिपुरसुन्दरीं**-த்ரிபுரஸுந்தரியை, **आश्रये**-ஆசிரயிக்கிறேன்.

*கதம்பவனத்தில் வஸிப்பவள் ஸுவர்ணமயமான வீணாவாத்யத்தை கையில் தரித்துக்கொண்டு வாசிப்பதன் மூலம் தன் பர்த்தாவான பரமசிவனை ஸந்தோஷப்படுத்துகிறாள். அவள் கழுத்தில் அணிந்துகொண்டிருக்கிற மாலையிலுள்ள ஒவ்வொரு ரத்னமும் விலைமதிக்கமுடியாதது. வாருணி என்ற சிறந்த மத்யத்தின் வாசனை முகத்தில் வீசுகிறது. கருணையினால் பக்தர்களுக்கு எல்லா ஐசுவர்யங்களையும் அருளுகிறாள். சுத்தமான கோரோசனையை உபயோகிக்கிறாள். முக்கண்ணன் பத்னியான இந்த த்ரிபுரஸுந்தரியை ஆச்ரயிக்கிறேன். இந்த சுலோகத்திலும் 6வது சுலோகத்திலும் வீணாபாணியாக த்ரிபுரஸுந்தரியை வர்ணிக்கிறார்.* (2)

**कदम्बवनशालया कुचभरोल्लसन्मालया**
**कुचोपमितशैलया गुरुकृपालसद्वेलया ।**
**मदारुणकपोलया मधुरगीतवाचालया**
**कयाऽपि घननीलया कवचिता वयं लीलया ॥ ३ ॥**

*கதம்பவந ஶாலயா குசபரோல்லஸன்மாலயா*
*குசோபமித ஶைலயா குருக்ருபாலஸத்வேலயா ।*

*மதாருண கபோலயா மதுரகீதவாசாலயா*
*கயாऽபி கநநீலயா கவசிதா வயம் லீலயா ॥*

**कदम्ब-वन-शालया**- கதம்பவனத்தை இருப்பிடமாயுள்ளவளும், **कुचभर-उल्लसत्-मालया**-ஸ்தனங்களில் நன்கு சோபிக்கிற மாலைக ளோடு கூடியவளும் **कुच-उपमित-शैलया**-குன்றுகளுக்கு ஸமமான ஸ்தனங்களையுடையவளும் **गुरुकृपा-लसत् वेलया**- மிகுதியான கருணையின் பிரகாசமான எல்லை போலுள்ளவளும் **मद-अरुण-कपोलया**- மதத்தினால் சிவந்த கன்னங்களையுடையவளும் **मधुर-गीत-वाचालया**- வெகு அழகாக பாட்டுகளைப்பாடுகிறவளும் **घन-नीलया**-மேகம் போல் நீலவர்ணமுள்ளவளுமான **कयाऽपि**-வர்ணிக்க முடியாத ஏதோஒரு **लीलया**-விளையாட்டினால் **वयं**-நாங்கள் **कवचिताः**-கவசம் போட்டாற் போல் ரக்ஷிக்கப்பட்டிருக்கிறோம்.

*கதம்பவனத்தில் ஸாந்நித்யம்கொண்டு பிரகாசிக்கிறவள். கழுத்தில் அணிந்துகொண்டுள்ள முக்தாஹாரம் ஸ்தனங்களின் மேல் விளங்குகிறது. ஸ்தனங்களோ மலைகள்போல் பருத்தும் கடினமாகவுமுள்ளன. அவளிடமுள்ள கருணை ஸமுத்ரம்போலும் அவள் அதன் கரை போலும் விளங்குகிறாள். மாதக திரவ்யங்களை உபயோகிப்பதால் கன்னம் சிவந்து விளங்குகிறது. அவள் பேசும் மொழி இனிமையான பாட்டுப்போல உள்ளது 'ஸரஸ்வதி வீணை வாசிக்கும்பொழுது அதைக்கேட்டு சந்தோஷமிகுதியால் அம்பாள் சொன்ன '**साधु**' என்ற வார்த்தையின் நாதம் வீணா நாதத்தை தோற்கடித்துவிட்டது' என்று ஸௌந்தர்யலஹரியில் கூறுகிறார். இம்மாதிரியான உருவத்தை பக்தர்களுக்கருள்புரிய அம்பிகை விளையாட்டாகவே எடுத்துக்கொள்கிறாள். இதை தியானம் செய்வதன் மூலம் எங்களுக்கு இந்த ஸ்வரூபம் கவசமாக பாதுகாப்பாக அமைந்துவிட்டது. இனி ஸம்ஸாரத் துன்பங்கள் ஒன்றும் எங்களிடம் நெருங்கமுடியாது.* (3)

**कदम्बवनमध्यगां कनकमण्डलोपस्थितां**
**षडम्बुरुहवासिनीं सततसिद्धसौदामिनीम् ।**
**विडम्बितजपारुचिं विकचचन्द्रचूडामणिं**
**त्रिलोचनकुटुम्बिनीं त्रिपुरसुन्दरीमाश्रये ॥ ४ ॥**

*கதம்பவநமத்யகாம் கநகமண்டலோபஸ்திதாம்*
*ஷடம்புருஹவாஸிநீம் ஸததஸித்தஸௌதாமிநீம் ।*
*விடம்பிதஜபாருசிம் விகசசந்த்ரசூடாமணிம்*
*த்ரிலோசன குடும்பினீம் த்ரிபுரஸுந்தரீமாச்ரயே ॥*

**कदम्ब-वन-मध्यगां**–கதம்பவனத்தின் மத்தியில் இருப்பவளாயும், **कनक-मण्डल-उपस्थितां**–ஸுவர்ண மண்டலத்தில் இருப்பவளாயும், **षड्-अम्बुरुह-वासिनीं**–(மூலாதாரம் முதலான ஆறு சக்கிரங்களாகிற) ஆறு பத்மங்களில் வசிக்கிறவளாயும், **सतत-सिद्ध-सौदामिनीं**–எப்பொழுதும் நிலையாக இருக்கிற மின்னல்போலுள்ளவளாயும், **विडम्बित-जपा-रुचिं**–ஜபாபுஷ்பத்தின் காந்திக்கு ஒப்பானவளாயும், **विकच-चन्द्र-चूडामणिं**–பிரகாசமான சந்திரனை சிரஸில் அலங்காரமாக தரிப்பவளாயும், **त्रिलोचन-कुटुम्बिनीं**–முக்கண்ணனின் பத்னியாயுமுள்ள, **त्रिपुरसुन्दरीं**–த்ரிபுரஸுந்தரியை, **आश्रये**–ஆச்ரயிக்கிறேன்.

*கதம்பவனத்தில் நடுவில் இருப்பவள். ஸுவர்ணமண்டலத்தில் அல்லது ஸுவர்ணம்போல் காந்தியுள்ள மண்டலத்தில் ஸாந்நித்யம் கொண்டவள். நம் சரீரத்தில் உள்ள மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரம், அநாஹதம், ஆஜ்ஞா, விசுத்தி என்னும் தாமரை போன்ற ஆறு சக்கரங்களில் வெவ்வேறு அவஸரமாக வஸிப்பவள். நாம் காணும் மின்னல் தோன்றி மறைந்துவிடுகிறது. மின்னல் நிலையாக இருக்குமானல் அதன் காந்தியை அம்பாளுக்கு உபமானமாகச் சொல்லலாம். செம்பரத்திப் பூப்போல் சிகப்பாக பிரகாசிப்பவள். பிரகாசமுள்ள சந்திரனை சிரஸ்ஸில் சூடாமணியாக தரித்திருக்கிருள். இந்த முக்கண்ணன் பத்னியான த்ரிபுரஸுந்தரியை ஆச்ரயிக்கிறேன்.* (4)

*இவ்விதமாக நான்கு சுலோகங்களில் அம்பிகையை கதம்பவனத்திலிருப்பதாக வர்ணித்துவிட்டு அவளுடைய திவ்ய மூர்த்தியை மாத்திரம் மேல் மூன்று சுலோகங்களால் வர்ணிக்கிருர்:—*

कुचाञ्चितविपञ्चिकां कुटिलकुन्तलालंकृतां
कुशेशयनिवासिनीं कुटिलचित्तविद्वेषिणीम् ।

मदारुणविलोचनां मनसिजारिसंमोहिनीं
मतङ्गमुनिकन्यकां मधुरभाषिणीमाश्रये ॥ ५ ॥

*குசாஞ்சித விபஞ்சிகாம் குடிலகுந்தளாலங்க்ருதாம்*
*குசேசயநிவாஸிநீம் குடிலசித்தவித்வேஷிணீம் ।*
*மதாருணவிலோசநாம் மநஸிஜாரிஸம்மோஹிநீம்*
*மதங்கமுநிகந்யகாம் மதுரபாஷிணீமாச்ரயே ॥*

**कुच-अञ्चित-विपञ्चिकां**-ஸ்தனத்தில் பட்டுக்கொண்டிருக்கிற வீணையுடையவளும், **कुटिल-कुन्तलालंकृतां**-சுருண்ட கேசங்களால் அலங்கரிக்கப்பட்டவளும், **कुशेशय-निवासिनीं**-தாமரையில் வஸிப்பவளும், **कुटिलचित्त-विद्वेषिणीं**-கோணலான புத்தியுள்ளவர்களை வெறுப்பவளும், **मदारुण-विलोचनां**-மதத்தினால் சிவந்த கண்களையுடையவளும், **मनसिजारि-संमोहिनीं**-மன்மதனின் சத்ருவான பரமேசுவரரை நன்கு மோஹிக்கச் செய்பவளும், **मतङ्ग-मुनि-कन्यकां**-மதங்க மஹர்ஷியின் புத்திரியும், **मधुर-भाषिणीं**அழகாகப் பேசுகிறவளுமான தேவியை, **आश्रये**-ஆசிரயிக்கிறேன்.

*அம்பிகை வீணையை மார்பில் சாத்திக்கொண்டிருப்பதால் அது ஸ்தன பிரதேசத்திலும் பட்டுக்கொண்டிருக்கிறது. அவளுடைய சுருண்ட கேசங்களே ஆபரணம்போல் விளங்குகிறது. தாமரைப்பூவில் வாஸம் செய்பவள். அல்லது பக்தர்களின் ஹிருதய கமலத்தில் வஸிப்பவள் நேர்மையில்லாமல் வஞ்சிக்கும் புத்தியுள்ளவர்களை வெறுப்பவள். (கேசத்திலுள்ள கௌடில்யம் அலங்காரமாகிறது. இது புத்தியிலிருக்குமானால் அவன் முன்னேற முடியாது) மதத்தால் கண்கள் சிவந்திருக்கின்றன. காமனை எரித்த பரமசிவனும் இந்த அம்பாளின் உருவத்தைக் கண்டு அதிலும் கண் பார்வையைக்கண்டு மயங்குகிறார். மதங்க முனிவரின் பெண்ணாக அவதரித்தவள் இனிமையாகப் பேசுபவள் இந்த அம்பிகையை ஆச்ரயிக்கிறேன். (இந்த ஸ்தோத்திரத்தில் மாதங்கியின் ஸ்வரூபம் அதிகமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. மந்திரசாஸ்திரத்தில் மாதங்கியை ச்யாமளையாகவும் வீணையை தரித்தவளாகவும் கதம்பவனத்தில் வசிப்பவளாகவும் வர்ணிக்கப் பட்டிருக்கிறது. காளிதாஸனும் சியாமளாதண்டகத்தில் சியாமளையை இவ்வாறே வர்ணிக்கிறார்.) (5)*

स्मरेत्प्रथमपुष्पिणीं रुधिरबिन्दुनीलाम्बरां
गृहीतमधुपात्रिकां मदविघूर्णनेत्राञ्चलाम् ।
घनस्तनभरोन्नतां गलितचूलिकां श्यामलां
त्रिलोचनकुटुम्बिनीं त्रिपुरसुन्दरीमाश्रये ॥ ६ ॥

*ஸ்மரேத்ப்ரதமபுஷ்பிணீம் ருதிரபிந்துநீலாம்பராம்*
*க்ருஹீத மதுபாத்ரிகாம் மதவிகூர்ண நேத்ராஞ்சலாம் ।*
*கநஸ்தநபரோந்நதாம் களிதசூளிகாம் ச்யாமளாம்*
*த்ரிலோசநகுடும்பிநீம் த்ரிபுரஸுந்தரீமாச்ரயே ॥*

**स्मर-इत्-प्रथम-पुष्पिणीं**-மன்மதன்வரும் குறிப்பான முதல் தடவை புஷ்பவதியானவளும், **रुधिर-बिन्दु-नीलाम्बरां**-ரக்தம்போல் சிவப்பான புள்ளிகளுடன்கூடிய நீலமான சேலையுடையவளும், **गृहीत-मधुपात्रिकां**-மதுபாத்திரத்தை கிரஹித்துக்கொண்டிருப்பவளும், **मद-विघूर्ण-नेत्र-अञ्चलां**-மதத்தினால் சுழலுகின்ற கண்களின் ஓரங்களுடையவளும், **घन-स्तन-भर-उन्नतां**-கனமான ஸ்தனங்களின் பாரத்தினால் நிமிர்ந்திருப்பவளும், **गलित-चूलिकां**-அவிழ்ந்த கேசங்களையுடையவளும், **श्यामलां**-சியாமவர்ணமுள்ளவளும், **त्रिलोचन-कुटुम्बिनीं**-முக்கண்ணனின் பத்னியுமான, **त्रिपुरसुन्दरीं**-த்ரிபுரஸுந்தரியை, **आश्रये**-ஆசிரயிக்கிறேன்.

*முதல் தடவையாக ருதுவானவள். சிகப்புப் புள்ளியுடன் கூடிய நீலாம்பரத்தை தரித்துக்கொண்டிருக்கிறாள். கையில் மத்யபாத்ரத்தை தரித்துக்கொண்டு அதை பானம் செய்கிறாள். மதலாஹிரியால் கண்கள் சுழலுகின்றன. பருத்தும் பெரியதும் நெருக்கமுள்ளதுமான ஸ்தனபாரங்களால் நிமிர்ந்து இருப்பவள். கேசங்கள் அவிழ்ந்திருக்கின்றன. சியாம வர்ணமுள்ளவள். முக்கண்ணனின் பத்னியான இந்த த்ரிபுரஸுந்தரியை சரணம் அடைகிறேன். (6)*

सकुङ्कुमविलेपनामलिकचुम्बिकस्तूरिकां
समन्दहसितेक्षणां सशरचापपाशाङ्कुशाम् ।
अशेषजनमोहिनीमरुणमाल्यभूषाम्बरां
जपाकुसुमभासुरां जपविधौ स्मराम्यम्बिकाम् ॥ ७ ॥

*ஸகுங்குமவிலேபநாம் அளிகசும்பிகஸ்தூரிகாம்*
*ஸமந்தஹஸிதேக்ஷணாம் ஸசரசாபபாசாங்குசாம் ।*
*அசேஷ ஜநமோஹிநீம் அருணமால்யபூஷாம்பராம்*
*ஜபாகுஸுமபாஸுராம் ஜபவிதௌ ஸ்மரேதம்பிகாம் ॥*

**सकुङ्कुम-विलेपनां**–குங்குமப்பூ கலந்து சிவப்பான சந்தனத்தைப் பூசிக்கொண்டிருப்பவளும், **अलिक-चुम्बि-कस्तूरिकां**–நெற்றியில் கஸ்தூரீ திலகம் அணிந்திருப்பவளும், **समन्दहसितेक्षणां**–மந்த ஹாஸத்துடன் சேர்ந்தபார்வையுடையவளும், **सशर-चाप-पाश-अंकुशां**–அம்பு, வில், பாசம், அங்குசம் இவைகளையுடையவளும், **अशेष-जन-मोहिनीं**–ஸகல ஜனங்களையும் மோஹிக்கச் செய்பவளும், **अरुण-माल्य-भूषा-अम्बरां**=சிவந்த மாலைகள், நகைகள், வஸ்திரம், இவைகளையுடைய வளும், **जपा-कुसुम-भासुरां**-ஜபா புஷ்பம்போல் பிரகாசிக்கிறவளுமான, **अम्बिकां**–ஜகன்மாதாவை, **जप-विधौ**–ஜபம் செய்யும்போது, **स्मरामि**–

*குங்குமப்பூ கலந்த செந்நிறமான சந்தனத்தை உடலில் பூசிக்கொண்டிருக்கிறாள். நெற்றியில் கஸ்தூரி திலகம், புன்சிரிப்புடன் கூடிய பார்வை. கரும்பு வில், புஷ்பபாணம், பாசம், அங்குசம் இவைகளை நான்கு கைகளிலும் தரித்துக் கொண்டிருக்கிறாள். தனது மாயா சக்தியால் எல்லா ஜனங்களையும் மோஹிக்கும்படி செய்கிறாள். அவள் அணிந்துள்ள மலர் மாலை, ஆபரணங்கள், வஸ்திரம் எல்லாம் செந்நிறமாக உள்ளன. அவள் சரீரமும் செம்பரத்தப்பூப்போல் காந்தியுள்ளது. இவ்வித மான அம்பிகையின் ஸ்வரூபத்தை மந்திரங்களை ஜபிக்கும்போது தியானிக்கவேண்டும். (ஸ்ரீவித்யாமந்திரத்துக்கு இது தியான சுலோகமாக அமைந்துள்ளது. அம்பிகையின் ஸ்வரூபம் முழுவதும் சிவப்பாயிருக்கிறது என்பதை ஸௌந்தர்யலஹரி 23-வது சுலோகத்தில் கூறுகிறார்.)*

*(இந்த சுலோகத்தில் வர்ணித்திருக்கிறபடி சிவப்புவர்ணத் துடன் சிவப்பு வஸ்திராபரணாதிகளுடன் பிரஸன்ன முகத்துடன் இருப்பதே அம்பிகையின் ஸாதாரணமான மூர்த்தி. முன் சுலோகங்களில் கண்டவை வெவ்வேறு அவஸரங்களைக் குறிக்கின்றன)* (7)

*முதல் சுலோகத்தில் தேவஸ்திரீகள் அம்பிகையை ஸேவிப்பதாகப் பொதுவாகச் சொல்லப்பட்டது. தேவேந்திரனுடைய பத்னியான சசீதேவியும், ஸர்வ லோக பிதாமஹரான பிரஹ்மாவின் பத்னியான ஸரஸ்வதீ தேவியும், ஸ்ரீமந் நாராயணருடைய பத்னியான லக்ஷ்மீதேவியும்கூட அம்பிகைக்கு பலவித கைங்கர்யங்கள் செய்கிறார்களென்பதை கடைசி சுலோகத்தில் காட்டுகிறார் :—*

**पुरंदरपुरन्ध्रिकाचिकुरबन्धसैरन्ध्रिकां**
**पितामहपतिव्रतापटुपटीरचर्चारताम् ।**
**मुकुन्दरमणीमणीलसदलंक्रियाकारिणीं**
**भजामि भुवनाम्बिकां सुरवधूटिकाचेटिकाम् ॥ ८ ॥**

*புரந்தரபுரந்த்ரிகாசிகுரபந்தஸைரந்த்ரிகாம்*
*பிதாமஹபதிவ்ரதாபடுபடீரசர்ச்சாரதாம் ।*
*முகுந்தரமணீமணீலஸதலங்க்ரியா காரிணீம்*
*பஜாமி புவநாம்பிகாம் ஸுரவதூடிகாசேடிகாம் ॥*

**पुरंदर-पुरंध्रिका-चिकुर-बन्ध-सैरन्ध्रिकां**-தேவேந்திரனுடையபத்னீ எவளுடைய கேசங்களை பின்னல்போடும் வேலையிலுள்ளவளோ, **पितामह-पतिव्रता-पटुपटीरचर्चा-रतां**-பிரஹ்மாவின் பத்னி எவளுக்கு அழகான சந்தனத்தைப பூசுவதில் ஈடுபட்டவளோ, **मुकुन्दरमणीमणी-लसत्-अलंक्रिया-कारिणीं**-மஹாவிஷ்ணுவின் பத்னீ எவளுக்கு ரத்னங்களுடன் பிரகாசிக்கும் அலங்காரத்தை செய்து வைப்பவளோ, **सुर-वधूटिका-चेटिकां**-தேவஸ்திரீகள் எவளுக்கு பரிசர்யை செய்கிறவர்களோ, அந்த **भुवनाम्बिकां**-ஜகந்மாதாவை, **भजामि**-பஜிக்கிறேன்.

*தேவேந்திரனின் பிரியநாயகியான இந்திராணி ஸைரந்த்ரியாயிருந்து அம்பிகையின் கேசத்தை வாரிப்பின்னி அலங்கரிக்கிறாள். பிரஹ்மாவின் பத்னியான ஸரஸ்வதியும் மிகத்திறமையுடன் உயர்ந்த சந்தனம் தயாரித்து அம்பிகையின் சரீரத்தில் அதைப் பூசும் கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கிறாள். மஹாவிஷ்ணுவின் காந்தையான லக்ஷ்மீ ரத்னாபரணங்களால் மிக அழகாக அம்பாளுக்கு அலங்காரம் செய்கிறாள். தேவப்பெண்கள் யாவரும் அம்பிகைக்குச் சேடிகளாக இருந்து பலவிதமாக கைங்கர்யம்*

செய்கிறார்கள். அவள் உலகம் முழுவதற்கும் மாதா. எல்லோரும் அவளுக்குக் குழந்தைகள். ஜகன்மாதாவை தியானித்து அவள் அருளைப்பெற்றுவிட்டால் இந்திரன், இந்திராணி, பிரஹ்மா, ஸரஸ்வதீ, விஷ்ணு, லக்ஷ்மீ இவர்களின் அருளும் தானாகவே கிடைத்துவிடும். அதற்காகத் தனி முயற்சி தேவையில்லை. ராஜாவின் பிரியத்தைப் பெற்றுவிட்டால் மந்திரி முதலான ஊழியர்களும் அவனிடம் பிரீதிகொள்வார்கள். அம்பிகையின் அருளால் தேவலோக போகம், வித்யை, ஐசுவர்யம் எல்லாம் பெறலாம். (8)

ஸ்ரீ த்ரிபுரஸுந்தரீ அஷ்டகம் முற்றும்

# ॥ मन्त्रमातृकापुष्पमालास्तवः ॥

# மந்த்ர மாத்ருகா புஷ்பமாலா ஸ்தவம்

[ஜகந்மாதாவான பரமேசுவரிக்கு ஏற்பட்ட உத்தமமான மந்திரமாகிய பஞ்சதசாக்ஷரியை ஜபம் செய்வதற்கு அதிகாரமில்லாத ஜனங்களுக்கும் அதன் பிரயோஜனம் ஒருவாறு கிடைக்கட்டும் என்று பரம கருணையுடன் அம்மந்திரத்திலுள்ள அக்ஷரங்களை வரிசையாக ஒவ்வொரு சுலோகத்திலும் முதல் அக்ஷரமாக வைத்து ஸ்ரீமத் ஆசார்யாள் பதினைந்து சுலோகங்கள் அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள். அத்துடன் அம்பிகையை ஸ்ரீசக்ரத்திலோ, விக்ரஹத்திலோ ஆவாஹனம் செய்து பூஜை செய்ய முடியாதவர்களுக்கும் உபயோகப்படும்படி பூஜையின் அம்சங்களாகிய எல்லா உபசாரங்களையும் வரிசையாக இந்த ஸ்தோத்திரத்தில் அம்பிகைக்கு மானஸமாகவே செய்வதாக வர்ணித்திருக்கிறார் மேலும் உத்தமாதிகாரிகளுக்குக்கூட வெளி ஸாமக்ரிகளை வைத்துக்கொண்டு அம்பாளை ஆராதிப்பதை விட மானஸிகமாக ஆராதிப்பதே சிலாக்கியம் என்றும் சொல்லப் படுகிறது. अन्तर्मुखसमाराध्या, बहिर्मुखसुदुर्लभा, रहोयागक्रमाराध्या रहस्तर्पणतर्पिता, என்றெல்லாம் சொல்லப்படுவதால் தேசம், காலம், வஸ்து, நிமித்தம், மனுஷ்யாள் முதலிய பலவித அம்சங்களை எதிர்பார்த்துச் செய்வதானுல் அவைகள் எதிர்பார்க்கிறபடி அமையாது. மானஸிகமாக ஸகல பதார்த்தங்களையும் வெகு உததமமாகவே கல்பித்து அம்பாளுக்கு அர்ப்பணம் செய்ய ஸாத்தியப்படும். சரீர சிரமமில்லை, திரவியச் செலவில்லை, என்ற எண்ணத்துடன் செய்யாமல் சிரத்தா பக்தி புரஸ்ஸரமாக் மன முருகி மானஸிகமாக பூஜை செய்தால் அதை அம்பிகை ஏற்றுக் கொள்வாளென்பதில் ஸந்தேஹமில்லை. அமமுறையிலேயே இவ்வித மானஸிக பூஜா ஸ்தோத்திரங்கள் ஸ்ரீமத் ஆசார்யரால் உபதேசிக்கப்பட்டிருககினறன. இந்த ஸ்தோத்திரத்தினுல் அம்பிகையை மானஸிகமாக பூஜை செய்கிறவருக்கு ஏற்படும் பலனை 16வது சுலோகத்திலும், இந்த ஸ்தோத்திரத்தின் மஹிமையை 17வது சுலோகத்திலும் கடைசியில் ஸ்ரீமத் ஆசார்யார் எடுத்துச்சொல்கிறார்.]

*முதல் சுலோகத்தில் அம்பாளுக்கு ஆஸனம் கல்பிக்கிறார்.:-*

**कल्लोलोल्लसितामृताब्धिलहरीमध्ये विराजन्मणि-**
**द्वीपे कल्पकवाटिकापरिवृते कादम्बवाट्युज्ज्वले ।**
**रत्नस्तम्भसहस्रनिर्मितसभामध्ये विमानोत्तमे**
**चिन्तारत्नविनिर्मितं जननि ते सिंहासनं भावये ॥ १ ॥**

*கல்லோலோல்லஸிதாம்ருதாப்தி லஹரீ*
*மத்யே விராஜன் மணி*
*த்வீபே கல்பக வாடிகா பரிவ்ருதே*
*காதம்ப வாட்யுஜ்வலே ।*
*ரத்நஸ்தம்ப ஸஹஸ்ர நிர்மித ஸபா*
*மத்யே விமானோத்தமே*
*சிந்தா ரத்ந விநிர்மிதம் ஜநநி தே*
*ஸிம்ஹாஸநம் பாவயே॥*

**कल्लोल - उल्लसित - अमृताब्धि लहरी-मध्ये** - உயர்ந்த அலைகளுடன் பிரகாசிக்கிற அமிருத ஸமுத்திரப் பெருக்கின் மத்தியில், **विराजत्-मणिद्वीपे** – விளங்குகிற மணித்வீபத்தில், **कल्पकवाटिका-परिवृते**– கல்பவிருக்ஷங்களின் கூட்டத்தால் சூழப்பட்டிருக்கும், **कादम्ब वाटी-उज्ज्वले** – கதம்பவனத்தில் பிரகாசிக்கிற, **रत्न-स्तम्भ सहस्र-निर्मित-सभा-मध्ये** - ரத்னமயமான ஆயிரக்கணக்கான தூண்களால் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கும் ஸபா மண்டபத்தின் மத்தியில், **विमानोत्तमे** – உத்தமமான விமானத்தில், **चिन्तारत्न-विनिर्मितं**– சிந்தாமணியால் செய்யப்பட்டிருக்கிற, **सिंहासनं** – ஸிம்ஹாஸனததை, **जननि** – தாயே, **ते** - உனக்கு, **भावये**-மனஸினால் கல்பிக்கிறேன்.

*உயர எழுப்பி மோதுகின்ற அலைகளுடன்கூடிய அமிருத ஸமுத்திரம், அதன் மத்தியில் மணித்வீபம் என்ற தீவு, அதில் கல்பவிருக்ஷத் தோட்டங்கள், அவைகளின் மத்தியில் கதம்பவனம், அதன் மத்தியில் ஆயிரக்கணக்கான ரத்ன ஸ்தம்பங்களுள்ள மண்டபம், அதன் மத்தியில் உத்தமமான விமானம், அதன் மத்தியில் சிந்தாமணிமயமான ஸிம்ஹாஸனம்.*

*தேவியை ஸுமேருபர்வதத்தின் கொடுமுடியிலும், ஸ்ரீநகரத்திலும், சந்திரபிம்பத்திலும் ஸூர்ய மண்டலத்திலும் அமிருத*

ஸாகரத்தின் மத்தியிலும் என்றெல்லாம் பலவாறு இருப்பதாகச் சொல்வதுண்டு இங்கே ...स्था, कदम्बवनवासिनी என்ற அம்சங்களை ஸ்ரீமத் ... எடுத்துக்கொண்டிருக்கிறார் இங்கு கூறியுள்ளபடியே ... என்ற ஸௌந்தர்யலஹரீ சுலோகத்திலும் வர்ணித்திருக்கிறார். இந்த புண்ய ஸ்தலத்திற்குப் போய் யாரும் அம்பிகையைப் பூஜைசெய்ய முடியாது. ஆனால் மானஸ பூஜையால் இங்கு இருந்தபடியே மணித்வீபத்திலுள்ள அம்பாளைப் பூஜை செய்யலாம் (1)

இவ்வித மஹிமையுள்ள ஸந்நிவேசத்தில் அம்பிகையிருப்பதாக பாவித்து தியானத்திற்காக அவளுடைய திவ்ய மூர்த்தியை அடுத்த சுலோகத்தில் வர்ணிக்கிறார்:—

एणाङ्कानलभानुमण्डललसच्छ्रीचक्रमध्ये स्थितां
बालार्कद्युतिभासुरां करतलैः पाशांकुशौ बिभ्रतीम् ।
चापं बाणमपि प्रसन्नवदनां कौसुम्भवस्त्रान्वितां
तां त्वां चन्द्रकलावतंसमकुटां चारुस्मितां भावये ॥ २ ॥

ஏணாங்காநல பாநு மண்டல லஸத்
ஸ்ரீசக்ரமத்யே ஸ்திதாம்
பாலார்க்க த்யுதி பாஸுராம் கரதலை:
பாசாங்குசௌ பிப்ரதீம் ।
சாபம் பாணமபி ப்ரஸந்ந வதநாம்
கௌஸும்ப வஸ்த்ராந்விதாம்
தாம் த்வாம் சந்த்ரகலாவதம்ஸ மகுடாம்
சாரு ஸ்மிதாம் பாவயே ॥

**एणाङ्क-अनल-भानु-मण्डल-लसत् - श्रीचक्र-मध्ये** – மானையடையாளமாயுள்ள சந்திரன், அக்னி, ஸூர்யன் இவர்களின் மண்டலம் போல் பிரகாசிக்கிற ஸ்ரீ சக்ரத்தின் மத்தியில், **स्थितां** இருப்பவளும், **बालार्क-द्युति-भासुरां** – காலை ஸூர்யனின் காந்தியுடன் பிரகாசிக்கிறவளும், **करतलैः**–கைகளின் தலங்களால், **पाश-अंकुशौ**–பாசத்தையும் அங்குசத்தையும், **चापं**–தனுஸையும், **बाणं अपि**–அம்பையும் கூட, **बिभ्रतीं** – தரிக்கிறவளும், **प्रसन्न-वदनां** – பிரஸன்னமான முகத்தை

யுடையவளும், **कौसुम्भ-वस्त्रान्विता** - சிவப்பு வஸ்திரத்தோடு கூடிய வளும், **चन्द्र-कला-अवतंस-मकुटां** - சந்திரகலையை ஆபரணமா யுடைய கிரீடத்தையுடையவளும், **चारु-स्मितां** - அழகான மந்த ஹாஸத்துடன் கூடியவளுமான, **तां** - அந்த **त्वां** - உன்னை **भावये** - மனஸினுல் பாவிக்கிறேன்.

உலகில் பிரகாசமுள்ளவை சூரியமண்டலம், சந்திரமண்டலம், அக்னி மண்டலம். ஸ்ரீ சக்ரமும் இவைகள்போல் மிகுந்த பிரகாச முள்ளது. அதன் நடுவில் அம்பாள் இருக்கிருள். காலையில் உதித்த சூரியனின் கிரணம்போல் ஒளியுடன் விளங்குபவள் தனது நான்கு கைகளிலும் பாசம், அங்குசம், வில், அம்பு இவை களை தரித்திருக்கிருள். முகம் பிரஸன்னமாக இருக்கிறது. சிகப்புநிற ஆடை அணிந்திருக்கிருள். சிரஸிலுள்ள கிரீடத்தில் சந்திரகலையே அணியாக விளங்குகிறது. அழகிய புன்சிரிப்புடன் கூடியவள் இவ்வித ரூபத்தை தியானிக்கிறேன். (2)

இவ்விதமாக அம்பாளுக்கு ஸ்வரூபஸித்தமான ஸ்தானத்தை யும் ரூபத்தையும் தியானித்து அவளை மனஸில் ஆவாஹனம் செய்துவிட்டு பிறகு கிரமமாக பூஜைக்குள்ள உபசாரங்களைப்பற்றி ஆரம்பிக்கிருர். மூன்ருவது சுலோகத்தில் ஆஸனம், பாத்யம், அர்க்யம், ஆசமனீயம் என்ற நான்கு உபசாரங்களையுமே வரிசை யாக ஸமர்ப்பிக்கிருர் :—

ईशानादिपदं शिवैकफलकं रत्नासनं ते शुभं
पाद्यं कुङ्कुमचन्दनादिभरितैरर्घ्यं सरत्नाक्षतैः ।
शुद्धैराचमनीयकं तव जलैर्भक्त्या मया कल्पितं
कारुण्यामृतवारिधे तदखिलं संतुष्टये कल्पताम् ॥ ३ ॥

ஈசானாதிபதம் சிவைகபலகம் ரத்நாஸநம் தே சுபம்
பாத்யம் குங்கும சந்தனாதி பரிதை ரர்க்யம்
ஸரத்நாக்ஷதை: ।
சுத்தைராசமநீயகம் தவ ஜலைர் பக்த்யா மயா கல்பிதம்
காருண்யாம்ருத வாரிதே ததகிலம் ஸந்துஷ்டயே
கல்பதாம் ॥

**कारुण्यामृत-वारिधे**-கருணையாகிய அமிருதத்தின் கடலாக உள்ள ஹே தேவி **ते** - உனக்கு, **ईशानादिपदं** - ஈசானர் முதலானவர்களைக்

கால்களாக உடையதும், **शिव-एक-फलकं** – ஸதாசிவனை ஒரே மேல் பலகையாகக் கொண்டதும், **शुभं**–சோபனமாயுள்ளதுமான, **रत्नासनं**– ரத்னமயமான ஆஸனமும், **कुङ्कुम-चन्दनादिभरितैः** – குங்குமம் சந்தனம் முதலியவை நிரப்பிய (ஜலங்களால்) **पाद्यं** - கால்களுக்கு பாத்யமும், **सरत्नाक्षतैः** – ரத்னத்தோடும் அக்ஷதைகளோடும்கூடிய (ஜலங்களால்) , **अर्घ्यं** – கையில் அர்க்யமும், **शुद्धैः** – சுத்தமான, **जलैः** – ஜலங்களினால், **तव** – உனக்கு, **आचमनीयकं** – ஆசமனீயமும், (ஆகிய இவை), **भक्त्या** – பக்தியுடன், **मया**–என்னால், **कल्पितं** – கல்பிக்கப்பட்டிருக்கிறது. **तत् अखिलं** – அது எல்லாம் (உன்னுடைய) **संतुष्टये** – ஸந்தோஷத்தின் பொருட்டு, **कल्पतां** – ஏற்படட்டும்.

*ஷோடசோபசாரங்களில் முன்னாலுள்ள ஆஸனம், பாத்யம், அர்க்யம், ஆசமனீயம், என்ற நான்கு உபசாரங்களையும் இந்த சுலோகத்தில் அம்பாளுக்கு மனதால் கல்பிக்கிறார். ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், ஈசுவரன் இவர்களை நான்கு கால்களாகவும் ஸதாசிவனை பலகையாகவும் கொண்ட ஆஸனத்தில் அம்பாள் வீற்றிருப்பதாக லலிதோபாக்யானம் முதலான கிரந்தங்களில் கூறப்பட்டுள்ளது.* **'पञ्चब्रह्मासनस्थिता, पञ्चप्रेतासनासीना, पञ्चप्रेत-मञ्चाधिशायिनी'** *என்று லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் இந்த விஷயம் கூறப்பட்டுள்ளது. ஸௌந்தர்யலஹரியிலும்* **'गतास्ते मञ्चत्वं'** *என்று 92வது சுலோகத்திலும்* **'शिवाकारे मञ्चे'** *என்று 8வது சுலோகத்திலும் ஆசார்யாள் கூறியுள்ளார் ப்ரஹ்மாதிகளும் அருகில் இருந்து அம்பாளுக்குக் கைங்கர்யம் செய்கிறார்கள் என்பது இதன் கருத்து. இப்பேற்பட்ட சிறந்த ஆஸனத்தை த்யானம் செய்வதன் மூலம் மானஸமாகவே கல்பித்துக் கொடுக்கிறார். இதுபோலவே குங்குமம், சந்தனம் கலந்த தீர்த்தத்தால் பாத்யமும், ரத்னங்களும் அக்ஷதைகளும் கலந்த தீர்த்தத்தால் அர்க்யமும், சுத்த தீர்த்தத்தால் ஆசமநீயமும் மனதாலேயே கல்பித்து இவை எல்லாம் உனக்கு ப்ரீதியைத் தரட்டுமென்று ப்ரார்த்திக்கிறார்.* (3)

*அடுத்ததாக ஸ்னானத்தைப்பற்றி கூறுகிறார் :-*

**लक्ष्ये योगिजनस्य रक्षितजगज्जाले विशालेक्षणे**
**प्रालेयाम्बुपटीर कुङ्कुमलसत्कर्पूरमिश्रोदकैः ।**

गोक्षीरैरपि नारिकेलसलिलैः शुद्धोदकैर्मन्त्रितैः
स्नानं देवि धिया मयैतदखिलं संतुष्टये कल्पताम् ॥ ४ ॥

லக்ஷ்யே யோகிஜனஸ்ய ரக்ஷித ஜகஜ்ஜாலே
விசாலேக்ஷணே
ப்ராலேயாம்பு படீர குங்கும லஸத் கர்பூர
மிச்ரோதகை: ।
கோக்ஷீரைரபி நாரிகேள ஸலிலை: சுத்தோதகைர்
மந்த்ரிதை:
ஸ்னானம் தேவி தியா மயைததகிலம் ஸந்துஷ்டயே
கல்பதாம் ॥

**योगि-जनस्य** – யோகி ஜனங்களுக்கு, **लक्ष्ये** - அடையவேண்டியதாக உத்தேசிக்கப்பட்டவளே, **रक्षित-जगत्-जाले** – உலகங்களின் கூட்டத்தைக் காப்பாற்றுபவளே, **विशालेक्षणे** – விசாலமான கண்களையுடையவளே, **देवि** – ஹே தேவி, **प्रालेय-अम्बु** – பனி நீர் **पटीर** – சந்தனம், **कुङ्कुम** - குங்குமப்பூ, **लसत्** – சிறந்த, **कर्पूर** – பச்சைக்கர்ப்பூரம் இவைகளுடன், **मिश्र** – கலந்த, **उदकैः**–ஜலங்களினுலேயும், **गोक्षीरैः अपि** – பசுவின் பால்களினுலும்கூட, **नारिकेल सलिलैः** – தேங்காய் இளநீர்களினுலும், **मन्त्रितैः** – மந்திரங்களினுல் அபிமந்த்ரணம் செய்யப்பட்ட, **शुद्ध-उदकैः** – சுத்தமான தீர்த்தங்களினுலும், **स्नानं** – ஸ்நாநம். **एतत्** – இது, **अखिलं** – எல்லாம், **मया** – என்னுல், **धिया** – மனஸினுலேயே (அர்ப்பணம் செய்யப்படுவது) **संतुष्टये** – உன்னுடைய ஸந்தோஷத்தின் பொருட்டு, **कल्पतां** – ஏற்படட்டும்.

*யோகிகள் அம்பிகையை அடைவதையே முக்ய லக்ஷ்யமாகக் கொண்டு அதற்காகவே சித்தத்தை அடக்கி யோகாப்யாஸம் புரிகிருர்கள். அகன்ற கண்கள் உள்ள தேவி உலகமாதாவானதால் உலகம் முழுவதையும் காப்பாற்றுகிருள். அவளுக்கு பனிநீர், குங்குமப்பூ, பச்சைக்கற்பூரம் இவை கலந்த சந்தனத்தாலும் பசுவின் பாலினுலும் இளநீரினுலும் வேதமந்திரங்கள் ஜபித்த சுத்த தீர்த்தத்தாலும் ஸ்னனம் செய்வதாக மனதால் தியானித்து அதை அவளுடைய பிரீதிக்காக அர்ப்பணம் செய்கிருர்.* (4)

அடுத்த சுலோகத்தில் வஸ்திரத்தையும் யக்ஞோபவீதத்தையும் ஸமர்ப்பிக்கிறார் :—

ह्रींकाराङ्कितमन्त्रलक्षिततनो हेमाचलात्संचितैः
रत्नैरुज्ज्वलमुत्तरीयसहितं कौसुम्भवर्णांशुकम् ।
मुक्तासंततियज्ञसूत्रममलं सौवर्णतन्तूद्भवं
दत्तं देवि धिया मयैतदखिलं संतुष्टये कल्पताम् ॥ ५ ॥

ஹ்ரீங்காராங்கித மந்த்ர லக்ஷித தநோ ஹேமாசலாத்
ஸஞ்சிதை:
ரத்னைருஜ்வலமுத்தரீய ஸஹிதம் கௌஸும்ப
வர்ணாம்ஶுகம் ।
முக்தா ஸந்ததி யஜ்ஞஸூத்ரமமலம் ஸௌவர்ண
தந்தூத்பவம்
தத்தம் தேவி தியா மயைததகிலம் ஸந்துஷ்டயே
கல்பதாம் ॥

**ह्रींकार-अङ्कित-मन्त्र-लक्षित-तनो** – 'ஹ்ரீம்' என்ற அக்ஷரத்துடன் கூடிய மந்திரத்தினால் குறிப்பிடப்பட்ட சரீரத்தையுடைய **देवि** – ஹே தேவி, **हेम-अचलात्** – ஸ்வர்ணமலையாகிய மேருபர்வதத்திலிருந்து, **संचितैः** – கொண்டுவந்து சேர்க்கப்பட்டிருக்கும், **रत्नैः**– ரத்னங்களால், **उज्ज्वलं** – மிகவும் பிரகாசிக்கிறதும், **उत्तरीय-सहितं** – மேல் வஸ்திரத்துடன் கூடியதுமான, **कौसुम्भ वर्ण-अंशुकं** – சிவப்பு வர்ணமுள்ள வஸ்திரம், **अमलं** – பரிசுத்தமானதும், **सौवर्ण-तन्तु-उद्भवं** ஸ்வர்ணநூல்களால செய்யப்பட்டதும், **मुक्ता-संतति-यज्ञसूत्रं**-முத்துக்கள் கோர்த்துள்ளதுமான யக்ஞோபவீதம், **एतत्** – இது, **अखिलं**–எல்லாம் **मया** – என்னால், **धिया** – மனஸினாலேயே, **दत्तं** – ஸமர்ப்பிக்கப்பட்டது, **संतुष्टये** – உன் ஸந்தோஷத்தின் பொருட்டு, **कल्पतां** – ஏற்படட்டும்.

அம்பாளுடைய மந்திரங்களில் "ஹ்ரீம்" என்பது மிகச் சிறந்தது. இதனாலும், ஹ்ரீங்காரத்துடன் கூடிய வேறு மந்திரங்களாலும் அவளுடைய ஸ்வரூபத்தை அறிந்துகொள்ளலாம். இந்த மந்திரத்தை ஜபித்து உபாஸிப்பவர்களின் மனதில்

அம்பிகையின் ஸ்வரூபம் புலப்படும். அம்பிகையின் ஸ்வரூபத்தை அறிந்துகொள்ள இம்மந்திரம் முக்கிய ஸாதனமாகிறது என்பது கருத்து. பொன் மலையான மேரு பர்வதத்திலிருந்து கொண்டு வந்து சேகரித்துவைக்கப்பட்ட ரத்னங்கள் பதித்த சிகப்புநிறப் பட்டாடையையும், மேலாடையையும், முத்துக்கள் கோர்த்து தங்க நூலால் செய்யப்பட்ட சிறந்த யக்ஞோபவீதத்தையும் உனது திருப்திக்காக மனதாலேயே கல்பித்து ஸமர்ப்பிக்கிறேன்.

பிறகு பலவித ஆபரணங்களால் தேவியை அலங்கரிக்கிறார்:-

हंसैरप्यतिलोभनीयगमने हारावलीमुज्ज्वलां
हिन्दोलद्युतिहीरपूरिततरे हेमाङ्गदे कङ्कणे ।
मञ्जीरौ मणिकुण्डले मकुटमप्यर्धेन्दुचूडामणिं
नासामौक्तिकमङ्गुलीयकटकौ काञ्चीमपि स्वीकुरु ॥ ६ ॥

ஹம்ஸைரப்யதி லோபநீய கமநே ஹாராவளீ முஜ்வலாம்
ஹிந்தோல த்யுதி ஹீர பூரிததரே ஹேமாங்கதே
கங்கணே ।
மஞ்ஜீரௌ மணிகுண்டலே மகுடமப்யர்தேந்து
சூடாமணிம்
நாஸா மௌக்திகமங்குளீய கடகௌ காஞ்சீமபி
ஸ்வீகுரு ॥

**हंसैः अपि** – ஹம்ஸ பக்ஷிகளினுலும் கூட, **अति-लोभनीय गमने** – மிக்க ஆசைபபட கூடிய நடையுள்ளவளே, **उज्ज्वलां** – நன்கு பிரகாசிககிற, **हार-आवलीं** – ஹாரங்களுடைய வரிசையையும், **हिन्दोलद्युति** – ஊஞ்சல மாதிரி ஆடுகிற அதாவது நீரோட்டமுள்ள காந்தியுடன் கூடிய, **हीर-पूरिततरे** – வைரங்களினுல அதிகம் நிரம்பிய **हेम-अङ्गदे** - ஸ்வர்ண தோளவளை இரண்டையும, **कङ्कणे** – இரண்டு கங்கணங்களையும், **मञ्जीरौ**–இரணடு பாதஸரங்களையும், **मणि-कुण्डले**– ரதனமிழைதத இரண்டுகுண்டலங்களையும், **मकुटमपि** – கிரீடததையும் **अर्ध-इन्दु-चूडा-मणिं** – பாதிசந்திரன் போலுள்ள (அலலது, பாதிசந்திர ஞகிற) சூடாமணியையும, **नासा-मौक्तिकं** – முத்து மூக்குத்தியையும், **अङ्गुलीय कटकौ** – மோதிரங்களுடன் இரண்டு காப்புகளையும, **काञ्चीमपि** - ஒட்டியாணததையும், **स्वीकुरु** – ஏற்றுக்கொள்.

உலகில் 'அன்னநடை' என்று அன்னத்தின் கதியைச் சிறப்பாகக்கூறுவது வழக்கம். அன்னநடையாள் என்று பெண்களைப் புகழுவதுண்டு. இப்பேற்ப்பட்ட அன்னமும் அம்பாளின் நடையழகைப்பார்த்து அம்மாதிரியான அழகிய நடை தனக்குக் கிட்டவில்லையே என்று எண்ணி அதை அடைய மிகுந்த ஆசை கொள்கிறதாம். அந்த அம்பிகைக்கு பலவித ஹாரங்கள், சிறந்த ஒளியும் நீரோட்டமும் உள்ள வைரங்கள் ஏராளமாக பதிக்கப் பெற்ற தங்கத்தோள்வளை, கங்கணங்கள், பாதஸரங்கள், ரத்ன குண்டலங்கள், கிரீடம் பாதிப்பிறை வடிவமான சூடாமணி மூக்கில் நல்முத்து, மோதிரம், காப்பு, ஒட்டியாணம் இவைகளை மனதாலேயே கல்பித்து ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுகிறார். (6)

இவ்விதம் நகைகளால் அலங்காரம் செய்து விட்டு சந்தனம் குங்குமம் முதலானதுகளை சாற்றுகிறார் :—

सर्वाङ्गे घनसारकुङ्कुमघनश्रीगन्धपङ्काङ्कितं
कस्तूरीतिलकं च फालफलके गोरोचनापत्रकम् ।
गण्डादर्शनमण्डले नयनयोः दिव्याञ्जनं तेऽञ्चितं
कण्ठाब्जे मृगनाभिपङ्कममलं त्वत्प्रीतये कल्पताम् ॥ ७ ॥

ஸர்வாங்கே கநஸார குங்கும கந ஸ்ரீகந்த பங்காங்கிதம்
கஸ்தூரீ திலகம் ச பாலபலகே கோரோசநா பத்ரகம் ।
கண்டாதர்ஶந மண்டலே நயநயோர்
திவ்யாஞ்ஜநம் தேஞ்சிதம்
கண்டாப்ஜே ம்ருகநாபி பங்கமமலம்
த்வத்ப்ரீதயே கல்பதாம் ॥

**सर्वाङ्गे**—உடல் முழுவதிலும், **घनसार-कुङ्कुम-घनश्रीगन्ध-पङ्काङ्कितं**-பச்சைக்கர்பூரம் குங்குமப்பூ, இவை நிறைந்த சந்தனக்குழம்பினால் பூசப்பட்டும், **फालफलके**—பலகைபோல் அகன்ற நெற்றியில், **कस्तूरी-तिलकं च** கஸ்தூரி திலகமும் **गण्डादर्शनमण्डले**—கண்ணாடி போன்ற கன்ன பிரதேசத்தில், **गोरोचना पत्रकं**-கோரோசனாபத்ராவளியும் **नयनयोः**-இரண்டு கண்களிலும், **दिव्य-अञ्जनं** – உத்தமமானமையும், **ते**—உன்னுடைய, **कण्ठाब्जे**—தாமரை போலுள்ள கழுத்தில், **अञ्चितं**—

பூசப்பட்ட, **अमल**-பரிசுத்தமான, **मृगनाभि-पङ्क**-கஸ்தூரிக்குழம்பும், **त्वत्-प्रीतये**-உன்னுடைய பிரீதியின் பொருட்டு, **कल्पतां**-ஏற்படட்டும்.

அம்பிகையின் உடல் முழுவதும் பூசுவதற்காக உயர்ந்த பச்சைக்கர்ப்பூரமும் குங்குமப்பூவும் நிறையக் கலந்த செஞ்சந்தனக் குழம்பும், நெற்றியில் இட்டுக்கொள்ள கஸ்தூரி திலகமும் கன்னத்தில் அலங்காரம் செய்ய கோரோசனையும் கண்களுக்கு கிறந்தமையும் கழுத்தில் பூசிக்கொள்ள கஸ்தூரிக்குழம்பும் இது எல்லாவற்றையும் அம்பாளின் ப்ரீதிக்காக மனத்தாலேயே கல்பித்து அர்ப்பணம் செய்கிறார். (7)

இனி புஷ்பமாலைகளை சாற்றுகிறார் :—

**कल्हारोत्पलमल्लिकामरुवकैः सौवर्णपङ्केरुहै-**
**र्जातीचम्पकमालतीवकुलकैर्मन्दारकुन्दादिभिः ।**
**केतक्या करवीरकैर्बहुविधैः क्लृप्ताः स्रजो मालिकाः**
**संकल्पेन समर्पयामि वरदे संतुष्टये गृह्यताम् ॥ ८ ॥**

கல்ஹாரோத்பல மல்லிகா மருவகை :
ஸௌவர்ண பங்கேருஹை :
ஜாதீசம்பக மாலதீ வகுளகைர் மந்தார குந்தாதிபி : ।
கேதக்யா கரவீரகைர் பஹுவிதை :
க்லுப்தா : ஸ்ரஜோ மாலிகா :
ஸங்கல்பேந ஸமர்பயாமி வரதே
ஸந்துஷ்டயே க்ருஹ்யதாம் ॥

**कल्हार-उत्पल-मल्लिका-मरुवकैः**-செங்கழுநீர்ப்பூ, நீலோத்பலம், மல்லிகை, மரு இவைகளாலும், **सौवर्ण-पङ्केरुहैः**-தங்கத்தாமரைகளாலும், **जाती-चम्पक-मालती-वकुलकैः**-ஜாதி, சம்பகம், மாலதி, மகிழம்பூ, இவைகளாலும், **मन्दार-कुन्द-आदिभिः** மந்தாரம், குந்தம் முதலியவைகளாலும், **केतक्या**-தாழம்பூவினாலும், **करवीरकैः** அரளிப பூக்களாலும், **बहुविधैः**-மற்றும பலவித புஷ்பங்களாலும், **क्लृप्ताः** தொடுக்கப்பட்ட, **स्रजः**-சிரஸ்ஸில் தரிக்கும் சரங்களையும், **मालिकाः**-மாலைகளையும், **संकल्पेन**-மனஸ் ஸங்கல்பத்தினாலேயே **समर्पयामि**-

ஸமர்ப்பணம் செய்கிறேன், **वरदे**- வரங்களைக் கொடுப்பவளே, **संतुष्टये**– உன்னுடைய ஸந்தோஷத்தின் பொருட்டு, **गृहाण** –ஏற்றுக்கொள்.

*செங்கழுநீர்ப்பூ, நீலோத்பலம், மல்லிகை, மரு, ஸுவர்ணத் தாமரை அல்லது ஸுவர்ணம் போல் பிரகாசிக்கும் தாமரை, ஜாதிப்பூ, சம்பகம், மாலதீ, மகிழம்பூ, மந்தாரபுஷ்பம், குந்தபுஷ்பம் தாழம்பூ, அரளி மற்றும் பலவித பூக்களாலும் தொடுத்துக் கட்டப் பட்ட சிரஸ்ஸில் தரிக்கும் சரங்களையும் மாலைகளையும் மனஸ் ஸங்கல்பத்தாலேயே உனக்கு பிரீதியை உண்டுபண்ண அர்பணம் செய்கிறேன். பக்தர்களின் அபீஷ்டங்களைக் கொடுக்கும் ஹே தேவி, இவைகளை நீ ஏற்றுக்கொள்.* (8)

*இவ்விதமாக மூன்று சுலோகங்களால் தேவியை நன்கு அலங்காரம் செய்து விட்டு தூபம் தீபம், என்கிற இரண்டு உபசாரங்களையும் வரிசையாக மேலால் வரும் இரண்டு சுலோகங் களால் செய்கிறார் :—*

**हन्तारं मदनस्य नन्दयसि यैरङ्गैरनङ्गोज्ज्वलैः**
**यैर्भृङ्गावलिनीलकुन्तलभरैर्बध्नासि तस्याशयम् ।**
**तानीमानि तवाम्ब कोमलतराण्यामोदलीलागृहा-**
**ण्यामोदाय दशाङ्गगुग्गुलुघृतैर्धूपैरहं धूपये ॥ ९ ॥**

*ஹந்தாரம் மதநஸ்ய நந்தயஸி யை*
*ரங்கை ரநங்கோஜ்வலை:*
*யைர் ப்ருங்காவளி நீல குந்தளபரைர்*
*பத்நாஸி தஸ்யாசயம் ।*
*தாநீமாநி தவாம்ப கோமளதராண்*
*யாமோத லீலாக்ருஹா*
*ண்யாமோதாய தசாங்க குக்குலுக்ருதைர்*
*தூபைரஹம் தூபயே ॥*

**अम्ब**-தாயே, **अनङ्ग-उज्ज्वलैः**–காமவிலாசத்தால் நன்கு சோபிக்கும், **यैः**-எந்த **अङ्गैः**-அங்கங்களினால் **मदनस्य**–மன்மதனை, **हंतारं**-ஸம்ஹரித்த பரமேசுவரரை, **नन्दयसि**–ஸந்தோஷப்படுத்துகிறாயோ, **यैः**–எந்த, **भृङ्ग-आवलि-नील-कुन्तलभरैः**–வண்டுகளின் வரிசைபோல் கருத்த கேசபாரங்

களினால், **तस्य**–அந்த பரமேசுவரருடைய, **आशयं**–மனதை, **बध्नासि**–கட்டுப்படுத்துகிறாயோ, **तानि**–அந்த, **इमानि**–இந்த, **तव**–உன்னுடைய, **कोमलतराणि**–வெகு அழகாயுள்ள, **आमोद-लीला-गृहाणि**–வாஸனைகளுக்கு விளையாட்டு ஸ்தாபனமாயிருக்கும் அங்கங்களையும் கேசங்களையும், **दशाङ्ग-गुग्गुलु-घृतैः**–பத்து வாஸனை திரவியங்கள் சேர்ந்த ஸாம்பிராணிதைலத்தையுடைய, **धूपैः** – தூபங்களினால், **अहं** – நான் **आमोदाय**–உன்னுடைய ஸந்தோஷத்தையுத்தேசித்து, **धूपये**–வாஸிக்கச் செய்கிறேன்.

*மிக்க அழகுடன் விளங்கும் அம்பிகையின் அங்கங்கள் காமோத்தீபகமானவை. காமனை எரித்த போதிலும் பரமசிவன் இந்த அங்கங்களைப் பார்த்த மாத்திரத்தில் மனதில் காமம் ஏற்பட்டு பரவசமடைகிறார். வண்டுகளின் வரிசைகள் போல் நீண்ட மிகக் கருமையான கேசபாரத்தைப் பார்த்ததும் அதில் அவருடைய மனது கட்டுப்பட்டுவிடுகிறது இந்த உன் அங்கங்களும் கேசங்களும் இயற்கையிலேயே வாசனை பொருந்தியவை. மானஸமாக தசாங்கம், குக்குலுக்ருதம் இந்த தூப திரவ்யங்களின் புகைகளால் உனது ப்ரீதிக்காக உன் கேசங்களையும் அங்கங்களையும் வாசனையுள்ளதாகச் செய்கிறேன்.* (9)

लक्ष्मीमुज्ज्वलयामि रत्ननिवहोद्भास्वत्तरे मन्दिरे
मालारूपविलम्बितैर्मणिमयस्तम्भेषु संभावितैः ।
चित्रैर्हाटकपुत्रिकाकरधृतैर्गव्यैर्घृतैर्वर्धितै-
र्दिव्यैर्दीपगणैर्धिया गिरिसुते संतुष्टये कल्पताम् ॥ १० ॥

*லக்ஷ்மீமுஜ்வலயாமி ரத்நநிவஹோத்*
*பாஸ்வத்தரே மந்திரே*
*மாலாரூப விலம்பிதைர் மணிமய*
*ஸ்தம்பேஷு ஸம்பாவிதை: ।*
*சித்ரைர் ஹாடக புத்ரிகா கரத்ருதைர்*
*கவ்யைர் க்ருதைர் வர்த்திதைர்*
*திவ்யைர் தீபகணைர் தியா கிரிஸுதே*
*ஸந்துஷ்டயே கல்பதாம் ॥*

**रत्न-निवह-उद्भास्वत्तरे** – ரத்தினக்கூட்டத்தினால் வெகுநன்றாக பிரகாசிக்கிற, **मन्दिरे**–மாளிகையில், **मणिमय-स्तम्भेषु**–ரத்னங்களால்

செய்யப்பட்டிருக்கும் தூண்களில், **माला-रूप-विलम्बितैः** – மாலைகள் போல தொங்கவிட்டிருக்கிற, **संभावितैः**–சிலாக்கியமான, **चित्रैः**–பல விதமான, **हाटक-पुत्रिका-कर-धृतैः** – ஸுவர்ணப் பெண் பதுமைகளின் கைகளால் ஏந்தியவையாகவும், **गव्यैः**–பசுக்களின், **घृतैः**-நெய்களால், **वर्धितैः**-விருத்தி செய்யப்படுபவையாகவுமுள்ள, **दिव्यैः**–உத்தமமான, **दीप-गणैः**–தீபங்களின் கூட்டங்களால், **धिया**–மனதினாலேயே, **लक्ष्मीं**–காந்தியை, **उज्ज्वलयामि**-மிகவும் ஜ்வலிக்கும்படி செய்கிறேன். **गिरि-सुते** – பர்வதராஜ புத்ரியே, **संतुष्टये**–(இது) உன்னுடைய ஸந்தோஷத்தின் பொருட்டு, **कल्पतां**–ஏற்படட்டும்.

*அம்பாள் வாஸம் செய்யும் மாளிகையில் எங்கும் ஏராளமாக நவரத்தினங்கள் பதித்திருப்பதால் அவை மாளிகை முழுவதையும் ஒளி மயமாகச் செய்கிறது. இந்த மந்திரத்தில் ரத்னமயமான தூண்களில் மாலைவடிவத்தில் தீபங்கள் தொங்கவிடப்பட்டுள்ளன மற்றும் பலவிதமான தீபங்களை தங்கப்பதுமைகள் கைகளால் தாங்கிக்கொண்டிருக்கின்றன. இந்த தீபங்கள் பசு நெய்யால் மிகுந்த ஜ்வாலையுடன் விளங்குகின்றன. மனதால் இவ்விதமான தீபங்களை கல்பித்து உன் மந்திரத்தில் மிகுந்த சோபை விளங்கும்படி செய்கிறேன் ஹே பர்வதகுமாரி! இது உனக்கு ப்ரீதியை உண்டுபண்ணட்டும்.* (10)

*தூபதீபங்களான பின் கிரமப்படி நிவேதனம் செய்கிறார்:—*

**ह्रींकारेश्वरि तप्तहाटककृतैः स्थालीसहस्रैर्भृतं**
**दिव्यान्नं घृतसूपशाकभरितं चित्रान्नभेदं तथा ।**
**दुग्धान्नं मधुशर्करादधियुतं माणिक्यपात्रे स्थितं**
**माषापूपसहस्रं अम्ब सफलं नैवेद्यं आवेदये ॥ ११ ॥**

*ஹ்ரீங்காரேச்வரி தப்த ஹாடக க்ருதை:*
*ஸ்தாலீஸஹஸ்ரைர் ப்ருதம்*
*திவ்யாந்நம் க்ருத ஸூப ஶாக பரிதம்*
*சித்ராந்நபேதம் ததா ।*
*துக்தாந்நம் மது ஶர்கரா ததியுதம்*
*மாணிக்யபாத்ரே ஸ்திதம்*
*மாஷாபூப ஸஹஸ்ரமம்ப ஸபலம் நைவேத்ய மாவேதயே ॥*

**ह्रींकार ईश्वरि**-ஹ்ரீம் என்ற அக்ஷரத்தின் ஈசுவரியாயிருக்கும் (மந்திரத்தால் உபாஸிக்கப்படும் தேவதையான), **अम्ब**-தாயே, **तप्त-हाटक-कृतैः**-உருக்கின தங்கத்தினால் செய்யப்பட்ட, **स्थाली सहस्रैः**-ஆயிரக்கணக்கான பாத்திரங்களால், **भृतं**-தரிக்கப்பட்டிருக்கிற, **घृत-सूप-शाक-भरितं**-நெய், பருப்பு, ஸஸ்யாதிகளுடன் கூடிய, **दिव्यान्नं**-உத்தமமான அன்னம், **तथा**-அப்படியே, **चित्रान्नभेदं** - பலவிதமான சித்ரான்னம், **माणिक्यपात्रे**-மாணிக்ய பாத்திரத்தில், **स्थितं**-இருப்பதும், **मधु-शर्करा-दधि-युतं**-தேன், சர்க்கரை, தயிர் இவைகளுடன் கூடியதுமான, **दुग्धान्नं**-க்ஷீரான்னம், **सफलं**-பழங்களோடு கூடிய, **माषापूप सहस्रं** - ஆயிரம் உளுந்து வடைகள் (இவ்விதமான) **नैवेद्यं**-நைவேத்யத்தை, **आवेदये**-தெரிவிக்கிறேன்.

*ஹ்ரீங்காரத்திற்கு ஈசுவரி அவளுடைய பீஜாக்ஷரம் இது இதற்கு தேவதை அம்பிகைதான். ஹ்ரீங்காரம் அவளுடைய ஸ்வரூபமே. உருக்கிய பத்தரைமாத்துத் தங்கத்தால் செய்யப்பட்ட ஆயிரக்கணக்கான பாத்திரங்களில் நெய், பருப்பு, ஸஸ்யாதிகளுடன் சிறந்த சுத்தான்னமும், பலவகையான சித்ரான்னமும் வைக்கப்பட்டுள்ளது. மாணிக்க பாத்திரத்தில் தேன், சர்க்கரை, தயிரும் க்ஷீரான்னமும்(பாயஸமும்) வைக்கப்பட்டுள்ளது. பலவித பழங்களுடன் ஆயிரக்கணக்கான உளுந்து வடைகளும் உள்ளன. ஹே தாயே! மனதால் கல்பிக்கப்பட்ட இவைகளை உனக்கு நைவேத்யமாக அர்ப்பணம் செய்கிறேன்.* (11)

*தாம்பூலம் அடுத்த சுலோகத்தில் ஸமர்ப்பிக்கப்படுகிறது.:—*

**सच्छायैः वरकेतकीदलरुचाताम्बूलवल्लीदलैः**
**पूगैः भूरिगुणैः सुगन्धिमधुरैः कर्पूरखण्डोज्ज्वलैः ।**
**मुक्ताचूर्णविराजितैः बहुविधैः वक्त्राम्बुजामोदनैः**
**पूर्णा रत्नकलाचिका तव मुदे न्यस्ता पुरस्तात् उमे ॥**

*ஸச்சாயைர் வரகேதகீதளருசா தாம்பூலவல்லீதளை:*
*பூகைர் பூரிகுணை: ஸுகந்திமதுரை: கர்ப்பூர*
*கண்டோஜ்வலை:* ।
*முக்தாசூர்ணவிராஜிதைர் பஹுவிதைர் வக்த்ராம்புஜா*
*மோதனை:*
*பூர்ணா ரத்னகலாசிகா தவ முதே ந்யஸ்தா புரஸ்தாதுமே* ॥

**सच्छायैः**—நல்ல அழகு பெற்ற, **वर-केतकी-दलरुचा**—உத்தமமான தாழம்பூ இதழின் நிறமுள்ள, **ताम्बूल वल्ली-दलैः**—வெற்றிலைக்கொடியின் இலைகளினுலும், **भूरि-गुणैः**—அநேகம் குணங்களுடன் கூடியதும், **सुगन्धि-मधुरैः**—நன்கு வாசனையுள்ளதும் மதுரமாயுள்ளதுமான, **पूगैः**—பாக்குகளினுலும், **कर्पूर-खण्ड.उज्ज्वलैः**—கர்பூரத்துண்டுகளால் சோபிக்கிறதும், **मुक्ता-चूर्ण-विराजितैः**—முத்துக்களின் சூர்ணத்தினுல் காந்தியுடையதும், **बहुविधैः** – பலவிதமானதுமான, **वक्त्राम्बुजामोदनैः** – தாமரைபோலுள்ள வாய்க்கு வாஸனையுண்டுபண்ணக்கூடிய பதார்த்தங்களினுல், **पूर्णा**—நிரம்பிய, **रत्न-कलाचिका**—ரத்னமிழைத்த காளாஞ்சி (தாம்பூலப்பெட்டி), **उमे**—ஹே உமாதேவியே, **तव**—உன்னுடைய, **मुदे**—ஸந்தோஷத்தின் பொருட்டு, **पुरस्तात्**—முன்னுல், **न्यस्ता**—வைக்கப்பட்டிருக்கிறது.

*பார்ப்பதற்கு மிக்க அழகுடன் விளங்குகிறவைகளான சிறந்த தாழம்பூ நிறமுள்ள வெற்றிலைகளும் வாசனை, மாதுர்யம் மற்றும் பலவித குணங்களுள்ள பாக்கு, பச்சைக்கர்பூரத்துண்டுகளுடன் கூடிய நல்முத்துச் சுண்ணும்பு, வாய்க்கு வாசனையை உண்டுபண்ணும் பரிமள வஸ்துக்கள் இவை நிரம்பிய தாம்பூலப் பெட்டியை மானஸமாகக் கல்பித்து அம்பிகையின் திருப்திக்காக அவள் முன்னுல் வைத்து விட்டார்.* (12)

*பிறகு கர்பூர ஆரத்தி செய்விக்கிருர்:—*

कन्याभिः कमनीयकान्तिभिरलङ्कारामलारार्तिका
पात्रे मौक्तिकचित्रपङ्क्तिविलसत्कर्पूरदीपालिभिः ।
तत्तत्तालमृदङ्गगीतसहितं नृत्यत्पदाम्भोरुहं
मन्त्राराधनपूर्वकं सुविहितं नीराजनं गृह्यताम् ॥ १३ ॥

*கந்யாபி: கமநீயகாந்திபிரலங்காராமலாரார்த்திகா-*
*பாத்ரே மௌக்திகசித்ரபங்க்திவிலஸத்கர்பூரதீபாளிபி:* ।
*தத்தத்தாள ம்ருதங்ககீதஸஹிதம்*
*ந்ருத்யத்பதாம்போருஹம்*
*மந்த்ராராதநபூர்வகம் ஸுவிஹிதம் நீராஜநம்*
*க்ருஹ்யதாம்* ॥

**कमनीय-कान्तिभिः**—மனோஹரமான சோபையுடன் கூடிய, **कन्याभिः**—கன்னிகைகளால், **अलङ्कारामल-आरातिकापात्रे**—நிர்மலமான அலங்கார ஆரத்தித்தட்டில், **मौक्तिक-चित्र-पङ्क्ति-विलसत्-कर्पूर-दीप आलिभिः**—முத்துக்களால் செய்யப்பட்ட சித்திரகோலங்களுடன் விளங்கும் கர்ப்பூர தீபங்களின் வரிசைகளால், **तत्-तत्-ताल-मृदङ्ग-गीत सहितं**—அதற்கு ஏற்பட்ட தாளத்துடன் மிருதங்க வாசிப்பு பாட்டு இவைகளுடன் சேர்ந்து, **नृत्यत्-पद-अम्भोरुहं**—ந்ர்த்தனம் செய்யும் தாமரைபோலுள்ள பாதங்களுடன், **मन्त्र-आराधन-पूर्वकं**—மந்திரத்தினால் ஆராதனத்தை முன்னிட்டுக்கொண்டு, **सु-विहितं**—நன்கு செய்யப்படும் **नीराजनं**—கர்ப்பூர நீராஜனம், **गृह्यतां**—அங்கீகரிக்கப்படட்டும்.

*அழகும் காந்தியும் நிறைந்த அநேகம் கன்னிகைகள் பரிசுத்த மான ஆரத்தித்தட்டை நன்கு அலங்கரித்து அதில் முத்துக்களால் பலவித கோலமிட்டு அதில் ஏற்றிவைக்கப்பட்ட கர்பூரதீப வரிசைகளால், பாட்டு, மிருதங்கம், தாளம், இவைகளுக்கேற்ப நாட்யமாடிக்கொண்டு நீராஜனம் செய்கிறார்கள். பிராஹ்மணர்கள் வேதமந்திரங்களைச்சொல்லி உபசாரம் செய்கிறார்கள். இவ்வித நீராஜனத்தை நீ ஏற்றுக்கொள்ளவேண்டும்.* (13)

*நீராஜனமான பிற்பாடு சத்திராதி உபசாரங்களை ஸமர்ப்பிக்கிறார்:—*

**लक्ष्मीः मौक्तिकलक्षकल्पितसितच्छत्रं तु धत्ते रसात्**
**इन्द्राणी च रतिश्च चामरवरे धत्ते स्वयं भारती ।**
**वीणां एणविलोचनाः सुमनसां नृत्यन्ति तद्रागव-**
**द्भावैः आङ्गिकसात्त्विकैः स्फुटरसं मातस्तदाकर्ण्यताम् ॥**

*லக்ஷ்மீர் மௌக்திகலக்ஷகல்பிதஸிதச்சத்ரம் து தத்தே ரஸாத்*
*இந்த்ராணீ ச ரதிச்ச சாமரவரே தத்தே ஸ்வயம் பாரதீ ।*
*வீணாமேணவிலோசநா: ஸுமநஸாம் ந்ருத்யந்தி தத்ராகவ*
*பாவைராங்கிகஸாத்விகை: ஸ்புடரஸம் மாதஸ் ததாகர்ண்யதாம்*

**लक्ष्मीः तु**-லக்ஷ்மீதேவியோவெனில், **मौक्तिक-लक्ष-कल्पित-सित-छत्रं** லக்ஷக்கணக்கான முத்துக்களால் செய்யப்பட்டிருக்கும் வெண்குடையை **रसात्**-பிரீதியுடன், **धत्ते**-பிடிககிறாள். **इन्द्राणी च**-இந்திராணியும், **रतिः च**-ரதிதேவியும், **चामर-वरे** உத்தமமான இரண்டு சாமரங்களை (பிடித்து வீசுகிறார்கள்) **भारती**-ஸரஸ்வதீ தேவி, **स्वयं**-தானே, **वीणां**-வீணையை, **धत्ते**-தரிக்கிறாள். (தரித்து வாசிக்கிறாள்) **सुमनसां**-தேவர் களுடைய, **मृग विलोचनाः**-மானைபோன்ற கண்களுள்ள ஸ்திரீகள் **तद्रागवत्**-அந்தந்த ராகங்களுக்குத்தக்கபடி, **आङ्गिक सात्विकैः**-ஆங்கிகமாயும (அங்கங்களின் சேஷ்டாரூபமாயும்) ஸாத்விகமாயும் (வியர்வை, ப்ரமை, மயிர்க்கூச்சல் முதலியவைகளை நடித்துக் காட்டுகின்றதாயும்) உள்ள அபிநயங்களோடும், **भावैः**-பாவங்களோடும் **स्फुट-रसं**-ரஸங்கள் நன்கு வெளியாகும்படி, **नृत्यन्ति**-நர்த்தனம் செய்கிறார்கள். **मातः**-தாயே, **तत्**-அதெல்லாம், **आकर्ण्यतां**-நன்கு கேட்கப்படட்டும்.

*லக்ஷக்கணக்கான முத்துக்களால் செய்யப்பட்ட வெண் குடையை பிரீதியோடு பிடித்து ஸரஸ்வதி உபசாரம் செய்கிறாள். இந்திராணியும் ரதிதேவியும் இருபக்கங்களில் நின்று சாமரத்தைக் கையில் பிடித்துக் கொண்டு வீசுகிறார்கள். ஸரஸ்வதி தானாகவே அம்பாளுக்கு எதிரில் அமர்ந்து வீணை வாசிக்கிறாள். மான் களுடைய கண்கள் போன்ற கண்களுள்ள தேவஸ்திரீகள் நர்த்தனம் செய்கிறார்கள். அந்தந்த ராகத்துக்குத் தக்கபடி செய்யும் அபிநயங்களில் அங்கசேஷ்டைகளால் பாவத்தையும் ரஸத்தையும் வியர்வை, மயிர்க்கூச்சல் முதலானவற்றையும் நன்கு எடுத்துக்காட்டுகிறார்கள்.* *(14)*

*இவ்விதமாக உபசாரங்களை ஸமர்ப்பணம் செய்துவிட்டு கடைசியாக ஸ்தோத்ரம், பிரதக்ஷிணம், நமஸ்காரம் இவைகளைப் பற்றி அடுத்த சுலோகத்தில் சொல்கிறார் :—*

**ह्रींकारत्रयसंपुटेन मनुनोपास्ये त्रयीमौलिभि-**
**र्वाक्यैर्लक्ष्यतनो तव स्तुतिविधौ को वा क्षमेताम्बिके ।**
**सल्लापाः स्तुतयः प्रदक्षिणशतं संचार एवास्तु ते**
**संवेशो नमसः सहस्रमखिलं त्वत्प्रीतये कल्पताम् ॥ १५ ॥**

*ஹ்ரீங்காரத்ரய ஸம்புடேந மநுநோபாஸ்யே*
*த்ரயீமௌளிபிர்*
*வாக்யைர் லக்ஷ்யதநோ தவ ஸ்துதிவிதௌ*
*கோ வா க்ஷமேதாம்பிகே ।*
*ஸல்லாபா: ஸ்துதய: ப்ரதக்ஷிணசதம்*
*ஸஞ்சார ஏவாஸ்து தே*
*ஸம்வேசோ நமஸ: ஸஹஸ்ரமகிலம்*
*த்வத் ப்ரீதயே கல்பதாம் ॥*

**ह्रींकार-त्रय-संपुटेन**–மூன்று ஹ்ரீங்காரங்கள் சேர்ந்துள்ள, **मनुना**-மந்திரத்தினுல், **उपास्ये**–உபாஸிக்கப்படுகிறவளே, **त्रयी-मौलिभिः**-வேத சிரஸ்ஸுகளாகிற உபநிஷத்துக்களிலுள்ள, **वाक्यैः** – வாக்கியங்களினுல், **लक्ष्यतनो**–குறிப்பாக அறியத்தக்க ஸ்வரூபமுள்ளவளே, **तव**–உன்னை, **स्तुति-विधौ**–ஸ்தோத்ரம் செய்கிற முறையில், **को वा**-யார்தான், **क्षमेत**–சக்தியுள்ளவனுக இருக்க முடியும்? **अम्बिके**-ஹே தாயே, **सल्लापाः**–நல்ல பேச்சுகள், **स्तुतयः**–ஸ்தோத்ரங்கள். **संचार एव**–சஞ்சாரமே, **ते**–உனக்கு, **प्रदक्षिण-शतं**–நூற்றுக்கணக்கான பிரதக்ஷிணங்களாக, **अस्तु**-இருக்கட்டும், **संवेशः**–படுத்துக்கொள்வது, **नमसः** – நமஸ்காரங்களின், **सहस्रं** – ஆயிரம். இவ்விதம், **अखिलं**-எல்லாம், **त्वत्प्रीतये**–உன் ப்ரீதியின் பொருட்டு, **कल्पतां**–ஏற்படட்டும்.

*இவ்விதமாக பலவிதமான உபசாரங்களை மானஸமாக அர்ப்பணம் செய்து விட்டு ப்ரதக்ஷிண நமஸ்கார ஸ்தோத்திரங்களைச் செய்ய எண்ணியதும் அம்பிகையின் திவ்யமஹிமைகள் மனதில் விளங்கவாரம்பித்து விட்டன. கூடவே தனது அசக்தியும் தோன்றுகிறது மூன்று ஹ்ரீங்காரங்கள் அடங்கிய ஸ்ரீவித்யா பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தை வாக்கால் ஜபம் செய்துகொண்டு மஹான்கள் உன்னுடைய ஸகுணமான ஸ்வரூபத்தை மனதில் தியானிக்கிருர்கள். வேதத்தின் கடைசி பாகமான உபநிஷத்திலுள்ள வாக்கியங்கள் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாத உன்னுடைய பரமார்த்த ஸ்வரூபத்தை நேரிடையாக போதிக்க முடியாமல் லக்ஷணை என்ற முறையில் காட்டுகின்றன. இவ்வித திவ்ய மஹிமையுள்ள உன்னை ஸ்தோத்ரம் செய்ய யாருக்கு சக்தியுள்ளது? ஸ்தோத்திரம் செய்யவோ, பிரதக்ஷிண-நமஸ்காரங்கள் செய்யவோ நான் கொஞ்சமும் சக்தி*

யற்றவன் ஆகையால் நான் பேசும் பேச்சுக்களையே ஸ்தோத்திரங்களாகவும், நான் உலகில் ஸஞ்சாரம் செய்வதை நூற்றுக் கணக்கான பிரதக்ஷிணமாகவும், படுத்துக்கொள்வதை ஆயிரக் கணக்கான நமஸ்காரங்களாகவும் பாவித்து ஏற்றுக்கொண்டு பிரீதியடைந்து அருள் புரியவேண்டும் என்று வேண்டுகிறார். ஸௌந்தர்யலஹரியில் 'जपो जल्पः' என்ற சுலோகத்திலும் இதே கருத்தைக்காணலாம். (15)

இந்த ஸ்தோத்திரத்தால் மானஸ பூஜை செய்பவருக்கு உண்டாகும் பலனை அடுத்த சுலோகத்தால் கூறுகிறார்:—

श्रीमन्त्राक्षरमालया गिरिसुतां यः पूजयेच्चेतसा
संध्यासु प्रतिवासरं सुनियतस्तस्यामलं स्यान्मनः ।
चित्ताम्भोरुहमण्टपे गिरिसुता नृत्तं विधत्ते रसा-
द्वाणी वक्त्रसरोरुहे जलधिजा गेहे जगन्मङ्गला ॥ १६ ॥

ஸ்ரீமந்த்ராக்ஷரமாலயா கிரிஸுதாம் ய: பூஜயேத் சேதஸா
ஸந்த்யாஸு ப்ரதிவாஸரம் ஸுநியதஸ்
தஸ்யாமலம் ஸ்யான் மந: ।
சித்தாம்போருஹமண்டபே கிரிஸுதா
ந்ருத்தம் விதத்தே ரஸாத்
வாணீ வக்த்ரஸரோருஹே ஜலதிஜா
கேஹே ஜகந்மங்களா ॥

**श्री-मन्त्राक्षर-मालया** - ஸர்வஸம்பத் ப்ரதமான ஸ்ரீவித்யா மந்திரத்தின் அக்ஷரங்களால் ஏற்பட்ட மாலையினால் (மாலைபோன்ற இந்த ஸ்தோத்ரத்தால்), **यः**–எவர், **गिरि-सुतां**–பர்வதராஜ புத்திரியான தேவியை, **प्रति-वासरं**–தினந்தோறும், **संध्यासु**–(காலை, மத்யானம், மாலை ஆகிய மூன்று) ஸந்த்யா காலங்களிலும், **सुनियतः**–மிகவும் நியமத்துடன், **चेतसा**–மனஸினாலேயே, **पूजयेत्** – பூஜிப்பாரோ, **तस्य** அவருடைய, **मनः**–மனஸ், **अमलं**–நிர்மலமாக, **स्यात्** –ஆகிவிடும். **गिरि-सुता**–மலை மகள், **रसात्** -மிகப்பிரீதியுடன், **चित्ताम्भोरुह**– தாமரைபோன்ற மனமாகிற, **मण्टपे**–மண்டபத்தில், **नृत्तं**–நர்த்தனத்தை **विधत्ते**–செய்கிறாள். **वक्त्र-सरोरुहे**–தாமரைபோன்ற முகத்தில், **वाणी**–

ஸரஸ்வதீதேவியும், **गेहे**-வீட்டில், **जगन्मङ्गला**-ஜகந்மங்களரூபியான, **जलधिजा**-ஸமுத்திரத்திலுண்டான லக்ஷ்மீதேவியும் நர்த்தனம் செய்கிறார்கள்.

*ஸ்ரீவித்யாமந்திரத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தையும் அதே வரிசைப்படி ஒவ்வொரு சுலோகத்திலும் முதலில் வைத்து இந்த ஸ்தோத்ரம் இயற்றப்பட்டுள்ளது. பூஜை செய்யும் ப்ரகாரத்தையும் இது காட்டுகிறது. இதைப்பாராயணம் செய்வதால் ஸ்ரீ வித்யாமந்திரஜபம், தேவீபூஜை இவ்விரண்டும் ஸித்திக்கிறது. ஆகையால் மந்திரஜபத்திற்கும் தேவீபூஜைக்கும் என்ன நியமம் கூறப்பட்டுள்ளதோ அவை இந்த ஸ்தோத்ரபாராயணத்திற்கும் அவசியமானது. அந்த நியமங்களைக்கைக்கொண்டு ஒவ்வொரு நாளும் காலை, மத்தியானம், ஸாயங்காலம் இம்மூன்று வேளைகளிலும் இந்த ஸ்தோத்ரத்தை பாராயணம் செய்வதுடன் இதன் பொருள் தெரிந்து இதில் கூறியுள்ளபடி மானஸமாக எவன் பர்வதராஜகுமாரியான அம்பிகையைப் பூஜிக்கிறானோ அவன் மனம் நிர்மலமாகிறது இந்த ஹிருதயகமலமாகிற மண்டபத்தில் அம்பிகை ஸந்தோஷமாக வந்து நர்த்தனம் செய்கிறாள் அதாவது அம்பிகையின் தத்வமெல்லாம் இவன் மனதில் நன்கு விளங்குகிறது. இது மட்டுமா? அவனுடைய முகத்தில் வாணியும் வீட்டில் ஜகன் மங்கள மூர்த்தியான லக்ஷ்மியும் நர்த்தனம் செய்கிறார்கள். சிறந்த வாக்கும் எல்லா ஐசுவரியங்களும்* (16)

इति गिरिवरपुत्रीपादराजीवभूषा
भुवनममलयन्ती सूक्तिसौरभ्यसारैः ।
शिवपदमकरन्दस्यन्दिनीयं निबद्धा
मदयतु कविभृङ्गान्मातृकापुष्पमाला ॥ १७ ॥

*இதி கிரிவரபுத்ரீ பாத ராஜீவ பூஷா*
*புவநமமலயந்தீ ஸூக்தி ஸௌரப்யஸாரை: ।*
*ஶிவபத மகரந்த ஸ்யந்திநீயம் நிபத்தா*
*மதயது கவிப்ருங்கான் மாத்ருகாபுஷ்பமாலா ॥*

**इति**-இவ்விதமாக, **निबद्धा**-நன்கு கட்டப்பட்ட, **इयं**-இந்த, **मातृका-पुष्प-माला** – அக்ஷரங்களாகிய புஷ்பங்களால் செய்யப்பட்டிருக்கும்

மாலையானது, **गिरिवर-पुत्री-पाद-राजीव - भूषा** – கிரிசிரேஷ்டருடைய புத்திரியின் பாதகமலங்களுக்கு ஆபரணமாயும், **सूक्तिसौरभ्य-सारैः**– அழகான வார்த்தைகளின் வாஸனையின் ஸாரங்களினால், **भुवनं**– உலகத்தை, **अमलयन्ती**–பரிசுத்தப் படுத்துவதாயும், **शिव-पद-मकरन्द-स्यन्दिनी**–பரமசிவனுடைய ஸ்தானமாகிய தேனை பெருக்கிக்கொண்டு இருப்பதாயும் இருந்துகொண்டு, **कवि-भृङ्गान्** =கவிகளாகிற வண்டுகளை, **मदयतु**–மதம் பிடிக்கச் செய்யட்டும் (ஸந்தோஷப்படச் செய்யட்டும்)

*பூஜை செய்யாத போனாலும் இதை வாசிப்போருக்கே ஒரு விசேஷ ஆனந்தமேற்படும் என்று சொல்லும் போது இதையொரு புஷ்பமாலையாக வர்ணிக்கிறார். இது அம்பிகையின் பாதாரவிந்தங்களில் அலங்காரயாக அர்ப்பணம் செய்யும்போது இதிலுள்ள வாஸனையினால் ஸகலஜகத்தும் பரிசுத்தமாகிறது. இதிலிருந்து மோக்ஷ பதவியாகிற தேன் ஒழுகுகிறது. இதுவே கவிகளாகிற வண்டுகளுக்கு மிகவும் ஆனந்தத்தைக் கொடுக்கிறது. என்று சொல்லி இந்த ஸ்தோத்திரத்தை முடிக்கிறார். இந்த சுலோகத்தின் முடிவில் கூறப்பட்ட* "மாத்ருகா புஷ்பமாலா" *என்பதே இந்த ஸ்தோத்ரத்திற்குப் பெயராக அமைந்துள்ளது.*

மந்த்ர மாத்ருகா புஷ்பமாலா ஸ்தவம் முற்றும்

|| श्रीः ||

# || आनन्दलहरी ||

# ஆனந்த லஹரி

[ ஸ்ரீமத் ஆசார்யாள் பரதேவதையைப்பற்றி இயற்றியிருக்கும் ஸௌந்தர்யலஹரீ என்ற ஸ்தோத்திரத்தில் முதல் 41 சுலோகங்களை ஆனந்தலஹரீ என்றும் பின்னல் அம்பிகையின் கேசாதிபாத வர்ணனமடங்கிய பாக்கி 59 சுலோகங்களை மாத்திரம் ஸௌந்தர்யலஹரீ யென்றும் வியவஹரிப்பதுண்டு அந்த ஸ்தோத்திரத்தில் சேராததாக வேறு இருபது சுலோகங்கள் அதே சைலியில் அதேமாதிரி லலிதமாய் அதேமாதிரி பக்திரஸம் ததும்புவதாய் அதே விருத்தத்தில் இயற்றிக்கொடுத்திருக்கிறார்கள். அந்த ஸ்தோத்ரமே இந்த ஆனந்த லஹரீயாகும். ]

**भवानि स्तोतुं त्वां प्रभवति चतुर्भिर्न वदनैः**
**प्रजानामीशानः त्रिपुरमथनः पञ्चभिरपि ।**
**न षड्भिः सेनानीः दशशतमुखैरप्यहिपतिः**
**तदाऽन्येषां केषां कथय कथमस्मिन्नवसरः ॥ १ ॥**

*பவானி ஸ்தோதும் த்வாம் ப்ரபவதி சதுர்பிர் ந வதனை:*
*ப்ரஜாநாமீசாநஸ் த்ரிபுரமதந: பஞ்சபிரபி ।*
*ந ஷட்பி: ஸேநாநீர் தசசதமுகைரப்யஹிபதி:*
*ததாऽந்யேஷாம் கேஷாம் கதய கதமஸ்மிந்நவஸர: ॥*

**भवानि**-ஹே பவானி, **त्वां** - உன்னை, **स्तोतुं** - ஸ்தோத்ரம் செய்வதற்கு, **प्रजानां** - பிரஜைகளுடைய, **ईशानः** - அதிபதியான ப்ரஹ்மா, **चतुर्भिः**-நான்கு, **वदनैः**-முகங்களாலும், **न प्रभवति**-முடியாதவராயிருக்கிறார். **त्रिपुर**-முப்புரங்களையும், **मथनः**-தகர்த்துவிட்டபரமசிவன், **पञ्चभिः अपि**-ஐந்து முகங்களினாலும் (முடியாமலிருக்கிறார்). **सेनानीः**-தேவர்களின் ஸேனாதிபதியான ஸுப்ரஹ்மண்யரும் **षड्भिः**-ஆறு முகங்களாலும் **न**-முடியவில்லை. **अहिपतिः**-ஸர்ப்பராஜனை

ஆதிசேஷனும், **दश-शत-मुखैः अपि**–ஆயிரம் முகங்களாலும் கூட (ஸ்தோதரம் செய்ய முடியவில்லை). **तदा**–அப்படியிருக்கும்போது, **अन्येषां**–வேறு, **केषां**·எவர்களுக்கு, **अस्मिन्**-இந்தவிஷயத்தில், **अवसरः**-இடம், **कथं**–எப்படியிருக்கமுடியும், **कथय**-சொல்லு.

*பரதேவதையை ஸ்தோத்ரம் செய்வதற்கு வாக்தேவதையான ஸரஸ்வதியின் பதியாயிருந்தும் நான்கு முகங்களிருந்தும் பிரஹ்மாவால் முடியவில்லை. அம்பிகைக்கே பதியாகவும் ஐந்து முகங்களுள்ளவராகவும் இருக்கும் பரமசிவனாலும் முடியவில்லை. அவளுடைய குமாரராகவும் ஞானபண்டிதரென்று பெயர் வாங்கினவராகவும் ஆறு முகங்களோடு கூடியவருமான ஸுப்ரஹ்மண்யராலும் முடியவில்லை. சப்தசாஸ்திரமே மூர்த்தீகரித்து மஹாபாஷ்யம் எழுதின ஆதிசேஷனுக்கு ஆயிரம் முகங்களும் இரண்டாயிரம் நாக்குகளுமிருந்தும் அவராலும் முடியவில்லை. இப்படியிருக்க, மற்றவர்களால், அதிலும் மனுஷ்யனால், எப்படி ஸாத்தியப்படும்? ஸ்தோத்ரம் என்றால் வாயால் குணங்களை வர்ணித்தல். அம்பிகையிடமுள்ள குணங்கள் எண்ணற்றவை அதற்கு அளவே இல்லை. சதுர்முகர், பஞ்சமுகர், ஷண்முகர், களுள்ள ஆதிசேஷன் இவர்கள் ஒரேசமயத்தில் பல முகங்களைக்கொண்டு குணங்களைக்கூற ஆரம்பித்தாலும் எல்லா குணங்களையும் கூறிமுடிக்க முடியாது. அப்படியிருக்க ஒரு முகமுள்ள மனிதனால் எப்படி எல்லாகுணங்களையும் கூறிமுடிக்க முடியும் என்று குணங்கள் அநந்தமாக இருப்பதை ஸ்தோத்ரம் செய்ய முடியாமைக்குக் காரணமாகக் கூறினார். ஸௌந்தர்ய லஹரீ முதல் சுலோகத்தில் புண்யம் செய்யாதவன் ஸ்தோத்திரம் செய்யமுடியாது என்று கூறினார். இந்த முதல் சுலோகத்தில் புண்யம் நிறைந்தவனும்கூட துதி செய்யத் தொடங்கினாலும் முழுவதும் கூறமுடியாது என்று கூறுகிறார்.* (1)

*(அ) அம்பிகையின் ஸ்வரூபத்தை வாக்கால் வர்ணிப்பதும் ஸ்தோத்ரமாகலாம் அந்த ஸ்வரூபம் வாக்குக்கு எட்டாதது. அதை வாக்கால் யார்தான் கூறமுடியும் என்பதை உதாஹரணத்துடன் விளக்குகிறார்.:—*

**घृतक्षीरद्राक्षामधुमधुरिमा कैरपि पदैः**
**विशिष्यानाख्येयो भवति रसनामात्रविषयः ।**

तथा ते सौन्दर्यं परमशिवदृङ्मात्रविषयः
कथंकारं ब्रूमः सकलनिगमागोचरगुणे ॥ २ ॥

*க்ருதக்ஷீர த்ராக்ஷாமதுமதுரிமா கைரபி பதைர்*
*விஶிஷ்யாநாக்2யேயோ பவதி ரஸநாமாத்ரவிஷய: ।*
*ததா தே ஸௌந்தர்யம் பரமஶிவத்ருங்மாத்ரவிஷய:*
*கதங்காரம் ப்ரூம: ஸகலநிகமாகோசரகுணே ॥*

**रसना-मात्र-विषयः**—ரஸனேந்திரியத்திற்கு மாத்திரம் விஷயமயிருக்கிற, **घृत**—நெய், **क्षीर**—பால், **द्राक्षा**—திராக்ஷை, **मधु**—தேன் இவைகளுடைய, **मधुरिमा**—தித்திப்பானது, **कैः**—எவ்விதமான, **पदैः** பதங்களினுலும், **अपि**—கூட, **विशिष्य**—குறிப்பிட்டு, **अनाख्येयः** சொல்ல முடியாததாக, **भवति**-இருக்கிறது. **तथा**—அப்படியே, **ते** உன்னுடைய, **सौन्दर्यं**-அழகு, **परमशिव**-பரமசிவனுடைய, **दृङ्-मात्र विषयः**-திருஷ்டிக்கு மட்டும் விஷயமாக இருக்கிறது. **सकल**—எல்லா **निगम**-வேதங்களுக்கும், **अगोचर**—எட்டக்கூடாத, **गुणे**-குணங்களோடு கூடியவளே, **कथंकारं**-எவ்விதரீதியாக, **ब्रूमः**—நாங்கள் சொல்லமுடியும்

*அம்பிகையின் குணங்களை வேதங்களே சொல்லுவதற்கு முடியாமலிருக்கின்றன. நெய், பால், திராக்ஷை, தேன் முதலிய பதார்த்தங்களின் தித்திப்பு நாக்கில் இருக்கும் ஞானேந்திரியமான ரஸனேந்திரியத்திற்கு மாத்திரம் தான் விஷயமாகும் மற்ற ஞானேந்திரியங்களுக்கு விஷயமாகாது அதே நாக்கில் உள்ள வாக்கு என்ற கர்மேந்திரியத்திற்கே விஷயமாகவில்லை யென்றால் மற்ற கர்மேந்திரியங்களுக்கும் அறியும் சக்தியோ வெளியிடும் சக்தியோ கிடையாதென்பது ஸித்தம். தித்திப்பு ருசி ரஸனேந்திரியத்திற்காவது தெரிகிறதே பரதேவதையின் ஸௌந்தர்யம் யாருக்காவது எந்த இந்திரியத்திற்காவது விஷயமாகுமா வென்றால் பரமசிவனுடைய கண்ணுக்கு மாத்திரம் தான் விஷயமாகும். அதையும் அவர் தான் கண்ணினல் பார்த்து ஆனந்தமடைந்துகொண்டிருக்கலாமே தவிர அது எப்படியிருக்கிறதென்று அவராலேயும் வர்ணிக்க முடியாது என்பதை முதல் சுலோகத்திலேயே காட்டி விட்டார். திராக்ஷை ருசிக்கும் தேன் ருசிக்கும் என்ன வித்தியாஸமென்று கேட்டால் எவ்விதமான வார்த்தைகளை உபயோகித்துச் சொல்லி*

பார்த்தாலும் சொல்ல முடியாது. அந்த ருசிகளை அனுபவித்துப் பார்த்தால் தான் தெரியவருமே தவிர இன்னொருவர் சொல்லித் தெரிந்து கொள்ளக்கூடியதேயல்ல. அந்த விதமாக தேவியின் பூரா ஸௌந்தர்யத்தையும் அறியவேண்டுமானால் பரமசிவனுடைய ஸாயுஜ்யத்தையடைந்தால் தான் முடியும். அவ்விதநிலையேற்படும் வரை அவள் அணிந்திருக்கும் ஆபரணங்களையும் அலங்காரங்களையும் பார்த்துவேண்டுமானால் ஸந்தோஷிக்கமுடியும். (2)

(அ) அம்பாளின் அலங்காரத்தை வர்ணிக்கிறார் :—

मुखे ते ताम्बूलं नयनयुगले कज्जलकला
ललाटे काश्मीरं विलसति गले मौक्तिकलता ।
स्फुरत्काञ्ची शाटी पृथुकटितटे हाटकमयी
भजामि त्वां गौरीं नगपतिकिशोरीमविरतम् ॥ ३ ॥

முகே தே தாம்பூலம் நயநயுகளே கஜ்ஜலகலா
லலாடே காச்மீரம் விலஸதி களே மௌக்திகலதா ।
ஸ்புரத்காஞ்சீ சாடீ ப்ருதுகடிதடே ஹாடகமயீ
பஜாமி த்வாம் கௌரீம் நகபதிகிசோரீமவிரதம் ॥

**ते**-உன்னுடைய, **मुखे**-வாயில், **ताम्बूलं**-தாம்பூலம், **नयन-युगले** - இருகண்களிலும், **कज्जल-कला**-மை அலங்காரம், **ललाटे**-நெற்றியில, **काश्मीरं**-குங்குமம். **गले**-கழுத்தில், **मौक्तिकलता**-கொடிபோன்ற நல முத்துஹாரம் **पृथु-कटि-तटे** - பெருத்த-இடுப்பு பிரதேசத்தில், **स्फुरत्-काञ्ची**-நன்கு பிரகாசிக்கிற ஒட்டியாணத்துடன் கூடிய, **हाटकमयी**-ஸ்வர்ணமயமான, **शाटी**-ஆடை இவை, **विलसति**-சோபிக்கிறது. (அப்பேற்பட்ட), **नग-पति-किशोरीं**-பர்வதராஜபுத்ரியான, **गौरीं**-கௌரியாகிய, **त्वां**-உன்னை, **अविरतं**-இடைவிடாமல், **भजामि**-ப¤

பர்வதராஜகுமாரியான கௌரி தனது பருத்த இடுப்பில் ஸுவர்ணஜரிகையாலே செய்யப்பட்ட உயர்ந்த பொன்னுடையை உடுத்தியிருக்கிறாள். அதன் மேல் ஒட்டியாணம் அணிந்து கொண்டிருக்கிறாள் கழுத்தில் நல்முத்துஹாரம் நெற்றியில் குங்குமப் பொட்டு இருகண்களிலும் மைதீட்டியிருக்கிறாள்.

தாம்பூலம் உட்கொண்டதால் முகம் பொலிவுடன் விளங்குகிறது இவ்விதமான அம்பிகையின் உருவத்தை தியானிக்கிறேன். (3)

विराजन्मन्दारद्रुमकुसुमहारस्तनतटी
नदद्वीणानादश्रवणविलसत्कुण्डलगुणा ।
नताङ्गी मातङ्गी रुचिरगतिभङ्गी भगवती
सती शंभोरम्भोरुहचटुलचक्षुर्विजयते ॥ ४ ॥

*விராஜன்மந்தாரத்ருமகுஸுமஹாரஸ்தநதடீ*
*நதத்வீணாநாதச்ரவணவிலஸத்குண்டலகுணா ।*
*நதாங்கீ மாதங்கீ ருசிரகதிபங்கீ பகவதீ*
*ஸதீ ஶம்போரம்போருஹசடுலசக்ஷுர் விஜயதே ॥*

**विराजत्**–சோபிக்கிற, **मन्दार-द्रुम**-மந்தார விருக்ஷத்தின், **कुसुम**-புஷ்பங்களால் கட்டிய, **हार**–மாலையோடுகூடின, **स्तन-तटी**–ஸ்தனப் பிரதேசமுடையவளாயும், **नदत्-वीणानाद**–வீணையின் நாதத்தை மீட்டி எழுப்புகின்றவளாயும், **श्रवण**–காதுகளில், **विलसत्**–பிரகாசிக்கிற, **कुण्डल**–தாடங்கங்களுடைய, **गुणा**–சோபையோடு கூடினவளாயும், **नताङ्गी**–குனிந்த சரீரத்தையுடையவளாயும், **रुचिर**–அழகான, **गति-भङ्गी**–நடை தினுசுள்ளவளாயும், **भगवती**–ஸகல ஐசுவரியமும் பொருந்தியவளாயும், **अम्भोरुह**–தாமரைபோல், **चटुल**–லேசாக சலிக்கும **चक्षुः** – கண்களையுடையவளாயும், **शंभोः** – பரமசிவனுடைய, **सती**–பத்னியாயுமுள்ள, **मातङ्गी**–மதங்கமுனிவரின் கன்னிகையான தேவி **विजयते**–வெற்றியுடன் விளங்குகிறாள்.

*இந்த சுலோகத்தில் மதங்கமுனிவரின் பெண்ணாக அவதரித்த மாதங்கியை துதிக்கிறார். மாதங்கி வீணை மீட்டுகிறாள் என்பதை காளிதாஸன் சியாமளாதண்டகத்தில் கூறியுள்ளார். ஸ்ரீ பகவத்பாதரும் த்ரிபுரஸுந்தரீஸ்தோத்திரத்தில் இதைச் சொல்கிறார். காதுகளில் குண்டலங்கள் ஒலிக்க கைகளால் வீணையை மீட்டு தவிர மந்தார மலர்களால் கட்டப்பட்ட மாலை கழுத்தில் முடியப்பட்டு ஸ்தனப் பிரதேசங்களில் அசைந்தாடுகிறது. திராஸத்தால் சரீரம் லேசாக வளைந்திருக்கிறது. அவளுடைய கேட்டக அழகாகக் காண்கிறது காற்றில் அசையும் தாமரை*

போல் கண்கள் சஞ்சலமாக உள்ளன. மஹாபதிவிரதையான சம்புவின் பத்னி அம்பிகை இவ்வாறு அழகுடன் விளங்குகிறாள்.

नवीनार्कभ्राजन्मणिकनकभूषापरिकरैः
वृताङ्गी सारङ्गीरुचिरनयनाङ्गीकृतशिवा ।
तटित्पीता पीताम्बरललितमञ्जीरसुभगा
ममापर्णा पूर्णा निरवधिसुखैरस्तु सुमुखी ॥ ५ ॥

*நவீநார்கப்ராஜன்மணிகநகபூஷாபரிகரைர்*
*வ்ருதாங்கீ ஸாரங்கீருசிரநயநாங்கீக்ருதஶிவா ।*
*தடித்பீதா பீதாம்பரலலிதமஞ்ஜீரஸுபகா*
*மமாபர்ணா பூர்ணா நிரவதிஸுகைரஸ்து ஸுமுகீ ॥*

**नवीन**-புதிதாய் உதயமான, **अर्क**-ஸூர்யன்போல, **भ्राजत्**-பிரகாசிக்கிற, **मणि**-நவரத்னங்கள், **कनक**-ஸ்வர்ணம் இவைகளால் செய்யப்பட்ட, **भूषा**-நகைகளின், **परिकरैः**-பலவிதங்களினால், **वृत**-அலங்கரிக்கப்பட்ட, **अङ्गी**-தேகத்தையுடையவளாயும், **सारङ्गी**-பெண் மானைப்போல், **रुचिर**-அழகான, **नयन**-கண்களினால், **अङ्गीकृत**-ஸ்வாதீனம் செய்துகொண்ட, **शिवा**-பரமசிவனையுடையவளாயும், **तटित्**-மின்னல்போல், **पीता**-பொன் நிறமுள்ளவளாயும், **पीताम्बर**-பொன் நிற ஆடை உடுத்தியவளும், **ललित**-அழகிய, **मञ्जीर**-பாதஸரத்தால், **सुभगा**-சிறந்து விளங்குபவளும், **निरवधि**-எல்லையற்ற, **सुखैः**-ஸுகங்களால், **पूर्णा**-நிறைந்தவளாயுமுள்ள, **अपर्णा**-எவ்விதக் கடமைக்கும் உட்படாத (ஸ்வதந்திரையான) தேவீ, **मम**-என் விஷயத்தில், **सुमुखी**-பிரஸன்னமான முகமுள்ளவளாக, **अस्तु**-இருக்கட்டும்.

*அம்பிகை நவரத்னங்களாலும் ஸுவர்ணத்தாலும் ஆக்கப்பட்ட பலவித நகைகளை தரித்திருக்கிறாள். உதயசூரியன் போல் அவை மிகுந்த காந்தியுடன் விளங்குகின்றன. மின்னல் போல் ஒளியுடன் விளங்கும் சரீரத்தில் பீதாம்பரம் அணிந்திருக்கிறாள் காலில் அழகிய பாதஸரம் எல்லையற்றதான திவ்யானந்தம் நிரம்பியவள். இவளுக்கு அபர்ணா என்று பெயர் ருணமில்லாதவள். கட்டுப்படாதவள் பூர்ணஸ்வாதந்த்ர்ய முள்ளவள் பரமேசுவரனை பர்த்தாவாக அடைவதற்காக தவம் செய்யும்*

பொழுது பர்ணத்தை (இலையை)ச்கூட உணவாக உட்கொள்ள வில்லை அதனல் அவளுக்கு 'அபர்ணு' என்ற பெயர் ஏற்பட்டது. என்று காளிதாஸன் சொல்கிருன் பெண்மான் போல் மருண்ட தனது கண்பார்வையாலேயே தனதுபர்த்தாவான பரமேசுவரனை தன்வசப்படுத்தியவள் அவள் ஸுமுகமாக இருந்து எனக்கு அருள் செய்யட்டும். (5)

(அ) இவ்விதமாக தேவியின் சரீரசோபையையும் அவள் அணிந்திருக்கும் வஸ்திராபரணுதிகளின் அழகையும் மூன்று சுலோகங்களால் அனுஸந்தானம் செய்து விட்டு ஸம்ஸார மென்னும் மஹா வியாதியைப் போக்கும் திவ்யௌஷதிலதை யாக வர்ணிக்கிருர் :—

हिमाद्रेः संभूता सुललितकरैः पल्लवयुता
सुपुष्पा मुक्ताभिर्भ्रमरकलिता चालकभरैः ।
कृतस्थाणुस्थाना कुचफलनता सूक्तिसरसा
रुजां हन्त्री गन्त्री विलसति चिदानन्दलतिका ॥ ६ ॥

*ஹிமாத்ரே: ஸம்பூதா ஸுலலிதகரை: பல்லவயுதா*
*ஸுபுஷ்பா முக்தாபிர் ப்ரமரகலிதா சாளகபரை: I*
*க்ருதஸ்தாணுஸ்தாநா குசபலநதா ஸூக்தி ஸரஸா*
*ருஜாம் ஹந்த்ரீ கந்த்ரீ விலஸதி சிதாநந்தலதிகா II*

**हिमाद्रेः**–பனிமலையிலிருந்து, **संभूता**–உண்டானவள். **सुललित**–வெகு மிருதுவான, **करैः**–கைகளினுல், **पल्लव**–துளிர்களுடன் **युता**–கூடினவள், **मुक्ताभिः**–முத்துக்களினுல், **सुपुष्पा**–நல்ல புஷ்பங்களை யுடையவள், **अलकभरैः**–கேசங்களின் மிகுதியால், **भ्रमर-कलिता**–வண்டுகளோடுகூடியவள், **कृत-स्थाणु-स्थाना**–ஸ்தாணுவை (பரமசிவனை) இருப்பிடமாகச் செய்துகொண்டிருப்பவள், **कुच**–ஸ்தனங்களாகிற, **फल**–பழங்களினுல், **नता**–வளைந்திருப்பவள், **सूक्ति**–அழகான பேச்சுக் களால், **सरसा**–ரஸத்தோடு கூடினவள், **रुजां**–வியாதிகளையெல்லாம், **हन्त्री**–போக்கடிக்கிறவள், **गन्त्री**–செல்கின்ற (எங்கேயும் வியாபிக்கிற) **चिदानन्दलतिका**–ஞானனந்தக் கொடியாக, **विलसति**–அம்பிகை சகிறாள்.

மலையில் உண்டாகி உயர்ந்த விருக்ஷத்தில் படரும் திவ்யௌஷதி லதை துளிர், மலர், வண்டுகள், ரஸமுள்ள பழம் இவைகளுடன் கூடி ஸகல வியாதிகளையும் போக்குகிறது அம்மாதிரியான லதையாக அம்பிகை விளங்குகிருள் அம்பிகை ஞானனந்த ஸ்வரூபிணி அதனுல் சிதானந்தலதை என்று பெயர் சூட்டுகிருர். அவள் உண்டானது ஹிமயமலையிலிருந்து. அவள் கைகளே துளிர் போல உள்ளவை, அவள் அணிந்திருக்கும் முத்துக்களே புஷ்பங்கள், அவளுடைய கேசபாரமே வண்டுகளின் கூட்டம். அவளுடைய ஸ்தனங்களே பழங்கள். உலர்ந்த கொடியோ என்று நினைக்கவேண்டாம், அவளுடைய பேச்சுக்களில் நல்ல ரஸமுண்டு உபயோகமற்ற கொடியென்றும் நினைக்கவேண்டாம் அவித்யை முதலுள்ள எல்லாப் பிணிகளையும் தீர்த்து வைக்கக் கூடியவள். தேடியடையவும் வேண்டாம், ஸர்வ வியாபினியாயிருக்கிருள்' கொடிக்குப் பிடித்துக்கொள்ள ஆசிரயம் வேண்டுமே யென்ருல் அந்த ஆசிரயம் பரமசிவனுகிற ஸ்தம்பமே கொடிக்கு ஆசிரயமாய் ஒரு ஸ்தம்பம் வேண்டாமாவென்று பரமசிவனைச் சொல்லும்போது ஸ்தாணு என்ற சப்தத்தை வெகு உசிதமாக உபயோகித்தார்.

மலையில் உண்டாகும் கொடி விருக்ஷத்தைப்பிடித்துக்கொண்டு வளரும். தேவீலதை உலர்ந்த மரக்கட்டையை ஆச்ரயித்திருக்கிருள். ஸ்தாணு என்ற சொல் மரக்கட்டை, பரமசிவன் இரண்டையும் குறிக்கும். லதை ஸ்தாவரம் அது இருக்குமிடம் தேடிச்செல்ல வேண்டும் தேவீலதை ஜங்கமம், நாமிருக்குமிடத்திலேயே இந்த லதையை அடையலாம் ஓஷதிலதை சரீரத்தில் உண்டாகும் வியாதிகளைத் தான் போக்கும். தேவி தன் ஸ்வரூபமான ஞானனந்தத்தைத் தந்து ஸம்ஸாரமென்னும் மஹாவியாதியையும் போக்குகிருள். இதுமட்டுமா! தேவிலதை தனது திவ்ய மஹிமையால் தான் ஆசிரயித்திருக்கும் உலர்ந்த மரக்கட்டையிலிருந்து கூட பலன் உண்டாகும்படி செய்து விடுகின்றது என்பதை அடுத்த சுலோகத்தில் கூறுகிருர். (6)

सपर्णामाकीर्णां कतिपयगुणैः सादरमिह
श्रयन्त्यन्ये वल्लीं मम तु मतिरेवं विलसति ।
अपर्णैका सेव्या जगति सकलैर्यत्परिवृतः
पुराणोऽपि स्थाणुः फलति किल कैवल्यपदवीम् ॥ ७ ॥

ும் கதிபயகுணை: ஸாதரமிஹ
ச்ரயந்த்யந்யே வல்லீம் மம து மதிரேவம் விலஸதி ।
அபர்ணைகா ஸேவ்யா ஜகதி ஸகலைர் யத்பரிவ்ருத:
புராணோऽபி ஸ்தாணு: பலதி கில கைவல்ய பதவீம் ॥

**कतिपयगुणैः**–ஏதோ சில குணங்களுடன், **आकीर्णां**–சேர்ந்து இருக்கும், **सपर्णां**–இலைகளோடுகூடிய, **वल्लीं**–கொடியை, **अन्ये**–வேறு சிலர்கள், **इह**–இங்கு, **सादरं**–ஆதரவோடு, **श्रयन्ति**–ஆசிரயிக்கிறார்கள் **मम तु**–எனக்கோவென்றால், **मतिः**–புத்தியானது, **एवं**–இவ்விதமாக **विलसति**–தோன்றுகிறது. **यत्**–எவளால், **परिवृतः**–சூழப்பட்ட **स्थाणुः**–கட்டை (பரமசிவன்) **पुराणः अपि**–வெகுநாட்பட்டதாயிருந்தும் **कैवल्य-पदवीं**–கைவல்யமாகிற பதவியை, **फलति**-பழமாகக்கொடுக்கிறதோ, **किल**–ஸந்தேகமன்னியில், அந்த, **एका**–ஒரே ஒரு, **अपर्णा**-(இலையற்ற) அம்பிகைதான், **जगति**–உலகத்தில், **सकलैः**–யாவராலும் **सेव्या**–ஸேவிக்கத்தகுந்தவள்.

உலகில் எத்தனையோ சிறந்த கொடிகள் உள்ளன அவற்றில் சிற்சில குணங்களும் உண்டு. அவற்றால் நன்மையும் ஏற்படும், சில ஓஷதிக்கொடியால் பிணியும் நீங்கும், உடம்பில் புஷ்டி உண்டாகும் இந்தக்காரணங்களால் பலர் ஆதரவுடன் இலைகளுடன் கூடிய அந்தக்கொடிகளைத்தேடிச் செல்லுகிறார்கள் ஆனால் என் அபிப்பிராயம் இது தான். "இலைகளே இல்லாத கொடி ஒன்றே ஒன்றுதான் உலகில் உள்ளது. யாவரும் அதையே ஸேவிக்கவேண்டும்" ஏனெனில் இலைகளற்ற இந்தக் கொடியுடன் சேர்ந்த காரணத்தால் மிகப்பழமையான காய்ந்த மரக்கட்டையும் மிகச்சிறந்த பலனைத் தருகிறது. அதாவது ப்ரஹ்ம வித்யாஸ்வரூபிணியான அம்பிகையின் ஸம்பந்தத்தால் தான் ஆதியில்லாத பரமசிவன் பக்தருக்குக்கைவல்யத்தைத் தருகிறார். எல்லாம் தேவியின் மஹிமைதான்.

[இதே விஷயத்தை கொஞ்சம் விஸ்தரித்து ஸ்தாணுவும் (பரமசிவன், கட்டை) அபர்ணை (அம்பிகை, இலையற்றது )யும் சேர்ந்து பிறந்த குழந்தை விசாகன் (ஸுப்ரஹ்மண்யர், சாகையில்லாதவர்) என்று சொல்லி அந்தப் புத்திரனுக்கு வல்லியை (வள்ளிதேவி, கொடி) விவாஹம் செய்துவைத்தார்கள் என்று ஸ்ரீ சிருங்கேரி மஹாஸன்னிதானம் ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமி

*களவர்கள் சொல்லியிருக்கும் சுலோகத்தையும் இங்கே அனுஸந்தானம் செய்யலாம்.*

अपर्णाख्यवल्लीसमाश्लेषयोगात्
पुरा स्थाणुतो योऽजनिष्टामरार्थम् ।
विशाखं नगे वल्लिकालिङ्गितं तं
सदा षण्मुखं भावये हृत्सरोजे ॥ ]

(7)

**विधात्री धर्माणां त्वमसि सकलाम्नायजननी**
**त्वमर्थानां मूलं धनदनमनीयाङ्घ्रिकमले ।**
**त्वमादिः कामानां जननि कृतकन्दर्पविजये**
**सतां मुक्तेर्बीजं त्वमसि परब्रह्ममहिषी ॥ ८ ॥**

*விதாத்ரீ தர்மாணும் த்வமஸி ஸகலாம்நாயஜநநீ*
*த்வமர்த்தாளும் மூலம் தநதநமநீயாங்க்ரிகமலே ।*
*த்வமாதி: காமாநாம் ஜநநி க்ருதகந்தர்பவிஜயே*
*ஸதாம் முக்தேர் பீஜம் த்வமஸி பரப்ரஹ்மமஹிஷீ ॥*

**त्वं**–நீ, **धर्माणां**–தர்மங்களையெல்லாம், **विधात्री** – ஏற்படுத்துகிறவள், **सकल**–எல்லா, **आम्नाय**–வேதங்களையும், **जननी**-வெளிப்படுத்தினவளாய், **असि**– இருக்கிறாய், **धनद**–குபேரனால், **नमनीय**–நமஸ்கரிக்கத்தகுந்த, **अङ्घ्रि-कमले** – பாதாரவிந்தத்தையுடையவளே, **त्वं**–நீ, **अर्थानां**–ஆசைப்படப்படும பொருள்களுக்கெல்லாம், **मूलं**–மூலம் **कृतकन्दर्पविजये**–மன்மதனை ஜயித்தவளே, **त्वं**–நீ, **कामानां**–ஆசைகளுக்கெல்லாம், **आदिः**–முதலானவள், **जननि**–தாயே, **परब्रह्म-महिषी**–பரப்பிரஹ்மத்தின் பட்டமஹிஷியான, **त्वं**–நீ, **सतां**–உத்தம ஜனங்களுக்கு, **मुक्तेः**–மோக்ஷத்தின், **बीजं**–விதையாக, **असि**–இருக்கிறாய்.

*உலகத்திலுள்ள கொடிகள் ஒவ்வொன்றில் ஒவ்வொரு விசேஷகுணமிருக்கும், ஒவ்வொரு வியாதிக்கு மருந்தாயிருக்கலாம் ஆனல் அதுவே சில சமயங்களில் கெடுதலையும் செய்யக்கூடியதாயிருக்கலாம். தேவியாகிற லதை அனந்த கல்யாண குணங்களோடு கூடியிருப்பதுடன் ஜீவர்களால் அபேக்ஷிக்கப்படுகிற*

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களையும் கொடுக்க வல்லமையுள்ளது. பகவான் அஸங்கனாக இருந்து வருகிறபடியால் அவருடைய ஸந்நிதி விசேஷத்தால் இவைகளைக் கொடுப்பது அம்பிகையேதான். அப்புருஷார்த்தங்களையடைவதற்கு வேண்டிய ஸாதனங்களை போதிப்பவளும் அவளே.

இந்த சுலோகத்தில் அம்பிகைக்குக் கூறப்பட்ட விசேஷணங்கள் எல்லாம் ஹேதுகர்பமாக, காரணத்தைக் குறிப்பதாக அமைந்துள்ளன. தர்மங்களை எடுத்துக் காட்டுகிறது வேதம். அந்த வேதத்தை வெளிப்படுத்தியவள் அம்பிகையானதால் அவளே தர்மத்தை ஏற்படுத்தியவள். தனதிபனான குபேரன் அம்பிகையின் காலில் வணங்குவதால் எல்லாப் பொருள்களும் கிடைக்க இவளே காரணமாகிறாள். காமதேவதையான மன்மதனை ஜயித்தபடியால் அம்பிகையே எல்லாக் காமங்களையும் பூர்த்தி செய்கிறாள். பரப்ரஹ்மத்தின் மகிஷியாக இருப்பதால் ப்ரஹ்மபாவம் என்ற மோக்ஷத்திற்கும் அவளே காரணம்.

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்கிற நான்கு புருஷார்த்தங்களையும் கொடுப்பவள் அம்பிகைதான் என்று காட்டுவதற்காக வேதத்தையே வெளியிட்டு தர்மா தர்ம வியவஸ்தையை ஏற்படுத்திக் கொடுத்தவள் विधात्री वेदजननी वर्णाश्रमविधायिनी धर्माधारा என்றும், நவநிதிகளுக்கும் அதிபதியாயிருந்து கொண்டு ஸகலவித அர்த்த ஸம்பத்துக்களையும் அடைந்த குபேரன் கூட அவளை நமஸ்கரித்துக் கொண்டிருப்பதால் वसुदा सर्वार्थदात्री என்றும், விரும்பும் விஷய ஸுகங்களையெல்லாம் கொடுப்பதில் वाञ्छितार्थप्रदायिनी மன்மதனையும் ஜயித்து தானே மேலான काम्या என்றும், இவ்வித கீழ்பட்ட புருஷார்த்தங்களில் ஆசையற்று நித்ய ஸுகமான கைவல்யத்திலேயே நோக்கமுள்ள மஹான்களுக்கு அதையும் கொடுப்பவள் कैवल्यपददायिनी என்றும், பக்தர்களின் யோக்கியதையையும் அபேக்ஷையையும் அனுசரித்து பலன் கொடுப்பவள், त्रिवर्गदात्री,स्वर्गापवर्गदा என்றும் லலிதா ஸஹஸ்ரநாமத்தில் கண்டபடி இங்கேயும் இந்த சுலோகத்தில் காட்டப்படுகிறது. (ம)

(அ) ஆனால் அந்த யோக்யதை என்னிடம் பரிபூர்ணமாயிருக்க வேண்டுமென்று நீ எதிர்பார்ப்பது யுக்தமில்லை. ஏதோ உன்னை அண்டியிருக்கிறான் இவன் என்று மாத்திரம் எண்ணி

உன்னுடைய கருணையினலேயே என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று பின் ஐந்து சுலோகங்களில் வேவ்வேறுவிதமாகப் பிரார்த்திக்கிருர்:—

प्रभूता भक्तिस्ते यदपि न ममालोलमनस-
स्त्वया तु श्रीमत्या सदयमवलोक्योऽहमधुना ।
पयोदः पानीयं दिशति मधुरं चातकमुखे
भृशं शङ्के कैर्वा विधिभिरनुनीता मम मतिः ॥ ९ ॥

ப்ரபூதா பக்திஸ்தே யதபி ந மமாலோலமநஸஸ்
த்வயா து ஸ்ரீமத்யா ஸதயமவலோக்யோஃஹமதுநா 1
பயோத: பாநீயம் திஶதி மதுரம் சாதகமுகே
ப்ருஶம் ஶங்கே கைர் வா விதிபிரநுநீதா மம மதி: ll

**आलोल**—மிகவும் சஞ்சலமான, **मनसः**—மனதையுடைய, **मम**—எனக்கு, **ते**—உன் விஷயமாக. **भक्तिः**—பக்தி, **प्रभूता**—நிறைய, **यदपि न**—இல்லையானுலும்கூட, **श्रीमत्या**—ஐசுவர்யம் பொருந்திய, **त्वया तु**—உன்னுல்மட்டும், **सदयं**—கருணையுடன், **अहं**—நான், **अधुना**—இப்பொழுதே, **अवलोक्यः**—கடாக்ஷிக்கப்பட வேண்டியவன். **पयोदः**—மேகமானது, **चातक**—சாதகபக்ஷியின், **मुखे**—திறந்தவாயில், **मधुरं**—மதுரமான, **पानीयं**—ஜலத்தை, **दिशति**—கொடுக்கிறது. **कैर्वा विधिभिः**—எந்த முறைகளினுல்தான், **मम**—என்னுடைய, **मतिः**—புத்தியானது, **अनुनीता**—வசப்பட்டதாக ஆகுமோ ? **भृशं**—மிகவும், **शङ्के**—பயப்படுகிறேன்.

மழைத்துளி எப்பொழுது ஏற்படுமென்று தெரியாமல் சாதக பக்ஷி எபபடி வாயைத்திறந்து கொண்டு ஆகாயத்தைப் பார்த்த வண்ணமாக நிற்குமோ அதுபோல் நானும் உன்னுடைய கருணையையே எதிர்பார்க்கிறேன். மேகத்தை வர்ஷிக்கும்படிச் செய்ய அப்பக்ஷிக்கு சக்தியில்லையானுலும் மேகம் தாஞகவே சாதகபக்ஷியின் வாயில் இனிமையான தண்ணீரை ஊற்றுகிறது. அது போல மனதை அடக்கித் தீவ்ரபக்தி கொண்டவர்களுக்குத் தான் உன்கடாக்ஷ பாக்யம் கிடைக்கும். என்மனம் மிகவும் சஞ்சலமாயிருப்பதால் அவ்விதமான பக்தி என்னிடம் இல்லை. ஆனுலும் உதார ஸ்வபாவமுள்ள நீ கருணையினுல் உன் கடாக்ஷத்தைச் செலுத்தினுல் தான் நான் உஜ்ஜீவிக்க முடியும். சஞ்சலமான மனதை அடக்கும் முறைகள் ஒன்றும் எனக்குத்

*தெரியவில்லை மிகவும் பயப்படுகிறேன். கருணையினால் அருள் பாலிக்கவேண்டும்.* (9)

(அ) *தன்னிடம் கருணைகடாக்ஷத்தைச் செலுத்தவேண்டு மென்பதை உரிமையுடன் கேட்கிறார்:—*

कृपापाङ्गालोकं वितर तरसा साधुचरिते
न ते युक्तोपेक्षा मयि शरणदीक्षामुपगते ।
न चेदिष्टं दद्यादनुपदमहो कल्पलतिका
विशेषः सामान्यैः कथमितरवल्लीपरिकरैः ॥ १० ॥

*க்ருபாபாங்காலோகம் விதர தரஸா ஸாதுசரிதே*
*ந தே யுக்தோபேக்ஷா மயி சரண தீக்ஷாமுபகதே* I
*ந சேதிஷ்டம் தத்யாதநுபதமஹோ கல்பலதிகா*
*விசேஷ: ஸாமாந்யை: கதமிதரவல்லீபரிகரை:* II

**साधु**-உத்தமமான, **चरिते**-நடத்தையுள்ளவளே, **कृपापाङ्गालोकं**-கருணை நிறைந்த கடைக்கண் பார்வையை, **तरसा**-சீக்கிரமாக, **वितर**-கொடு. **शरण-दीक्षां**-உன்னை சரணமடைவதிலேயே தீவிரமான தீர்மானத்தை, **उपगते**-அடைந்திருக்கிற, **मयि**-என்னிடத்தில். **ते**-உனக்கு, **उपेक्षा**-உதாஸீனத்தனமையானது, **न युक्ता**-நியாயமில்லை. **कल्पलतिका**-கல்பலதையானது, **इष्टं**-வேண்டியதை, **अनुपदं**-உடனேயே, **दद्यात् न चेत्** - கொடுக்கவில்லையானால், **सामान्यैः**-ஸாமான்யமான, **इतर**-மற்ற, **वल्ली**-கொடிகளின், **परिकरैः**-கூட்டங்களைவிட (அதற்கு) **विशेषः**-மேன்மை, **कथं अहो**-எப்படித்தான் ஏற்படும் ?

*எல்லோரையும் விட்டு விட்டு உன்னையே சரணமடைந்து விட்டேன். வேறுயோக்யதை இல்லாவிட்டாலும் இந்த ஒரு தகுதியைக் கொண்டே என்னைக்கைவிடாமல் விரைவில் உன் கடாக்ஷத்தைச் செலுத்தி ஏற்றுக்கொள்வது உன் கடமையாகும் இவ்விதம் செய்யாவிட்டால் 'நல்ல நடத்தை உள்ளவள்' என்ற உன்பெயருக்குத்தான் களங்கம் ஏற்படும். உலகிலுள்ள மற்றக் கொடிகளை எல்லாம் விட்டு விட்டு கல்பகலதையை அண்டியவனின் அபீஷ்டத்தை அது நிறைவேற்றாவிட்டால் மற்றகொடிகளைவிட கல்பலதைக்கு என்ன சிறப்பு இருக்கும்?* (10)

(அ) வேறு ரக்ஷகர் இல்லை என்பதைக் கூறுகிறார்:—

महान्तं विश्वासं तव चरणपङ्केरुहयुगे
निधायान्यन्नैवाश्रितमिह मया दैवतमुमे ।
तथाऽपि त्वच्चेतो यदि मयि न जायेत सदयं
निरालम्बो लम्बोदरजननि कं यामि शरणम् ॥ ११ ॥

*மஹாந்தம் விச்வாஸம் தவ சரணபங்கேருஹயுகே*
*நிதாயாந்யத் நைவாச்ரிதமிஹ மயா தைவதமுமே ।*
*ததாபி த்வச்சேதோ யதி மயி ந ஜாயேத ஸதயம்*
*நிராலம்போ லம்போதரஜநநி கம் யாமி ஶரணம் ॥*

**उमे**-உமாதேவியே, **तव**-உன்னுடைய, **चरणपङ्केरुहयुगे**-இரண்டு பாதாரவிந்தங்களில், **महान्तं**-பெரிதான, **विश्वासं**-நம்பிக்கையை, **निधाय**-வைத்து, **अन्यत्**-வேறு, **दैवतं**-தைவம், **मया**-என்னால், **इह**-இங்கு, **नैव आश्रितं**-ஆசிரயிக்கப்படவே இல்லை. **तथापि**-அப்படியிருந்தும், **त्वत्**-உன்னுடைய, **चेतः**-மனஸ், **मयि**-என்னிடத்தில், **सदयं**-தயையுடன்கூடினதாக, **यदि न जायेत**-ஏற்படவில்லையானால், **निरालम्बः**-எவ்வித பிடிமானமுமில்லாமல் நான், **लम्बोदरजननि**-மஹா கணபதியின் தாயே, **कं**-யாரை, **शरणं**-சரணமாக, **यामि**-அடைவேன்.?

*எல்லா தேவதைகளையும் விட்டு கட்டாயம் காப்பாற்றுவாள் என்ற மிகுந்த நம்பிக்கையுடன் உனது இரு திருவடிகளையும் பற்றியுள்ளேன். இந்நிலையில் நீ என்னிடம் கருணை காட்டாமல் கைவிட்டுவிட்டால் என்னைக் காப்பாற்ற வேறு யார் இருக்கிறார். ஒருவரும் இல்லை. நான் உதாஸீனம் செய்து விட்டதால் மற்ற தேவதைகளும் காப்பாற்றமாட்டார்கள். நீயும்கைவிட்டு விட்டால் என் கதி என்ன?* (11)

*(அ) எத்தனை பாபங்களிருந்த போதிலும் காப்பாற்றவேண்டுமென்பதற்கு உதாஹரணம் கூறுகிறார்:*

अयः स्पर्शे लग्नं सपदि लभते हेमपदवीं
यथा रथ्यापाथः शुचि भवति गङ्गौघमिलितम्

तथा तत्तत्पापैरतिमलिनमन्तर्मम यदि
त्वयि प्रेम्णा सक्तं कथमिव न जायेत विमलम् ॥ १२ ॥

*அய: ஸ்பர்சே லக்நம் ஸபதி லபதே ஹேமபதவீம்*
*யதா ரத்யாபாத: சுசி பவதி கங்கௌகமிளிதம் ।*
*ததா தத்தத்பாபைரதிமலிநமந்தர் மம யதி*
*த்வயி ப்ரேம்ணா ஸக்தம் கதமிவ ந ஜாயேத விமலம் ॥*

**यथा**—எப்படி, **अयः**—இரும்பு, **स्पर्शे**-ஸ்பர்சமணியில், **लग्नं**-ஒட்டிக்கொண்டு, **सपदि**-உடனேயே, **हेम-पदवीं**-தங்கத்தின் நிலையை, **लभते** - அடைகிறதோ, **रथ्या** - வீதிகளிலுள்ள, **पाथः** - ஜலமானது, **गङ्गौघ-मिलितं**-கங்கையின் பிரவாஹத்தில் கலந்து, **शुचि**—சுத்தமாக, **भवति**—ஆகிவிடுகிறதோ, **तथा**—அப்படியே, **मम**—என்னுடைய, **अन्तः**-மனஸ், **तत्तत्-पापैः** —பலவித பாபங்களால், **अति-मलिनं** — வெகு அழுக்கடைந்திருந்தும், **त्वयि** - உன்னிடத்தில், **प्रेम्णा** – பிரீதியுடன், **सक्तं यदि**—ஈடுபட்டிருந்ததேயானால், **कथमिव**—எப்படித்தான், **विमलं**-நிர்மலமாக, **न जायेत**—ஆகாமலிருக்க முடியும் ?

*என்னிடத்தில் பாபங்கள் வெகுவாக இருப்பதினால் சேர்த்துக் கொள்ள முடியவில்லை யென்று நீ ஸமாதானம் சொன்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. வெறும் இரும்பு ஸ்பர்சமணியில் பட்டு தங்கமாகி விடவில்லையா? சாக்கடை ஜலம் கங்காப்பிரவாஹத்தில் கலந்து அதிபரிசுத்தமாக ஆகிவிடவில்லையா? உன்னிடத்தில் பிரீதியுடன் வந்து என் மனஸ் ஒட்டிக்கொள்ளும் போது அது எவ்வளவு அழுக்கடைந்திருந்தால் என்ன? உடனே நிர்மலமாக ஆகிவிடாதா? என்று வாதாடுகிறார். ஸ்பர்சமணியைப்பற்றி சதச்லோகியிலும் கூறியிருக்கிறார்.* (12)

*(அ) மற்ற தேவதைகளை சரணமடையாததற்குக் காரணம் கூறுகிறார் :—*

त्वदन्यस्मादिच्छाविषयफललाभे न नियमः
त्वमज्ञानामिच्छाधिकमपि समर्था वितरणे ।
इति प्राहुः प्राञ्चः कमलभवनाद्यास्त्वयि मनः
त्वदासक्तं नक्तंदिवमुचितमीशानि कुरु तत् ॥ १३ ॥

*த்வதந்யஸ்மாதிச்சாவிஷயபலலாபே ந நியம:*
*த்வமக்ஞானாமிச்சாதிகமபி ஸமர்த்தா விதரணே ।*
*இதி ப்ராஹு: ப்ராஞ்ச: கமலபவனாத்யாஸ் த்வயி மந-*
*ஸ்த்வதாஸக்தம் நக்தந்திவமுசிதமீசானி குரு தத் ॥*

**त्वदन्यस्मात्** – உன்னைத் தவிர வேறிடத்திலிருந்து, **इच्छा** – ஆசைக்கு, **विषय**–விஷயமான, **फल**–பலன், **लाभे**-கிடைப்பதில், **न नियमः**–நியமம் (உறுதி) இல்லை, **त्वं**–நீ, **अज्ञानां**–தெரியாதவர்களுக்கு, **इच्छा**–ஆசைக்கு, **अधिकं अपि**–மேலாகவும், **वितरणे**–கொடுப்பதில், **समर्था**-வல்லமையுள்ளவள், **इति**-என்று, **कमल-भवनाद्याः**–கமலத்தில் வீற்றிருக்கும் பிரஹ்மா முதலான, **प्राञ्चः**–முன்னோர்கள், **त्वयि** – உன் விஷயத்தில், **प्राहुः** – சொல்கிறார்கள். **मनः**–என்னுடைய மனஸ், **त्वत्**–உன்னிடத்தில், **नक्तंदिवं**–ராப்பகலாக, **आसक्तं**–ஈடுபட்டுள்ளதாக இருந்து வருகிறது. **ईशानि**–ஹே பரமேசுவரி, **उचितं**–எது உசிதமோ, **तत्**–அதை, **कुरु**–செய்.

*மற்றதேவதைகளை ஏன் ஆசிரயிக்கவில்லை யென்றால், அவர்களை எவ்வளவு உபாஸித்தாலும் நாம்விரும்பியதை மட்டும் கூடக் கொடுப்பார்களென்ற நிச்சயம் கிடையாது. உபாசித்தது போதாது, பூர்வ புண்யம் போதாது என்று ஏதாவது ஸமாதானம் சொல்லி விடுவார்கள். நீ அப்படியல்ல. உன்னுடைய மாஹாத்ம்யத்தையும் உதார குணத்தையும் தெரிந்து கொள்ளாமல் யாரேனும் உன்னை உபாஸித்து ஏதேனும் வேண்டிக்கொண்டாலும் அதற்கு மேலும் அதிகமாகவே கொடுத்தருளும் தன்மை உனக்கு உண்டு என்று பெரியோர்கள் சொல்கிறார்கள்.*

*ஸௌந்தர்யலஹரியில் '**भवानि त्वं दासे**' என்ற சுலோகத்தில் கருணை கடாக்ஷத்தைச் செலுத்த வேண்டும் என்று எண்ணிய பக்தனுக்குத் தனது ஸாயுஜ்யத்தையே கொடுத்து விடுகிறாள் என்று இக்கருத்து தெளிவாக கூறப்பட்டிருக்கிறது. 4வது சுலோகத்திலும் 'விரும்பியதற்கு மேல் பலனைக் கொடுப்பதில் உன் சரணம் மிகத்திறமையுள்ளது' என்று கூறுகிறார். ஆகையால் என்மனதை இடைவிடாது உன்னிடத்திலேயே வைத்து விட்டேன். எனக்கு எது வேண்டுமென்று கேட்கத்தெரியாது. எனக்கு என்ன செய்தால் ஹிதமோ அதை நீயே தீர்மானம் செய்து அருள்வாயாக.* (13)

स्फुरन्नानारत्नस्फटिकमयभित्तिप्रतिफलत्
त्वदाकारं चञ्चच्छशधरकलासौधशिखरम् ।
मुकुन्दब्रह्मेन्द्रप्रभृतिपरिवारं विजयते
तवागारं रम्यं त्रिभुवनमहाराजगृहिणि ॥ १४ ॥

*ஸ்புரந்நாநாரத்நஸ்படிகமயபித்திப்ரதிபலத்*
*த்வதாகாரம் சஞ்சச்சசதரகலாஸௌதஶிகரம் ।*
*முகுந்தப்ரஹ்மேந்த்ரப்ரப்ருதிபரிவாரம் விஜயதே*
*தவாகாரம் ரம்யம் த்ரிபுவநமஹாராஜக்ருஹிணி ॥*

**स्फुरत्**-பிரகாசிக்கிற, **नाना**-பலவித, **रत्न**-ரத்தினங்கள் இழைத்து **स्फटिकमय**-ஸ்படிகத்தினுல் செய்யப்பட்ட, **भित्ति**-சுவர்களில், **प्रतिफलत्**-பிரதிபிம்பிக்கும், **त्वत्**-உன்னுடைய, **आकारं**-ரூபத்தை உடையதும், **चञ्चत्**-சோபிக்கிற, **शशधर-कला**-சந்திரகலையோடு கூடின, **सौध**-மாளிகையின், **शिखरं**-உப்பரிகையுள்ளதும், **मुकुन्द**-மஹாவிஷ்ணு, **ब्रह्म**-பிரஹ்மா, **इन्द्र**-தேவேந்திரன், **प्रभृति**-முதலான, **परिवारं**-பரிவாரங்களோடு கூடினதுமான, **तव**-உன்னுடைய, **रम्यं**-அழகான, **अगारं**-வாஸஸ்தலமானது, **त्रिभुवन**-மூவுலகங்களுக்கும் **महाराज**-மஹாராஜாயுள்ள பரமேசுவருடைய, **गृहिणि**-பத்னியே! **विजयते**-மிகவும் உத்கிருஷ்டமாக விளங்குகிறது.

*அம்பிகை வஸிக்கும் மாளிகையின் சுவர்கள் ரத்னம் பதித்து ஸ்படிகத்தினுல் நிர்மாணம் செய்யப்பட்டிருப்பதால் அங்கே வீற்றிருக்கும் பரதேவதையின் ரூபம் எல்லா பக்கங்களிலும் பிரதிபலிக்கிறது. மிக்க உயரமுள்ள இம்மாளிகையின் மாடி ஸ்தூபியில் சந்திரன் பிரகாசிக்கிருன். லோகநாதர்களான ப்ரஹ்மா, விஷ்ணு இந்திரன் முதலானவர்கள் இம்மாளிகையில் அம்பிகைக்குப் பரிவாரமாக இருந்து பணிவிடை புரிகின்றனர். எல்லா லோகங்களும் அடங்கிய பிரபஞ்சத்திற்கே சக்கிரவர்த்தியாக விருக்கும் பரமேசுவரருடைய பத்னியாய் மஹாராணி ஸ்தானம் வஹிக்கும் அம்பாளுக்கு இவ்வித ரம்மியமான சிறந்த மாளிகையிருப்பது மிகவும் நியாயமல்லவா?* (14)

*(அ) அம்பிகையின் மாளிகையை வர்ணித்து விட்டு மற்றப் பெருமைகளை வர்ணிக்கிருர்.—*

निवासः कैलासे विधिशतमखाद्याः स्तुतिकराः
कुटुम्बं त्रैलोक्यं कृतकरपुटः सिद्धिनिकरः ।
महेशः प्राणेशस्तदवनिधराधीशतनये
न ते सौभाग्यस्य क्वचिदपि मनागस्ति तुलना ॥ १५ ॥

*நிவாஸ: கைலாஸே விதிஶதமகாத்யா: ஸ்துதிகரா:*
*குடும்பம் த்ரைலோக்யம் க்ருதகரபுட: ஸித்திநிகர: ।*
*மஹேஶ: ப்ராணேஶஸ் தததவநிதராதீஶதநயே*
*ந தே ஸௌபாக்யஸ்ய க்வசிதபி மநாகஸ்தி துலநா ॥*

**निवासः**--இருப்பு, **कैलासे**-கைலாஸத்தில், **स्तुतिकराः**-ஸ்தோத்ரம் செய்பவர்கள், **विधि**-பிரஹ்மா, **शतमख**-இந்திரன், **आद्याः**-முதலானவர்கள். **कुटुम्बं**--குடும்பம், **त्रैलोक्यं**-மூவுலகமும், **सिद्धि-निकरः**-ஸித்திகளின் கூட்டம், **कृतकरपुटः**-கைகட்டி நிற்கிறது. **प्राणेशः** பிராணநாயகரோ, **महेशः**-பரமேசுவரர். **तत्**-ஆகையால், **अवनि-धराधीश**-பர்வதராஜனின், **तनये**-புத்திரியே, **ते**-உன்னுடைய, **सौभाग्यस्य**-ஸௌபாக்கியத்திற்கு, **तुलना**-ஒப்பிடல், **क्वचित् अपि**-எங்கேயும் கூட, **मनाक्**-கொஞ்சமும், **न अस्ति**-கிடையாது.

*பரமசிவனை நாயகராக அடைந்து கைலாசத்தில் வாஸம் செய்து கொண்டு பிரஹ்மாதி தேவர்களால் ஸ்துதிக்கப்பட்டுக் கொண்டு உலகம் பூராவையும் குடும்பமாகப்பெற்று அணிமாதி ஸகல ஸித்திகளும் கைகட்டிக் காத்துக்கொண்டிருக்கும்படிக்கான உத்தமமான உன் பதவிக்கு ஸமானமாக எதையாவது எங்கேயாவது கொஞ்சமாவது சொல்லமுடியுமா ? (15)*

(அ) ஈசுவரனுக்கும் அம்பிகையால்தான் பெருமை :—

वृषो वृद्धो यानं विषमशनमाशा निवसनं
श्मशानं क्रीडाभूर्भुजगनिवहो भूषणविधिः ।
समग्रा सामग्री जगति विदितैव स्मररिपोः
यदेतस्यैश्वर्यं तव जननि सौभाग्यमहिमा ॥ १६ ॥

வ்ருஷோ வ்ருத்தோ யாநம் விஷமஶநமாஶா நிவஸநம்
ச்மஶாநம் க்ரீடாபூர் புஜகநிவஹோ பூஷணவிதி: ।
ஸமக்ரா ஸாமக்ரீ ஜகதி விதிதைவ ஸ்மரரிபோர்
யதேதஸ்யைச்வர்யம் தவ ஜநநி ஸௌபாக்யமஹிமா ॥

**वृद्धः**–கிழட்டுத்தனமடைந்த, **वृषः**–காளைமாடு, **यानं**–வாஹனம், **विषं**–விஷம், **अशनं**–சாப்பாடு, **आशाः**–திக்குகள், **निवसनं**–வஸ்திரம், **श्मशानं**–மயானம், **क्रीडाभूः**–விளையாடும் இடம்; **भुजग-निवहः**–ஸர்ப்பங்களின் கூட்டம், **भूषणविधिः**–அலங்காரமுறை, **स्मररिपोः**–மன்மதனின் சத்ருவான பரமசிவனுடைய, **समग्रा**–எலலா, **सामग्री**–ஸாமக்கிரிகளும் இவ்விதமென்று, **जगति**–உலகத்தில், **विदिता एव**–தெரிந்தே இருக்கிறது. **यत्**–என்ற காரணத்தினல், **एतस्य**–இவருடைய, **ऐश्वर्यं**–ஐசுவரியமானது, **जननि**–தாயே, **तव**–உன்னுடைய, **सौभाग्य**–ஸௌபாக்கியத்தின், **महिमा**–மஹிமையேயாகும்.

மஹேசுவரரை பிராண நாயகராக அடைந்திருப்பது உன்னுடைய ஸௌபாக்கியத்தைக்காட்டுகிறது என்று சொன்னோம். உன்னுடைய ஸௌபாக்யத்தினலேயே அவர் மஹேசுவரராக இருக்கிறார் என்று சொல்வதே இதைவிட உசிதமாய்த் தோன்றுகிறது. அவருடைய சொந்த நிலையை கவனித்துப் பார்த்தால் அவரை எவ்விதத்திலும் மேலானவர் என்று சொல்வதற்கு இடமேயில்லை. அவருக்கு வாஹனம் கிழட்டுமாடு, சாப்பிடுவதோ ஹாலாஹல விஷம், இருப்பிடமோ மயானம், வஸ்திரமோ திக்குகள்தான், ஆபரணங்கள் பாம்புகளே, அவர் ஸமீபத்தில் வந்தாலே மன்மதனை பஸ்மம் செய்துவிடுவார் இந்த அவருடைய தன்மைகள் யாரும் அறிந்ததே. அவருக்கு மஹேசுவரர் என்ற பதவி ஏற்பட வேண்டுமானல் உன்னுடைய ஸௌபாக்கியத்தின் மஹிமை என்றுதான் சொல்லவேண்டும். (16)

गिकमतिः

श्मशानेष्वासीनः कृतभसितलेपः पशुपतिः ।
दधौ कण्ठे हालाहलमखिलभूगोलकृपया
भवत्याः संगत्याः फलमिति च कल्याणि कलये ॥ १७

*அஶேஷப்ரஹ்மாண்டப்ரளயவிதிநைஸர்கிகமதி:*
*ச்மஶாநேஷ்வாஸீந: க்ருதபஸிதலேப: பஶுபதி: ।*
*ததௌ கண்டே ஹாலாஹலமகிலபூகோளக்ருபயா*
*பவத்யா: ஸங்கத்யா: பலமிதி ச கல்யாணி கலயே ॥*

**अशेष**—பாக்கியன்னியில், **ब्रह्माण्ड**—பிரஹ்மாண்டங்களை, **प्रलय**—நன்கு நாசம் செய்துவிடும், **विधि**—முறையில், **नैसर्गिक**—ஸ்வபாவத்திலேயே, **मतिः**—எண்ணமுள்ளவராயும், **श्मशानेषु**—மயானங்களில், **आसीनः**—இருந்துகொண்டு, **कृत-भसित-लेपः**—சாம்பல் பூச்சு பூசிக்கொள்பவராயுமுள்ள, **पशुपतिः**—பிராணிகளின் பதியான பரமசிவன், **अखिल**—எல்லா, **भूगोल**—பூகோளத்திலும் ஏற்பட்ட, **कृपया**—கருணையினால், **हालाहलं**—ஹாலாஹல விஷத்தை, **कण्ठे**—கழுத்தில், **दधौ**—தரித்துக்கொண்டாரே அது, **कल्याणि**—மங்களரூபிணியே, **भवत्याः**—உன்னுடைய, **संगत्याः**—சேர்க்கையினுடைய, **फलं**—பலன், **इति च**—என்று தான், **कलये**—எண்ணு

*அவரைச் சேர்ந்தவைகளெல்லாம் இப்படியிருந்த போதிலும் அவருடைய சொந்த குணமோ நடத்தையோ சரியாயிருக்கிறதாவென்றால் அதுவும் இல்லை. ஜகத்துப்பூராவையும் நாசம் செய்வதிலேயே அவருக்கு நோக்கம். நாசம் செய்து ச்மசானத்திலேயே இருந்து கொண்டு அங்குள்ள சாம்பலைப் பூசிக்கொள்வார். மனுஷ்யர்களுக்கு அரசராயிருந்து நரபதியென்ற பெயரையோ, தேவர்களுக்கு அரசராயிருந்து ஸுரபதியென்ற பெயரையோ வைத்துக்கொள்ளாமல் பசுபதியென்று பெயர் வைத்துக் கொண்டிருக்கிறார். ஜகத்தையே ஒழித்து விடும் மனோபாவனையுள்ள க்ரூர ஸ்வபாவரான பரமசிவன் ஹாலாஹல விஷத்தைச்சாப்பிட்டபோது அவர் குக்ஷியில் இருந்த ஜகத்பூராவையும் நாசம் செய்திருக்கலாமே? அவ்விதம் செய்யாமல் அவ்விஷத்தைக் கழுத்தில் நிறுத்திக்கொண்டு குக்ஷிவரையில் போகாமலிருக்கும்படிச் செய்யவேண்டுமானால் அதற்கு கருணையல்லவா வேண்டும்? அது எப்படி அவருக்கு ஏற்பட்டதென்று யோஜிக்கையில் உன்னுடைய சேர்க்கையினால்தான் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். உன் சேர்க்கையால்தான் அழிக்கும் ஸ்வபாவமுள்ள ஈசுவரனுக்குக் கருணை ஏற்பட்டு உலகைக் காப்பாற்றிவிட்டார்.* (17)

त्वदीयं सौन्दर्यं निरतिशयमालोक्य परया
भियैवासीद् गङ्गा जलमयतनुः शैलतनये ।
तदेतस्यास्तस्माद्वदनकमलं वीक्ष्य कृपया
प्रतिष्ठां आतन्वन् निजशिरसि वासेन गिरिशः ॥ १८ ॥

த்வதீயம் ஸௌந்தர்யம் நிரதிசயமாலோக்ய பரயா
பியைவாஸீத் கங்கா ஜலமயதநு: சைலதநயே ।
ததேதஸ்யாஸ்தஸ்மாத் வதநகமலம் வீக்ஷ்ய க்ருபயா
ப்ரதிஷ்டாமாதந்வந் நிஜசிரஸி வாஸேந கிரிச: ॥

**शैलतनये**-பர்வதகுமாரியே, **त्वदीयं**-உன்னுடைய, **निरतिशयं**-உத்தமமான, **सौन्दर्यं**-ஸௌந்தர்யத்தை, **आलोक्य**-பார்த்து, **परया**-மிகுந்த, **भिया एव**-பயத்தினாலேயே, **गङ्गा**-கங்காதேவி, **जलमयतनुः** - ஜலத்தினால் செய்யப்பட்ட சரீரமுள்ளவளாக, **आसीत्**-ஆகிவிட்டாள், **तस्मात्**-அதினால், **एतस्याः**-இந்தகங்கையின், **तत्**-(வாடிய) அந்த, **वदन-कमलं**-முககமலத்தை, **वीक्ष्य**-பார்த்து, **कृपया**-கருணையினால், **गिरिशः**-மலையில் வாஸம் செய்யும் பரமசிவன், (அவளுக்கு) **निजशिरसि**-தன்னுடைய சிரஸிலேயே, **वासेन**-இருப்பைக்கொடுத்து, **प्रतिष्ठां**-ஸ்திரமான நிலையை (கியாதியை) **आतन्वन्**-ஏற்படுத்தியவராக ஆனார்.

உலகத்துலுள்ள ப்ரஜைகளிடம் ஏற்பட்ட பகவான் கழுத்தில் விஷத்தை நிறுத்திக்கொண்டார் என்று சொல்லும்போது சிரஸில் கங்கையை வைத்துக் கொண்டாரே, அதற்கு என்ன காரணம், என்றால் அதுவும் கிருபையினால்தான் என்கிறார். அவளிடம் கருணையேற்படும்படி அவளுக்கு என்ன ஆபத்து ஏற்பட்டது என்று கேட்டால், அவளும் பர்வதராஜனுடைய புத்திரியாயிருந்தும் அம்பிகைக்கு ஏற்பட்டிருக்கும் ஸௌந்தர்யம் தனக்கு ஏற்படவில்லையே, பகவான் தன்னை அங்கீகரிப்பாரோ மாட்டாரோ, என்ற பயம் அவளுக்கு ஏற்பட்டு ஜலமாகவே உருகி விட்டாள். அவளுடைய ஸ்திதியைப்பார்த்து மிக்க கருணையுடன் அவளை ஜலரூபிணியாகவே தன் சிரஸில் ஸ்தானம் கொடுத்து அனுக்ரஹித்தார் என்று ஆசார்யார் உத்ப்ரேக்ஷை செய்கிறார்.

(18)

विशालश्रीखण्डद्रवमृगमदाकीर्णघुसृण-
प्रसूनव्यामिश्रं भगवति तवाभ्यङ्गसलिलम् ।
समादाय स्रष्टा चलितपदपांसून् निजकरैः
समाधत्ते सृष्टिं विबुधपुरपङ्केरुहदृशाम् ॥ १९ ॥

*விஶாலஶ்ரீகண்டத்ரவம்ருகமதாகீர்ணகுஸ்ருண*
*ப்ரஸூநவ்யாமிச்ரம் பகவதி தவாப்யங்கஸலிலம் ।*
*ஸமாதாய ஸ்ரஷ்டா சலிதபதபாம்ஸூன் நிஜகரை:*
*ஸமாதத்தே ஸ்ருஷ்டிம் விபுதபுரபங்கேருஹத்ருஶாம் ॥*

**भगवति**—ஈச்வரியே, **विशाल**—ஏராளமான, **श्रीखण्डद्रव**—சந்தன ரஸம், **मृगमद**—கஸ்தூரி, **आकीर्ण**—சேர்ந்த, **घुसृण-प्रसून**—குங்குமப்பூ இவை, **व्यामिश्रं**—கலந்ததான, **तव**—உன்னுடைய, **अभ्यङ्ग** ஸ்நானம் செய்த, **सलिलं**—ஜலத்தையும், **चलित**—நடந்த, **पद**—பாதத்திலுள்ள, **पांसून**—தூளிகளையும், **निजकरैः**—தனது கைகளால், **स्रष्टा**—ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரஹ்மா, **समादाय**—எடுத்துக்கொண்டு, **विबुधपुर-पङ्केरुह-दृशां**—கமலம்போல் நயனமுள்ள தேவலோகஸ்திரீகளுடைய, **सृष्टिं**—ஸ்ருஷ்டியை, **समाधत्ते**—நடத்துகிறார்.

*கங்கா தேவியின் ஸ்திதி இப்படியிருக்கட்டும். உலகத்தில் யாரேனும் ரூபவதியாயிருந்தால் "தேவகன்னிகை" போல் இருக்கிறாள் என்று சொல்வதிலிருந்து தேவஸ்திரீகளுக்கு ஸ்வபாவஸித்தமாகவே ஸௌந்தர்யம் அதிகம் உண்டு என்று நன்றாகத்தெரிகிறது. அவர்களுக்கு அவ்வளவு ஸௌந்தர்யம் ஏற்பட்டதற்குக் காரணம் சொல்கிறேன் கேள். அம்பிகை சந்தனத்தைலம் தேய்த்துக்கொண்டு கஸ்தூரி, குங்குமப்பூ இவைகளுடைய திவ்ய கந்தங்களோடு கூடிய ஜலத்தில் ஸ்நானம் செய்கிறாள். அம்பிகையின் உடலில் பட்டு வெளியேவரும் அந்த தீர்த்தத்தில், அம்பிகையின் பாததூளிகளை தனதுகைகளால் எடுத்துக் குழைத்து இதைக் கொண்டுதான் பிரஹ்மதேவர் தேவஸ்திரீகளை ஸ்ருஷ்டி செய்கிறார். அதினால்தான் அவர்களுக்கு அவ்வித உத்தமமான ஸௌந்தர்யம் ஏற்பட்டிருக்கிறது என்கிறார். (19)*

वसन्ते सानन्दे कुसुमितलताभिः परिवृते
स्फुरन्नानापद्मे सरसि कलहंसालिसुभगे ।
सखीभिः खेलन्तीं मलयपवनान्दोलितजले
स्मरेद्यस्त्वां तस्य ज्वरजनितपीडाऽपसरति ॥ २० ॥

*வஸந்தே ஸாநந்தே குஸுமிதலதாபி: பரிவ்ருதே*
*ஸ்புரந்நாநாபத்மே ஸரஸி கலஹம்ஸாளிஸுபகே ।*
*ஸகீபி: கேலந்தீம் மலயபவநாந்தோலிதஜலே*
*ஸ்மரேத் யஸ்த்வாம் தஸ்ய ஜ்வரஜநித பீடாऽபஸரதி ॥*

**सानन्दे**–ஆனந்தத்தோடு கூடின, **वसन्ते**–வஸந்தகாலத்தில் **कुसुमित**–நன்கு புஷ்பித்திருக்கும், **लताभिः**–கொடிகளால், **परिवृते**–சூழப்பட்டதாயும், **स्फुरत्**–நன்கு மலர்ந்திருக்கும், **नाना**–அநேகம் **पद्मे**–தாமரைகளோடு கூடியதாயும், **कलहंस**–கலஹம்ஸ பக்ஷிகளுடைய, **आलि**–வரிசை (அல்லது கலஹம்ஸங்களும், **अलि**–வண்டுகளும்) இருப்பதால், **सुभगे**–மிக அழகாயும் **मलय-पवन**–மலய பர்வத தென்றல் காற்றினல், **आन्दोलित**–சலிக்கப்பட்ட, **जले**-ஜலத்துடன் கூடினதாயும் உள்ள, **सरसि**-தடாகத்தில், **सखीभिः**-தோழிகளுடன், **खेलन्तीं**-விளையாடுகிற, **त्वां**-உன்னை, **यः** எவன், **स्मरेत्**-ஸ்மரிப்பானே, **तस्य**-அவனுக்கு, **ज्वर** - ஜ்வரத்தினல், **जनित** - ஏற்பட்ட, **पीडा** - பீடை, **अपसरति**–விலகிவிடும்.

*ஸௌந்தர்யலஹரி 20வது சுலோகத்தில் அம்பிகையை பனிமலையின் புத்திரியாகவும் அவள் தன் அங்கங்களிலிருந்து குளிர்ந்த அமிருத கிரணங்களை வெளியிடுவதாகவும் தியானித்தால் விஷத்தினலும் ஜ்வரத்தினலும் ஏற்படக்கூடிய சிரமங்கள் நிவிருத்தியாகும் என்று சொல்லியிருப்பதையே மந்திரமாக பாவித்து ஜபிப்பவர்கள் அவ்வித பலனை உடனே அடைந்திருக்கிருர்கள். அதுபோலவே இந்த ஆனந்தலஹரியிலும் 20 சுலோகத்தில் ஜ்வர நிவிருத்திக்காக அம்பிகை குளிர்ந்த ஜலமுள்ள தடாகத்தின் மத்தியில் தோழிகளுடன் விளையாடிக் கொண்டிருப்பதாக பாவித்தால் உடனே ஆரோக்யம் ஏற்படுமென்று சொல்கிருர். தாதுக்களின் வைஷம்யத்தினல் சரீரத்தில் ஏற்படும் ஜ்வரம் என்று மாத்திரம் வைத்துக்கொள்ளவேண்டாம். தாபத்தை*

யேற்படுத்தக்கூடிய எல்லாவிதமான கஷ்டங்களிலிருந்தும் அவள் விடுவிப்பாள், அத்யாத்மம், அதிபூதம் அதிதைவம் என்ற காரணங்களால் ஏற்படும் ஸகலவித தாபங்களையும் விலக்கக் கூடியது அவளுடைய ஸ்மரணம்என்பதுதான் கடைசி சுலோகத்தின் தாத்பர்யம். (20)

ஆனந்தலஹரீ முற்றும்.

# ॥ श्रीशारदाभुजङ्गप्रयाताष्टकम् ॥

# ஸ்ரீ சாரதா புஜங்கப்ரயாதாஷ்டகம்

[ ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யார் சிருங்கேரியில் ஸ்ரீசாரதா தேவியை பிரதிஷ்டை செய்து ஆராதித்து வருகையில் ஒரு ஸமயம் வெளியிட்ட எட்டு சுலோகங்களடங்கியது இந்த ஸ்தோத்ரம், ஜகன்மாதாவான அம்பிகையை தன் மாதாவாகவே பாவித்து அவள் ஸாந்நித்யமடைந்திருக்கும் மூர்த்தியின் வைபவத்தையே இந்த ஸ்தோத்திரத்தில் வர்ணித்திருக்கிறார். அவருடைய அபர அவதாரமென்று பாவிக்கப்பட்டு சிருங்கேரி ஜகத்குருவாக விளங்கிய ஸ்ரீஸச்சிதாநந்தசிவ அபிநவநரஸிம்ஹபாரதீஸ்வாமிகள் அவர்கள் அவருக்கு அவர் ஜன்ம பூமியான காலடியில் ஆலயம் நிர்மாணம் செய்வதாகத் தீர்மானித்தபோது அவருடைய தாயாரின் ஞாபகார்த்தமாகவும் ஏதேனும் செய்யவேண்டுமென்று நினைத்து இந்த ஸ்தோத்திரத்தை ஞாபகப்படுத்திக்கொண்டு அங்கே ஸ்ரீசாரதாம்பாளுக்கும் ஓராலயம் கட்டிவைத்தார்களென்று விஷயம் யாரும் அறிந்ததே. ]

सुवक्षोजकुम्भां सुधापूर्णकुम्भां
प्रसादावलम्बां प्रपुण्यावलम्बाम् ।
सदाऽऽस्येन्दुबिम्बां सदानोष्ठबिम्बां
भजे शारदाम्बां अजस्रं मदम्बाम् ॥ १ ॥

ஸுவக்ஷோஜ கும்பாம் ஸுதா பூர்ணகும்பாம்
ப்ரஸாதாவலம்பாம் ப்ரபுண்யாவலம்பாம் ।
ஸதாஸ்யேந்து பிம்பாம் ஸதாநோஷ்டபிம்பாம்
பஜே சாரதாம்பாம் அஜஸ்ரம் மதம்பாம் ॥

**सुवक्षोज-कुम्भां**-கும்பம்போல் பருத்த அழகான ஸ்தனங்களுடையவளாயும், **सुधा-पूर्ण-कुम्भां**-அமிர்தம்-நிறைந்த-கலசத்தையுடையவளாயும், **प्रसादावलम्बां**-அனுக்ரஹம் செய்வதில் பிடிமானமுள்ளவளாயும், **प्रपुण्यावलम्बां**-மிகுந்த புண்ணியங்கள் செய்திருப்பவர்களுக்குக்கைப்பிடி கொடுப்பவளாயும், **आस्य-इन्दुबिम्बां**-சந்திர பிம்பம்

போல் பிரகாசிக்கும் முகத்தையுடையவளாயும், **सदान-ओष्ठ-बिम्बां**-கோவைப்பழம் போல் சிவந்த மத ரஸமுள்ள உதடுகளுள்ளவளாயும் இருக்கும், **मदम्बां**-என்னுடைய தாயாரான, **शारदाम्बां**-சாரதாம்பிகையை, **सदा**-எப்பொழுதும், **अजस्रं**-இடைவிடாமல, **भजे**-பஜிக்கிறேன்.

*அம்பிகையிடத்தில் தாயார் என்ற பாவனை வரும்போது குழந்தை பிறந்தவுடனேயே அதற்கு ஸ்தன்யபானம் செய்வித்து ரக்ஷிக்கும் அம்சம் ஞாபகம் வந்ததால் முதலில் ஸ்தனத்தை ஸ்ரீமத் ஆசார்யார் வர்ணித்தார். அது கும்பம் மாதிரி பெரியதாக இருப்பதுடன் அமிருதம் போல க்ஷீரத்தையும் கொடுப்பதால் அவள் கையிலேந்தியிருக்கும் அமிருத கலசத்தை அடுத்தபடியாகச் சொன்னர். பால் பெருகும் ஜகன்மாதாவின் ஸ்தனங்கள் கும்பம் (குடம்) போல் பருத்து இருக்கின்றன. இது போதாதென்று கையிலும் ஓர் கும்பத்தை வைத்துக்கொண்டிருக்கிருள். இது அமிருதம் நிரம்பியது. உலகில் எந்தத்தாயின் ஸ்தன்யத்தைப் பருகியபோதிலும் அவர்களுக்கு இறப்பும் பிறப்பும் நிச்சயம் உண்டு. அம்பிகையைத் தாயாக சரணமடைந்து விட்டால் அவர்களுக்கு ஜன்ம மரணங்கள் கிடையாதென்பதை கையிலுள்ள அமிருதகலசத்தால் காட்டுகிருள். "அம்பிகையின் ஸ்தனங்களே அமிருதம் நிரம்பியவைதான் அதனுல் தான் அதைப்பருகிய விநாயகரும் ஸ்கந்தரும் எப்போதும் குமாரர்களாகவே விளங்கி வருகின்றனர்". என்று ஸௌந்தர்யலஹரியில் 73வது சுலோகத்தில் கூறுகிருர். இவ்விதமாக அனுக்ரஹம் செய்வதையே விரதமாக உடையவள் என்பதைச் சொல்லி விட்டு, அவ்வனுக்ரஹம் கிடைக்கவேண்டுமானுல் ஏராளமான புண்ணியமிருக்கவேண்டும் என்பதைக் குறிப்பிடுகிருர். முகமாகிற சந்திரனிடமிருந்தும் கருணையாகிய அமிருதம் பெருகுகிறது, உதடுகளிலிருந்தும் கருணைரஸம் பெருகுகிறது, என்றும் சொல்லி இவ்வாறே கருணை மூர்த்தியாயிருக்கும் தாயாரை எப்பொழுதும் இடைவிடாமல் பஜிக்க வேண்டியது நியாயம் தானே என்றும் காட்டுகிருர். (1)*

**कटाक्षे दयार्द्रां करेज्ञानमुद्रां**
**कलाभिर्विनिद्रां कलापैः सुभद्राम् ।**
**पुरस्त्रीं विनिद्रां पुरस्तुङ्गभद्रां**
**भजे शारदाम्बां अजस्रं मदम्बाम् ॥ २ ॥**

*கடாக்ஷே தயார்த்ராம் கரே ஞாநமுத்ராம்*
*கலாபிர் விநித்ராம் கரே ஞாநமுத்ராம் ।*
*புரஸ்த்ரீம் விநித்ராம் கலாபை: ஸுபத்ராம்*
*பஜே சாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம் ॥*

-கடைக்கண்ணில், **दया-आर्द्रां**-தயையினுல் ஈரமுள்ளவளாயும், **करे-ज्ञान-मुद्रां**-கையில் சின் முத்திரையுள்ளவளாயும் **कलाभिः**-கலைகளினுல், **विनिद्रां**-பிரஸன்னமாயிருப்பவளாயும், **कलापैः** ஆபரணங்களினுல், **सु-भद्रां**-நன்கு மங்களமாயிருப்பவளாயும் **विनिद्रां** - (அனுக்ரஹம் செய்வதற்காக எப்பொழுதும் விழித்துக் கொண்டு) தூக்கமில்லாதவளாயும், **पुरः तुङ्गभद्रां**-தனக்கு முன்னுல் துங்கபத்ரா நதியையுடையவளாயும், **पुर-स्त्रीं**-திரிபுரசுந்தரியாயுமுள்ள **मदम्बां**-என் தாயாரான, **शारदाम्बां**-சாரதாம்பிகையை, **अजस्रं** இடைவிடாமல், **भजे**-பஜிக்கிறேன்.

*துங்கபத்ரா நதிக்கரையில் சிருங்கேரியில் ஸாந்நித்யம் கொண்டுள்ள என் தாயான ஸ்ரீசாரதாம்பிகை எல்லா ஆபரணங்களுமணிந்து திவ்யமங்கள ரூபிணியாக விளங்குகிறுள். பக்தருக்கு அருள் செய்ய தூங்காமல் எப்பொழுதும் விழித்துக் கொண்டிருக்கிறுள். சிரஸ்ஸில் உள்ள சந்திரனின் கலைகளால் ஒளியுடன் திகழ்கிறுள். கடாக்ஷத்தில் கருணுரஸம் பெருகுவதால் துன்பப்படும் யாருக்கும் அருள் புரிகிறுள் உத்தமாதிகாரிக்கு தனது சின் முத்திரையால் ஆத்ம ஞானத்தைத் தருகிறுள். இவளே த்ரிபுர ஸுந்தரி. இவளை எப்பொழுதும் பஜிக்கிறேன்.* (2)

**ललामाङ्कफालां लसद्गानलोलां**
**स्वभक्तैकपालां यशःश्रीकपोलाम् ।**
**करे त्वक्षमालां कनत्प्रत्नलोलां**
**भजे शारदाम्बां अजस्रं मदम्बाम् ॥ ३ ॥**

*லலாமாங்கபாலாம் லஸத்காநலோலாம்*
*ஸ்வபக்தைக பாலாம் யச: ச்ரீகபோலாம் ।*
*கரே த்வக்ஷமாலாம் கநத்ப்ரத்நலோலாம்*
*பஜே சாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம் ॥*

**ललामाङ्क-फालां**-திலகத்தினுல் அடையாளமிடப்பட்ட யுள்ளவளாயும், **लसत्-गान-लोलां**-அழகான பாட்டில் ஆசையுள்ள வளாயும், **स्वभक्तैक-पालां**-தன்னுடைய பக்தர்களைக் காப்பாற்றும் ஒரே மூர்த்தியாயும், **यशःश्रीकपोलां**-புகழுடன் சோபிக்கும் கன்ன பிரதேசத்தை உடையவளாயும், **करे-तु**-கையிலோ, **अक्ष-मालां**-அக்ஷமாலையுடையவளாயும், **कनत्-प्रत्न-लोलां**-நன்கு பிரகாசிக்கிற உத்தமமான காதுத்தொங்கட்டாங்களுடையவளாயும் இருக்கும், **मदम्बां**- என் தாயாரான, **शारदाम्बां**-சாரதாம்பிகையை, **अजस्रं**-எப்பொழுதும், **भजे**-பஜிக்கிறேன்.

*நெற்றியில் சிறந்த திலகமும் காதில் அசையும் குண்டலங்களும் கையில் ஜபமாலையும் தரித்துள்ள அம்பிகையின் கன்னத்தின் சோபை மிகப் புகழ்வாய்ந்தது. கானத்தில் மிகவும் ஈடுபட்டவள். பக்தர்களைக் காப்பாற்றுவதில் அவள் போல் வேறுதெய்வம் கிடையாது இந்த சாரதாம்பிகையை பஜிக்கிறேன்.* (3)

**सुसीमन्तवेणीं दृशा निर्जितैणीं**
**रमत्कीरवाणीं नमद्वज्रपाणीम् ।**
**सुधामन्थरास्यां मुदाचिन्त्यवेणीं**
**भजे शारदाम्बां अजस्रं मदम्बाम् ॥ ४ ॥**

*ஸுஸீமந்தவேணீம் த்ருஶா நிர்ஜிதைணீம்*
*ரமத்கீரவாணீம் நமத்வஜ்ரபாணீம் ।*
*ஸுதாமந்தராஸ்யாம் முதாசிந்த்யவேணீம்*
*பஜே ஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம் ॥*

**सुसीमन्त-वेणीं**-அழகான வகுடுடன் கூடிய பின்னலுள்ளவளாயும், **दृशा**-பார்வையினுல் (கண்ணின அழகினுல்), **निर्जित-एणीं**-பெண் மானை ஜயித்தவளாயும், **रमत्-कीर-वाणीं**-உத்ஸாஹமாயுள்ள கிளியைப் போலுள்ள பேச்சுள்ளவளாயும், **नमत्-वज्रपाणीं**-வஜ்ரபாணியான தேவேந்திரனுல் நமஸ்கரிக்கப்பட்டவளாயும், **सुधा-मन्थ[illegible]स्यां**-அமிருதத்தை ருசிபார்க்கும் வாயுள்ளவளாயும், **अचिन्[illegible]**-ஆலோசிக்க முடியாத பின்னலழகு கொண்டவளாயும் இருக்கும்,

என் தாயாரான, **शारदाम्बां**-சாரதாம்பிகையை, **अजस्रं**-இடைவிடாது, **मुदा**-ஸந்தோஷத்துடன, **भजे**-பஜிக்கிறேன்.

*அம்பிகையின் பின்னல் வகிடுடன் நன்கு சோபிக்கிறது. கருநிறமுள்ள அந்தப் பின்னலழகைப்பற்றி யாரும் சிந்திக்கவே முடியாது. தனது பார்வையால் பெண்மானையும், பேச்சினல் கிளியையும் தோற்கடித்து விடுகிருள். அமிருதம் பருகும் வாயுடன் கூடியவள். வஜ்ராயுதத்தைக் கையில் கொண்ட தேவேந்திரனும் வணங்கும் சாரதாம்பிகையை பஜிக்கிறேன்.* (4)

**सुशान्तां सुदेहां दृगन्ते कचान्तां**
**लसत्सल्लताङ्गीं अनन्तां अचिन्त्याम् ।**
**स्मृतां तापसैः सर्गपूर्वस्थितां तां**
**भजे शारदाम्बां अजस्रं मदम्बाम् ॥ ५ ॥**

*ஸுசாந்தாம் ஸுதேஹாம் த்ருகந்தே கசாந்தாம்*
*லஸத்ஸல்லதாங்கீமநந்தாமசிந்த்யாம் ।*
*ஸ்ம்ருதாம் தாபஸை: ஸர்க்கபூர்வஸ்திதாம் தாம்*
*பஜே சாரதாமபாமஜஸ்ரம மதமபாம் ॥*

**सुशान्तां**-மிகவும் சாந்தியுடன் கூடியவளும், **सुदेहां**-அழகான திருமேனியுடையவளாயும், **दृगन्ते**-கண்களின் ஓரத்தில் வரும், **कचान्तां**-கேசங்களின் நுனிகளையுடையவளாயும, **लसत्-सत्-लता-अङ्गीं**-பிரகாசிக்கிற உத்தமமான கொடிபோலுள்ள சரீரத்தையுடையவளும், **अनन्तां**-எல்லையற்றவளாயும், **अचिन्त्यां**-சிந்திக்க முடியாதவளாயும், **तापसैः**-தபஸ்விகளால, **स्मृतां**-ஸ்மரிக்கப்பட்டவளாயும், **सर्ग-पूर्व स्थितां**-ஸ்ருஷ்டிக்கு முன்னும்லேயே இருப்பவளாயும் உள்ள, **तां**-அந்த **मदम्बां**-என்தாயாரான, **शारदाम्बां**-சாரதாம்பிகையை, **अजस्रं**-இடைவிடாமல், **भजे**-பஜிக்கிறேன்.

*அம்பிகையின் ஸ்வரூபம் தோஷமொன்றுமில்லாது சாந்தமானது ஏனெனில் பிரபஞ்சத்தின் ஸிருஷ்டிக்கு முன்னலேயே அவள் இருப்பவள். ஸிருஷ்டிக்கு முன்னல் ஆத்மா ஒன்று தான் இருந்தது என்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. ஆகையால் அம்பிகைதான் ஆத்மவஸ்துவாக விளங்குகிருள். இந்தப்பர*

தத்வத்திற்கு எல்லேயே கிடையாது ஆதலால் மனதால் சிந்திக்க முடியாதது. ஆனாலும் நேத்திரங்களின் ஓரத்தில் சுருண்டமயிர்கள் தவழுவதும் சிறந்த கொடிபோல் விளங்கும் சரீரம் கொண்டது மான அம்பிகையின் உருவத்தை தவம் செய்யும் முனிவர்கள் தம் மனதில் எப்பொழுதும் ஸ்மரிக்கிறார்கள். இவளை எப்பொழுதும் ப. (5)

कुरङ्गे तुरङ्गे मृगेन्द्रे खगेन्द्रे
मराले मदेभे महोक्षेऽधिरूढाम् ।
महत्यां नवम्यां सदा सामरूपां
भजे शारदाम्बां अजस्रं मदम्बाम् ॥ ६ ॥

குரங்கே துரங்கே ம்ருகேந்த்ரே ககேந்த்ரே
மராளே மதேபே மஹோக்ஷேऽதிரூடாம் ।
மஹத்யாம் நவம்யாம் ஸதா ஸாமரூபாம்
பஜே ஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம் ॥

**महत्यां नवम्यां**-மஹா நவமி உத்ஸவத்தில், **कुरङ्गे**-மான்பேரிலும், **तुरङ्गे**-குதிரைபேரிலும், **मृगेन्द्रे**-ஸிம்ஹத்தின் பேரிலும், **खगेन्द्रे**-கருடன் பேரிலும், **मराले**-ஹம்ஸத்தின் பேரிலும், **मद-इभे**-மதம் கொண்ட யானையின் பேரிலும், **महा-उक्षे**-பெரிய விருஷபத்தின் பேரிலும், **अधिरूढां** - ஏறிக்கொண்டவளாய், **सदा** - எப்பொழுதும், **साम-रूपां** - சாந்தமானஸ்வரூபத்துடன் இருக்கும், **मदम्बां** - என் தாயாரான, **शारदाम्बां** - சாரதாம்பிகையை, **अजस्रं** - இடைவிடாது, **भजे**-பஜிக்கிறேன்.

அம்பிகையை விசேஷமாக ஆராதிக்கும் ஸமயமான நவராத்திரி உத்ஸவத்தில் ஒவ்வொருதினமும் மான், குதிரை, ஸிம்மம், கருடன், ஹம்ஸம், கஜம், விருஷபம் இவைகளுள் ஒவ்வொரு வாஹனம் கொடுத்து அதில் அமர்ந்திருக்கும் வண்ணம் அம்பிகையை அலங்கரிக்கும்போது ஏற்படும் அத்புத காக்ஷியை இந்த சுலோகத்தில் வர்ணிக்கிறார், இப்பொழுதும் கூட சிருங்கேரி யில் அதேமாதிரி ஆராதிக்கப்படுகிறாளென்பதும் பிரதிதினமும் வீதிகளில் உத்ஸவம் நடத்தப்படுகிறதென்பதும் குறிப்பிட வேண்டியதுண்டு. ஒவ்வொருவாஹனத்தின் சிறப்பைப் ப

பக்தி ஸுதாதரங்கிணியில் ஸ்ரீ நரஸிம்மபாரதீ ஸ்வாமிகள் விரிவாகக் கூறியுள்ளார்கள். (6)

ज्वलत्कान्तिवह्निं जगन्मोहनाङ्गीं
भजन्मानसाम्भोजसुभ्रान्तभृङ्गीम् ।
निजस्तोत्रसंगीतनृत्यप्रभाङ्गीं
भजे शारदाम्बां अजस्रं मदम्बाम् ॥ ७ ॥

ஜ்வலத் காந்தி வஹ்னிம் ஜகன் மோஹநாங்கீம்
பஜன் மாநஸாம்போஜ ஸுப்ராந்தப்ருங்கீம் ।
நிஜஸ்தோத்ர ஸங்கீத ந்ருத்யப்ரபாங்கீம்
பஜே ஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம் ॥

**ज्वलत्**-ஜ்வலிக்கிற, **कान्ति**-சோபையினால், **वह्निं**-அக்னிபோலுள்ளவளாயும், **जगत्-मोहन-अङ्गीं**-உலகத்தை மோஹிக்கச் செய்யும், சரீரத்தோடுகூடியவளாயும், **भजन्मानस-अम्भोज-सुभ्रान्त-भृङ्गीं**-பஜிக்கிறவர்களுடைய மனஸாகிற தாமரைகளில் நன்கு சுற்றிவரும் வண்டு போலுள்ளவளாயும், **निजस्तोत्र-संगीत-नृत्य-प्रभा-अङ्गीं**(தன்னைப்பற்றிய ஸ்துதிகளாலும் ஸங்கீதங்களாலும் ந்ருத்யங்களாலும் சோபிக்கும் சரீரத்தையுடையவளாயும் உள்ள, **मदम्बां**-என்தாயாரான, **शारदाम्बां**-சாரதாம்பிகையை, **अजस्रं**-இடைவிடாது, **भजे**-பஜி

அக்னிமண்டலம் போல் தேஜோமயமாக விளங்கிய போதிலும் எல்லோர் மனதையும் மயக்கும்படியான சரீர லாவண்யமுள்ளவள். அம்பிகையைப் பூஜித்து ஸ்தோத்ரம், கானம், நர்த்தனம் முதலிய உபசாரங்களால் பஜிக்கும் பக்தர்களின் மனதை விட்டுச்செல்லாமல் தாமரை மலரை வண்டுகள் மொய்ப்பது போல அங்கேயே சுற்றிச்சுற்றி வருவாள். (7)

भवाम्भोजनेत्राजसंपूज्यमानां
लसन्मन्दहासप्रभावक्त्रचिन्हाम् ।

भजे शारदाम्बां अजस्रं मदम्बाम् ॥ ८ ॥

*பவாம்போஜநேத்ராஜ ஸம்பூஜ்யமாநாம்*
*லஸன்மந்தஹாஸ ப்ரபா வக்த்ரசிஹ்நாம் |*
*சலச்சஞ்சலாசாரு தாடங்க கர்ணாம்*
*பஜே ஶாரதாம்பாமஜஸ்ரம் மதம்பாம் ||*

**भव**-பரமேசுவரர், **अम्भोजनेत्र**-மஹாவிஷ்ணு, **अज**-பிரஹ்மா இவர்களால், **संपूज्यमानां**-நன்கு பூஜிக்கப்படுகிறவளாயும், **लसत्-मन्दहास-प्रभा-वक्त्र-चिन्हां**-பிரகாசிக்கிற மந்தஹாஸத்தின் சோபையை அடையாளமாயுள்ள முகத்துடன் கூடியவளாயும், **चलत्-चञ्चला-चारु-ताटङ्क-कर्णां**-மின்னல் போல அழகிய ஒளியுடன் அசைந்து கொண்டிருக்கிற தாடங்கங்களோடு கூடிய காதுகளையுடையவளாயும் இருக்கும், **मदम्बां**-என் தாயாரான, **शारदाम्बां**-சாரதாம்பிகையை, **अजस्रं**-இடைவிடாது, **भजे**-ப...

*மின்னல் போன்ற ஒளியுடன் அசைந்தாடும் அழகிய தாடங்கங்கள் அம்பாளின் காதுகளில் தொங்குகின்றன. அழகிய மந்தஹாஸ சோபை அவளுடைய முகத்திற்கு முக்கிய அடையாளமாக விளங்குகிறது. ஜகத் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்னும் முத்தொழில்களையும் புரியும் ஜகத் காரணமான பிரஹ்மா, விஷ்ணு, சிவன் என்னும் மும்மூர்த்திகளும் தம் தம் தொழிலை நடத்த சாரதாம்பிகையை பூஜிக்கின்றனர். ஆகையால் சாரதாம்பிகை த்ரிமூர்த்திகளுக்கும் அதீதமான பரதத்வமே. இவ்விதப்பெருமை வாய்ந்த எனது மாதாவான ஸ்ரீசாரதாம்பாளை எப்பொழுதும் இடைவிடாமல் நான் பஜிக்கிறேன்.* (8)

ஸ்ரீ சாரதா புஜங்க ப்ரயாதாஷ்டகம் முற்றும்.

# ॥ भवानीभुजङ्गम् ॥

## பவானீ புஜங்கம்

---

[ திரிமூர்த்திகளுக்கும் அதீதமாய் இருக்கும் பராசக்தியை இந்த ஸ்தோத்திரத்தில் பவானி என்ற பெயரில் ஸ்ரீமத் ஆசார்யாள் ஸ்துதிக்கிறார். அவள் எங்கேயோ இருக்கிறாளென்று நினைக்கவேண்டாம். அவளேதான் நம் சரீரத்தில் இருந்து கொண்டு பல விதமாய் பிரகாசிக்கிறாள் என்று கூறி அவளை தியானிக்கவேண்டிய முறையை பாதம் முதல் சிரஸ்வரை அவளுடைய திவ்யமூர்த்தியை வர்ணிப்பது மூலமாய் எடுத்துக் காட்டுகிறார். ]

षडाधारपङ्केरुहान्तर्विराजत्
सुषुम्नान्तरालेऽतितेजोलसन्तीम् ।
सुधामण्डलं द्रावयन्तीं पिबन्तीं
सुधामूर्तिमीडे चिदानन्दरूपाम् ॥ १ ॥

ஷடாதார பங்கேருஹாந்தர் விராஜத்
ஸுஷும்நாந்தராளேऽதிதேஜோலஸந்தீம் ।
ஸுதாமண்டலம் த்ராவயந்தீம பிபந்தீம்
ஸுதாமூர்த்திமீடே சிதாநந்தரூபாம் ॥

**षडाधार-पङ्केरुहान्तर्विराजत्-सुषुम्ना-अन्तराले**-(மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம் மணிபூரகம் அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா என்ற) ஆறு ஆதாரங்களாகிய கமலங்களுக்குள் பிரகாசிக்கும் ஸுஷும்நா என்ற நாடியின் உள்ளே, **अति-तेजो-लसन्तीं**-மிகுந்த தேஜஸ்ஸுடன் பிரகாசிக்கிறவளும், **सुधा-मण्डलं** – (ஸஹஸ்ராரபத்மத்திலிருந்து) அமிருத மண்டலத்தை, **द्रावयन्तीं** – இளகி திரவிக்கும்படிச் செய்பவளும், (அவ்வமிருதத்தை), **पिबन्तीं**–பருகுகிறவளும், **सुधा-मूर्तिं**–தானே அமிருத மூர்த்தியாயிருப்பவளும், **चिदानन्द-रूपां**-ஞானஸ்வரூபிணியாயும் ஆனந்தஸ்வரூபிணியாயுமுள்ள பரதேவதையை, **ईडे**-ஸ்தோத்திரம் செய்கிறேன்.

*நம் சரீரத்தில் மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆக்ஞா என்னும் ஆறு சக்கரங்கள் கமலாகாரமாக உள்ளன. இவைகளினூடே தான் ஸுஷும்ன நாடி செல்லுகிறது மூலாதாரத்தில், பாம்பு உடலை சுருட்டிக் கொண்டு கூடைக்குள் இருப்பதைப்போல் குண்டலிநீ சக்தியும் உறங்கிக்கொண்டிருககிறது. யோகசக்தியால் அதை எழுப்பி ஸுஷும்நாநாடிவழியாக ஆறு சக்ரங்களையும் கடந்து மேலே யுள்ள ஸஹஸ்ராரகமலத்திற்குக் கொண்டுபோய் விட்டால் அங்கு பெருகும் அமிருதத்தைப் பானம் செய்து தான் அமிருதமூர்த்தி யாக ஆகி அந்த அமிருதத்தை த்ரவிக்கச்செய்து சரீரம் முழுவதும் பரவச் செய்கிருள் இவ்வாறு சரீரத்தில் குண்டலிநீ சக்தியாக விளங்கும் ஞானனந்த ஸ்வரூபிணியான பரதேவதையைத் துதிக்கிறேன்.* (1)

**ज्वलत्कोटिबालार्कभासारुणाङ्गीं**
**सुलावण्यशृङ्गारशोभाभिरामाम् ।**
**महापद्मकिञ्जल्कमध्ये विराज-**
**त्त्रिकोणे निषण्णां भजे श्रीभवानीम् ॥ २ ॥**

*ஜ்வலத்கோடி பாலார்க பாஸாருணங்கீம்*
*ஸுலாவண்ய ச்ருங்கார ஶோபாபிராமாம் l*
*மஹாபத்ம கிஞ்ஜல்க மத்யே விராஜத்*
*த்ரிகோணே நிஷண்ணும் பஜே ஸ்ரீபவாநீம் ॥*

**ज्वलत्-कोटि-बालार्कभासारुणाङ्गीं** – ஜ்வலிக்கிற கோடிக்கணக் கான இளம ஸூர்யர்களுடைய பிரகாசம் போல் சிவந்த சரீரத்தை உடையவளாயும், **सुलावण्य-शृङ्गार-शोभाभिरामां**–மிகுந்த அழகிலும் சிருங்காரபாவத்திலும் ஏற்படும சோபையினுல் மனேஹரமாயிருப்ப வளாயும், **महा-पद्म-किञ्जल्कमध्ये**-பெரிய தாமரைப்பூவின் கிஞ்ஜல்கத்தின் மத்தியில், **विराजत्-त्रिकोणे**–பிரகாசிக்கிற முக்கோணத்தில், **निषण्णां**– வீற்றிருப்பவளுமான, **श्रीभवानीं** – ஸர்வ ஸம்பத்தும் பொருந்திய பவானியை, **भजे**–பஜிக்கிறேன்.

*பெரியதாமரையின் மத்தியிலுள்ள கிஞ்ஜல்கத்தின் நடுவில் முக்கோணவடிவமான சக்ரத்தில் பவானி அமர்ந்திருக்கிருள்.*

ஒரே சமயத்தில் கோடி சூரியர்கள் உதயமானது போல் அவளுடைய சரீரம் செந்நிற ஒளிப்பிழம்பாக விளங்குகிறது. அவளுடைய அழகும் சிருங்கார பாவமும் மனதை ஆனந்தப் படுத்துகிறது. இந்த பவானியை பஜிக்கிறேன். (2)

क्वणत्किङ्किणीनूपुरोद्भासिरत्न-
प्रभालीढलाक्षार्द्रपादाब्जयुग्मम् ।
अजेशाच्युताद्यैः सुरैः सेव्यमानं
महादेवि मन्मूर्ध्नि ते भावयामि ॥ ३ ॥

க்வணத் கிங்கிணீ நூபுரோத்பாஸிரத்ந
ப்ரபாலீடலாக்ஷார்த்ர பாதாப்ஜயுக்மம் ।
அஜேசாச்யுதாத்யை: ஸுரை: ஸேவ்யமாநம்
மஹாதேவி மந்மூர்த்நி தே பாவயாமி ॥

**महादेवि**-ஹே மஹாதேவி, **ते**-உன்னுடைய, **अज-ईश-अच्युत-आद्यैः**-பிரஹ்மா பரமசிவன் விஷ்ணு முதலான, **सुरैः**-தேவர்களால், **सेव्यमानं**-ஸேவிக்கப்படுகிறதும், **क्वणत्-किङ्किणी-नूपुर-उद्भासि-रत्न-प्रभा-लीढ-लाक्षार्द्र-पादाब्ज-युग्मं**-ஒலிக்கின்ற சலங்கைகளோடு கூடிய நூபுரங்களில பிரகாசிக்கும் ரத்னங்களின் ஒளி பரவியதும் செம்மஞ்சு குழம்பினுல் ஈரமாயிருக்கிறதுமான தாமரைபோலுள்ள இரண்டு சரணங்களை, **मन्मूर्ध्नि** - என்னுடைய சிரஸில, **भावयामि** - இருப்பதாக

அம்பிகையின் பாதங்களே தாமரை போல் சிவந்தவை. அவைகளில் லாக்ஷா ரஸத்தினுல் ஏற்படும் சிவப்பும் சேர்ந்து உள்ளது. அத்துடன் அவள் பாதஸரங்களிலுள்ள ரத்னங்களின் பிரபையும் சேரும்போது மிகவும் பிரகாசிக்கும். அந்த பாத ஸரங்களில் சிற்சில மணிகள் மாதிரி சப்திக்கும் சலங்கைகளும் இருக்கின்றன. இப்பாதங்கள் மும்மூர்த்திகளாலும் மற்றும் எல்லாதேவர்களாலும் ஆராதிக்கப்படுகின்றன. அவைகள் என் சிரஸ்ஸில் இருப்பதாக பாவிக்கிறேன். அதாவது அம்பிகையின் திருவடிகளை என் சிரஸ்ஸால் தாங்குவதாக தியானிக்கிறேன். முன் சுலோகங்களில் ஸஹஸ்ராரகமலத்தில் அம்பிகை அமர்ந்திருப்பதாகக் கூறபபட்டது. இந்தக்கமலம் சிரஸ்ஸில்

உள்ளது. ஆகவே இந்த சுலோகத்தை முன் சுலோகங்களுடன் சேர்த்துப்பார்த்தால் சிரஸில் உள்ள ஸஹஸ்ரார பத்மத்தில் ஜோதிவடிவாக விளங்கும் அம்பிகையின் திருவடிகளை தியானிப்பதாக இந்த சுலோகத்திற்குப் பொருள் கூறலாம். (3)

(அ) பாதங்களை தியானித்து விட்டு இடுப்புப் பிரதேசத்தை தியானிக்கிறார்:—

सुशोणाम्बराबद्धनीवीविराज-
न्महारत्नकाञ्चीकलापं नितम्बम् ।
स्फुरद्दक्षिणावर्तनाभिं च तिस्रो
वलीरम्ब ते रोमराजिं भजेऽहम् ॥ ४ ॥

ஸுசோணாம்பராபத்த நீவீவிராஜந்
மஹாரத்ந காஞ்சீகலாபம் நிதம்பம் ।
ஸ்புரத் தக்ஷிணாவர்த்தநாபிம் ச திஸ்ரோ
வலீரம்ப தே ரோமராஜிம் பஜேऽஹம் ॥

**सुशोणाम्बराबद्ध-नीवी-विराजत्-महारत्न-काञ्ची-कलापं** – நல்ல சிவப்புள்ள சேலையில் நன்கு கட்டியிருக்கிற முடிச்சில் பிரகாசிக்கிற உத்தமமான ரத்னங்கள் இழைத்த ஒட்டியாணமாகிற ஆபரணத்துடன் கூடிய, **नितम्बम्** –இடுப்பையும், **स्फुरत्-दक्षिणावर्त्त-नाभिं**–அழகான வலஞ்சுழியுள்ள நாபியையும், **तिस्रः**–மூன்று, **वलीः**–மடிப்புகளையும், **अम्ब**–தாயே, **ते**–உன்னுடைய, **रोम-राजिं च**-ரோமவரிசையையும், **अहं**–நான், **भजे**–பஜிக்கிறேன்.

இடுப்பில் அழகிய செந்நிறமுள்ள பட்டாடை உடுத்தி அதன் மேல் உயர்ந்த ரத்னங்கள் பதித்த ஒட்டியாணம் அணிந்து கொண்டிருக்கிறாள். இந்த இடுப்பு பிரதேசத்தையும் அதற்கு மேலுள்ள வலஞ்சுழித் தொப்புளையும் மூன்று மடிப்புகளையும் ரோமவரிசையையும் தியானிக்கிறேன். (4)

(அ) ஸ்தனங்களை வர்ணிக்கிறார்.—

लसद्वृत्तमुत्तुङ्गमाणिक्यकुम्भो-
पमश्रि स्तनद्वन्द्वमम्बाम्बुजाक्षि ।

भजे दुग्धपूर्णाभिरामं तवेदं
महाहारदीप्तं सदा प्रस्नुतास्यम् ॥ ५ ॥

*லஸத் வ்ருத்தமுத்துங்க மாணிக்ய கும்போ-*
*பமச்ரி ஸ்தநத்வந்த்வமம்பாம்புஜாக்ஷி ।*
*பஜே துக்தபூர்ணாபிராமம் தவேதம்*
*மஹாஹாரதீப்தம் ஸதா ப்ரஸ்நுதாஸ்யம் ॥*

**अम्बुजाक्षि**-தாமரைபோன்ற கண்களுள்ள, **अम्ब**-தாயே, **तव**-உன்னுடைய, **लसद्वृत्तं**-அழகாக வர்துளமானதும், **उत्तुङ्ग-माणिक्य-कुम्भोपमश्रि**-உயர்ந்ததும மாணிக்கக் குடத்திற்கு ஸமானமான சோபையுடையதும், **दुग्ध-पूर्णाभिरामं**-க்ஷீரம் நிறைந்து வெகு அழகாய் இருப்பதும், **महाहार-दीप्तं**-பெரிய ஹாரங்களினுல் பிரகாசிக்கிறதும், **प्रस्नुतास्यं**-(வாத்ஸல்யத்தினுல்) பால் கசியும் நுனியுடையதாயும் உள்ள **इदं**-இந்த, **स्तनद्वन्द्वं**-இரண்டு ஸ்தனங்களையும், **सदा**-எப்பொழுதும், **भजे**-பஜி

*உயர்ந்தும் பருத்தும் செந்நிறமாயுமுள்ள அம்பிகையின் ஸ்தனங்களிரண்டும் மாணிக்க ரத்னத்தால் செய்யப்பட்ட இரு குடங்கள்போல் சோபிக்கின்றன. கழுத்தில் அணிந்துள்ள சிறந்த ஹாரங்கள் ஸ்தனங்களின் மேல் அசைந்தாடுகின்றன ஜகன்மாதாவின் வட்டவடிவமுள்ள இந்த ஸ்தனங்கள் பால் நிறைந்து பார்க்க அழகாக இருப்பதுடன் குழந்தைகளிடம் வாத்ஸல்யத்தால் எப்பொழுதும் பால் பெருகிய வண்ணம் இருக்கின்றன.* **सदा** *(எப்பொழுதும்) என்பதை* **प्रस्नुत** *(பெருகுகிற) என்பதோடும்,* **भजे** *என்பதோடும் அன்வயம் செய்யலாம். எப்பொழுதும் பால் பெருகும் ஸ்தனங்களை எப்பொழுதும் பஜிக்கிறேன் என்ற பொருள் கிடைக்கும்.* (5)

*(அ) பிறகு அம்பிகையின் நான்கு கைகளை வர்ணிக்கிறார்:—*

शिरीषप्रसूनोल्लसद्बाहुदण्डै-
र्ज्वलद्बाणकोदण्डपाशांकुशैश्च ।
चलत्कङ्कणोदारकेयूरभूषो-
ज्ज्वलद्भिर्लसन्तीं भजे श्रीभवानीम् ॥ ६ ॥

*ஶிரீஷப்ரஸூநோல்லஸத் பாஹுதண்டைர்*
*ஜ்வலத் பாண கோதண்ட பாஶாங்குஶைஶ்ச ।*
*சலத் கங்கணோதார கேயூர பூஷோ-*
*ஜ்வலத்பிர் லஸந்தீம் பஜே ச்ரீபவாநீம் ॥*

**ज्वलत्-बाण-कोदण्ड-पाश-अंकुशैः** – ஜ்வலிக்கிற அம்பு, வில், பாசம், அங்குசம் இவைகளுடன் கூடியவைகளாயும், **चलत्-कङ्कण-उदार-केयूरभूषा-उज्ज्वलद्भिः च**–அசைகிற கங்கணங்கள், சிறந்த தோள் வளைகள், இந்த ஆபரணங்களால் நன்கு சோபிக்கின்றவைகளுமான, **शिरीष-प्रसून-उल्लसत्-बाहु-दण्डैः**- சிரீஷ புஷ்பம்போல் பிரகாசிக்கிற நீளமான கைகளுடன், **लसन्तीं**–சோபிக்கிற, **श्रीभवानीं**–ஸ்ரீபவானியை, **भजे**–பஜிக்கிறேன்.

*சிரீஷ புஷ்பம் போல் மிருதுவாக விளங்கும் தனது நான்கு கைகளிலும் பிரகாசமான வில், அம்பு பாசம், அங்குசம் என்ற நான்கு ஆயுதங்களை தரித்திருக்கிருள் அம்பிகை. கைகளில் அணியப்பெற்ற கங்கணம், தோள்வளை முதலான நகைகள் அழகாக அசைந்தாடுகின்றன. இந்தக்கைகளை பஜிக்கிறேன்.*

*(அ) இரண்டு சுலோகங்களால் தேவியின் முகத்தை வர்ணிக்கிருர்:—*

शरत्पूर्णचन्द्रप्रभापूर्णबिम्बा-
धरस्मेरवक्त्रारविन्दां सुशान्ताम् ।
सुरत्नावलीहारताटङ्कशोभां
महासुप्रसन्नां भजे श्रीभवानीम् ॥ ७ ॥

*ஶரத் பூர்ண சந்த்ர ப்ரபா பூர்ணபிம்பா-*
*தர ஸ்மேர வக்த்ராரவிந்தாம் ஸுஶாந்தாம் ।*
*ஸுரத்நாவளீ ஹார தாடங்க ஶோபாம்*
*மஹாஸுப்ரஸந்நாம் பஜே ஸ்ரீபவாநீம் ॥*

**शरत्-पूर्ण-चन्द्र-प्रभा-पूर्ण** – சரத்காலத்து பூர்ணசந்திரனுடைய காந்தியுடன் நிறைந்ததாகவும், **बिम्बाधर-स्मेर**-கோவைப்பழம்போல் உள்ள உதடுகளில் புன்சிரிப்புள்ளதாகவும் இருக்கும், **वक्त्रारविन्दां**-முக கமலத்தை உடையவளாயும், **सुशान्तां**–மிகவும் சாந்த ஸ்வரூபிணி

யாயும், **रत्नावली-हार-ताटङ्क-शोभां**-நல்ல ரத்னங்களின் வரிசை யுடைய ஹாரங்களாலும் தாடங்கங்களாலும் சோபிக்கிறவளாயும், **महासु-प्रसन्नां**-மிகவும் நன்ருக பிரஸன்னையாயும் இருக்கும், **श्रीभवानीं**-ஸ்ரீபவானியை, **भजे**-பஜிக்கிறேன்.

*சரத்காலத்தில் பௌர்ணமியன்று மேகங்களின் மறைவு அன்னியில் காணப்படும் பூர்ண சந்திரனின் ஒளி போன்ற ஒளி நிறைந்ததும், கோவைக்கனி போல் சிவந்த அதரங்களுள்ளதும் புன் சிரிப்புடன் கூடியதுமான தாமரைபோன்ற முகமுள்ளவளும், சாந்த ஸ்வபாவமுள்ளவளும். ரத்னங்களின் வரிசைகொண்ட ஹாரம், தாடங்கம் இவைகளால் சோபிக்கிறவளும் மிகவும் ப்ரஸந்நமாக இருப்பவளுமான பவானியை பஜிக்கிறேன்,* (7)

सुनासापुटं सुन्दरभ्रूललाटं
तवौष्ठश्रियं दानदक्षं कटाक्षम् ।
ललाटोल्लसद्गन्धकस्तूरिभूषं
स्फुरच्छ्रीमुखाम्भोजमीडेऽहमम्ब ॥ ८ ॥

*ஸுநாஸாபுடம் ஸுந்தரப்ரூலலாடம்*
*தவௌஷ்டச்ரியம் தாநதக்ஷம் கடாக்ஷம் I*
*லலாடோல்லஸத்கந்தகஸ்தூரிபூஷம்*
*ஸ்புரத்ஸ்ரீமுகாம்போஜமீடே ஃஹமம்ப II*

**अम्ब**-தாயே, **तव**-உன்னுடைய, **सुनासा-पुटं**-அழகான மூக்குப் பிரதேசத்தையும், **सुन्दर-भ्रू-ललाटं**-அழகான புருவங்களோடுகூடிய நெற்றியையும், **ओष्ठ-श्रियं**-உதடுகளின் சோபையையும், **दान-दक्षं**-கொடுப்பதில் வல்லமையுள்ள, **कटाक्षं**-கடைக்கண் பார்வையையும், **ललाट-उल्लसत्-गन्ध-कस्तूरि-भूषं**-நெற்றியில் நன்கு பிரகாசிக்கிற வாசனையுள்ள கஸ்தூரீ திலக அலங்காரமுள்ள, **स्फुरत्-श्री-मुख-अम्भोजं**-நன்கு பிரகாசிக்கும் காந்தியுடன்கூடிய முகமாகிற பத்மத்தையும், **अहं**-நான், **ईडे**-ஸ்துதிக்கிறேன்.

*தாயே! அழகிய மூக்கு, அழகிய புருவங்களுடன் கூடிய நெற்றி பிரதேசம், அழகிய உதடுகள், ஏராளமாக கொடுப்பதில் மிகுந்த திறமையுள்ள கடாக்ஷம், நெற்றியில் வாசனையுள்ள*

கஸ்தூரீ திலகாலங்காரம் இவைகளுடன் சோபிக்கும் தாமரை போன்ற உன் திருமுகமண்டலத்தைத் துதிக்கிறேன். (8)

(அ) இவ்விதமாக முகத்தை வர்ணித்துவிட்டு சிரஸை துதிக்கிறார் :—

चलत्कुन्तलान्तर्भ्रमद्भृङ्गवृन्दं
घनस्निग्धधम्मिल्लभूषोज्ज्वलं ते ।
स्फुरन्मौलिमाणिक्यबद्धेन्दुरेखा-
विलासोल्लसद्दिव्यमूर्धानमीडे ॥ ९ ॥

சலத்குந்தளாந்தர்ப்ரமத்ப்ருங்கப்ருந்தம்
கநஸ்நிக்ததம்மில்லபூஷோஜ்வலம் தே I
ஸ்புரன்மௌளிமாணிக்யபத்தேந்துரேகா
விலாஸோல்லஸத்திவ்யமூர்தாநமீடே II

**चलत्-कुन्तलान्तः**—அசைகிற கேசங்களுக்கு மத்தியில், **भ्रमद्-भृङ्ग-वृन्दं**—சுற்றிவரும் வண்டுக் கூட்டத்தையுடையதும், **घन-स्निग्ध-धम्मिल्ल-भूषा-उज्ज्वलं**—நெருக்கமாயும் வழவழப்பாயுமுள்ள கேசங்களின் அலங்காரத்தினால் வெகுவாக சோபிக்கிறதும், **स्फुरत्-मौलि-माणिक्य-बद्ध**—பிரகாசிக்கிற சிரஸில் உள்ள கிரீடத்தின் மாணிக்கத்துடன் இசைக்கப்பட்டிருக்கிற, **इन्दु-रेखा**—சந்திரகலையின், **विलास-उल्लसत्**—சோபையினால் நன்கு பிரகாசிக்கிற, **ते**—உன்னுடைய, **दिव्य-मूर्धानं**—திவ்யமான சிரஸை, **ईडे**—ஸ்தோத்ரம் செய்கிறேன்.

அம்பிகையின் சிரஸ்ஸிலுள்ள அசைந்தாடும் கேசங்களின் வாசனைக்காக அங்கு வண்டுகள் சுற்றிச்சுற்றி வருகின்றன. நெருக்கமாயும் வழவழப்பாயுமுள்ள கேசங்கள் அலங்காரத்துடன் சோபிக்கின்றன. சிரஸ்ஸில் உள்ள கிரீடத்தில் பதிக்கப்பட்ட மாணிக்க ரத்னத்துடன் சேர்ந்த சந்திரகலையின் அழகால் மிகுந்த சோபையுடன் சிரஸ்ஸு விளங்குகிறது. இப்பேற்பட்ட அம்பிகையின் சிரஸ்ஸைப் போற்றுகிறேன். (9)

(அ) இவ்விதம் பாதாதி கேசாந்தம் தேவியை ஸ்துதித்துவிட்டு இவ்விதரூபம் தன் ஹ்ருதயத்தை விட்டு விலகாது எப்பொழுதும் பிரகாசிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறார்:—

इति श्रीभवानि स्वरूपं तवेदं
प्रपञ्चात्परं चातिसूक्ष्मं प्रसन्नम् ।
स्फुरत्वम्ब डिम्भस्य मे हृत्सरोजे
सदा वाङ्मयं सर्वतेजोमयं च ॥ १० ॥

*இதி ஸ்ரீபவானி ஸ்வரூபம் தவேதம்*
*ப்ரபஞ்சாத் பரம் சாதிஸூக்ஷ்மம் ப்ரஸந்நம் ||*
*ஸ்புரத்வம்ப டிம்பஸ்ய மே ஹ்ருத்ஸரோஜே*
*ஸதா வாங்மயம் ஸர்வதேஜோமயம் ச ||*

**श्रीभवानि**-ஸ்ரீபவானி, **अम्ब**-தாயே, **इति**-இவ்விதமாயுள்ள, **इदं**-இந்த, **तव**-உன்னுடைய, **प्रपञ्चात्**-ஜகத்திற்கு, **परं**-அதீதமாயும், **अतिसूक्ष्मं च**-அறிவதற்கு மிகவும் அரியதாயும், **प्रसन्नं**-பிரஸன்னமாயும், **वाङ्मयं**-வாக்குமயமாயும், **सर्वतेजोमयं च**-எல்லா தேஜோமயமாயும் உள்ள, **स्वरूपं**-ஸ்வரூபம், **डिम्भस्य**-சிறுவனுடை, **मे**-என்னுடைய **हृत्सरोजे**-ஹ்ருதயகமலத்தில், **सदा**-எக்காலத்திலும், **स्फुरतु**-பிரகாசிக்கட்டும்.

*ஹே பவானி! இவ்வாறு என்னால் துதிக்கப்பட்ட உன் ஸ்வரூபம் குழந்தையான என் ஹிருதய கமலத்தில் எப்பொழுதும் விளங்கவேண்டும் வாஸ்தவத்தில் உன் ஸ்வரூபம் பிரபஞ்சத்துடன் சேராமல் அதற்கு அப்பாலுள்ளது. அதனால் மிகவும் ஸூக்ஷ்மமானது. புலன்களாலும் மனதாலும் அறியக் கூடியதல்ல. உலகிலுள்ள எல்லா ஒலிகளும் ஒளிகளும் அம்பிகையின் ஸ்வரூபம்தான்.*

*(அ) ஸ்ரீ சக்ரநிவாஸினியான அம்பிகையை காமேசுவரருடன் சேர்த்து தியானிக்கிறார்:—*

गणेशाणिमाद्याखिलैः शक्तिवृन्दै-
र्वृतां वै स्फुरच्चक्रराजोल्लसन्तीम् ।
परां राजराजेश्वरि त्रैपुरि त्वां
शिवाङ्कोपरिस्थां शिवां भावयामि ॥ ११ ॥

*கணேசாணிமாத்யாகிலை: சக்திப்ருந்தை:*
*வ்ருதாம் வை ஸ்புரச்சக்ரராஜோல்லஸந்தீம் ||*

*பராம் ராஜராஜேச்வரி த்ரைபுரி த்வாம்*
*ஶிவாங்கோபரிஸ்த்தாம் ஶிவாம் பாவயாமி ॥*

**राजराजेश्वरि**–ராஜராஜேச்வரி, **त्रैपुरि**-திரிபுரஸுந்தரியே, **त्वां**-உன்னை, **गणेश-अणिमा-आद्य-अखिलैः**–கணேசர், அணிமா முதலான எல்லா, **शक्ति-बृन्दैः-वृतां वै**·சக்திகளின் கூட்டங்களால் பிரஸித்தமாக சூழப்பட்டிருப்பவளாகவும், **स्फुरत्- चक्रराज-उल्लसन्तीं** – பிரகாசிக்கிற ஸ்ரீசக்ரத்தில் நன்கு விளங்குகிறவளாயும், **परां**–மிகவும் மேலானவளாயும், **शिवाङ्कोपरिस्थां** – பரமசிவனுடைய மடியின் மேல் இருப்பவளாயும், **शिवां** – ஸர்வ மங்கள ஸ்வரூபிணியாகவும் **भावयामि**–தியானம் செய்கிறேன்.

*ஸ்ரீ ராஜராஜேச்வரியான ஸ்ரீ லலிதா மஹாத்ரிபுரஸுந்தரியை சக்ரராஜமென்னும் ஸ்ரீ சக்ரத்தில் தியானித்து ஆராதிக்கும் முறைகள் சாஸ்திரங்களில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. ஸௌந்தர்யலஹரி முதலான ஸ்தோத்ரங்களில் பகவத்பாதாளும் ஸ்ரீசக்கரத்தைப்பற்றிக் கூறியுள்ளார்கள். மஹாகணபதி முதலான தேவதைகளாலும் அணிமாமுதலான சக்திக் கூட்டங்களாலும் சூழப்பட்டு ஸ்ரீசக்ரத்தின் மத்தியில் ஸ்ரீகாமேசுவரரின் மடியில் அமர்ந்துள்ள ஸ்ரீகாமேச்வரியை தியானம் செய்கிறார் 'சிவ காமேச்வராங்கஸ்தா' (52) என்று லலிதா ஸஹஸ்ரநாமாவளியிலும் கூறப்பட்டிருக்கிறது. ஸ்ரீ சக்ரபூஜையில் முதலாவதாக ஆயதன தேவதையாக கணபதியும் முதலாவது ஆவரணத்தில் த்ரைலோக்ய மோஹன சக்ரத்தில் முதலாவதாக அணிமாசக்தியும் கூறப்பட்டிருக்கிறது. இவ்விரண்டு தேவதைகளையும் இந்த சுலோகத்தில் குறிப்பிட்டுள்ளார். ஆதிபதத்தால் மற்ற எல்லா தேவதைகளையும் ஒன்பது ஆவரணங்களிலுமுள்ள எல்லா சக்திகளையும் குறிப்பிடுகிறார். இவர்கள் எல்லோரும் அம்பாளுக்குப் பரிவாரதேவதைகள்.* (11)

**त्वमर्कस्त्वमिन्दुस्त्वमग्निस्त्वमाप-**
**स्त्वमाकाशभूर्वायवस्त्वं महत्त्वम् ।**
**त्वदन्यो न कश्चित्प्रपञ्चोऽस्ति सर्वं**
**त्वमानन्दसंवित्स्वरूपां भजेऽहम् ॥ १२ ॥**

*த்வமர்க்கஸ் த்வமிந்துஸ் த்வமக்நிஸ் த்வமாப-*
*ஸ்த்வமாகாஶபூவாயவஸ்த்வம் மஹத் த்வம் I*
*த்வதந்யோ ந கச்சித் ப்ரபஞ்சோऽஸ்தி ஸர்வம்*
*த்வமாநந்தஸம்வித்ஸ்வரூபாம் பஜேऽஹம் II*

**त्वं**-நீதான், **अर्कः**-ஸூர்யன், **त्वं**-நீதான், **इन्दुः**-சந்திரன், **त्वं**-நீதான், **अग्निः**-தேஜஸ், **त्वं**-நீதான், **आपः**-ஜலம், **त्वं**-நீதான், **आकाश-भू-वायवः**-ஆகாசமும், பூமியும், வாயுவும, **त्वं**-நீதான், **महत्त्वं**-மஹத்தத்வமாயிருப்பதும். **त्वत्-अन्यः** - உன்னை விட்டு வேறு, **कश्चित्**-எந்தவித, **प्रपञ्चः**-உலகமும், **न अस्ति**-கிடையாது. **सर्वं**-எல்லாமே, **त्वं** - நீதான், **आनन्द-संवित्-स्वरूपां** - ஆனந்தத்தையும் ஞானத்தையும் ஸ்வரூபமாகவுடைய (உன்னை) **अहं**-நான், **भजे**-பஜிக்கிறேன்.

*பத்தாவது சுலோகத்தில் தேவி பிரபஞ்சத்திற்கு அதீதமா யுள்ளவள் என்றும் 11ல் மிகவும் மேலானவள் என்றும் சொன்னதி லிருந்து அவள் பிரபஞ்சத்தை வியாபிக்கவில்லையோ என்ற ஸந்தேஹம் ஏற்படக்கூடியதால் அதை நிவிருத்தி செய்யும் பொருட்டு அவள் பிரபஞ்சத்தை வியாபிக்கிருள் என்பது மட்டு மல்ல அவள் தான் பிரபஞ்சமாகத்தோற்ற மளிக்கிருள், அவளைத் தவிர்த்து பிரபஞ்சத்திற்கு இருப்பே கிடையாது, என்பதை இந்த சுலோகத்தில் விளக்குகிருர்.*

*பிருதிவி, ஜலம், ஸூரியன், சந்திரன், அக்னி, ஆகியதேஜஸ், வாயு, ஆகாசம் என்னும் பஞ்சபூதங்கள் இவைகளுக்குக் காரணமான மஹத்தத்வம் இவைகள் எல்லாம் நீ தான். உலகில் எல்லாம் பஞ்ச பூதங்களிலிருந்து உண்டானவைதான். பஞ்ச பூதங்களைப்பற்றிக் குறிப்பிட்டதால் பௌதிகமான ஸர்வ பிரபஞ்சமும்அம்பிகையின் ஸ்வரூபம்தான் என்பது சொல்லாமலே ஸித்தமாகிறது. நீ பிரபஞ்சம் என்று சொன்னதால் மண் குட மாக மாறிவிடுவதுபோல் அம்பிகை பிரபஞ்சமாக மாறிவிட்டாள் என்று நினைக்கக்கூடாது என்பதற்காக உன்னைத்தவிர வேருக பிரபஞ்சமில்லை என்று இதன் கருத்தைப்பின்னுல் விளக்குகிருர். உண்மையில் பாம்பு கயிற்றைக் காட்டிலும் வேருக அங்கு இல்லா விட்டாலும் அக்ஞானத்தால் சிறிதுகாலம் மட்டும் கயிறு பாம்பாக தோன்றுகிறது. 'இது கயிறு' என்று தெரிந்து விட்டால் பிறகு*

பாம்பு தோன்றுவதில்லை. மறைந்துவிடுகிறது. இதுபோல் அம்பிகையைத்தவிற வேருக பிரபஞ்சம் உண்மையில் இல்லா விட்டாலும் மாயையால் பிரபஞ்சம் தோன்றுகிறது. அம்பிகையின் உண்மை ஸ்வரூபமான ஸச்சிதானந்த ஸ்வரூபத்தை அறிந்து விட்டால் பிறகு பிரபஞ்சம் மறைந்து விடுகிறது. தோன்றுவ தில்லை. ஸச்சிதானந்தமான ப்ரஹ்மமேதான் அம்பிகை என்பது கருத்து. (12)

श्रुतीनामगम्ये सुवेदागमज्ञा
महिम्नो न जानन्ति पारं तवाम्ब ।
स्तुतिं कर्तुमिच्छामि ते त्वं भवानि
क्षमस्वेदमत्र प्रमुग्धः किलाहम् ॥ १३ ॥

ச்ருதீநாமகம்யே ஸுவேதாகமஜ்ஞா
மஹிம்நோ ந ஜாநந்தி பாரம் தவாம்ப ।
ஸ்துதிம் கர்த்துமிச்சாமி தே த்வம் பவானி
க்ஷமஸ்வேதமத்ர ப்ரமுக்த: கிலாஹம் ॥

श्रुतीनां-வேதங்களால், अगम्ये-அறியத்தகாத, अम्ब-தாயே, सुवेदागमज्ञाः-நன்குவேதங்களையும் ஆகமங்களையும் அறிந்தவர்கள்கூட, तव-உன்னுடைய, महिम्नः-மஹிமையினுடைய, पारं-எல்லையை, न जानन्ति-அறியவில்லை. भवानि-ஹே பவானி, ते-உன்விஷயமாக स्तुतिं - ஸ்தோத்திரத்தை, कर्तुं - செய்வதற்கு, इच्छामि - ஆசைப் படுகிறேன். इदं-இதை, त्वं-நீ, क्षमस्व-பொறுத்தருளவேண்டும். अहं-நான், अत्र - இத்தவிஷயத்தில, प्रमुग्धः किल - மிகவும் மூடன் அல்லவா ?

சராசரப்பிரபஞ்சம் பூராவும் தேவியின் அம்சமாகுமே தவிர அவளுடைய வாஸ்தவஸ்வரூபம் பிரபஞ்சத்திற்கு அதீதம் தான். அதினலேயே அவளை வேதங்களே எடுத்துச்சொல்ல முடியாமல் இருக்கின்றன. நன்கு வேதங்களையும் சாஸ்திரங்களையும் அறிந்தவர்கள் கூட அவளுடைய மஹிமை இவ்வளவுதான் என்று தெரிந்துகொள்ளமுடியாது. அப்படியிருக்க அந்த பரதேவதையை ஸ்துதிக்க வெறும் மூடனை நான் ஆரம்பித்தேனே, இந்த அபராதத்தையும் நீதான் மன்னிக்கவேண்டுமென்று பிரார்த்திக் கிறார். (13)

गुरुस्त्वं शिवस्त्वं च शक्तिस्त्वमेव
त्वमेवासि माता पिता च त्वमेव ।
त्वमेवासि विद्या त्वमेवासि बन्धुः
गतिर्मे मतिर्देवि सर्वं त्वमेव ॥ १४ ॥

குருஸ்த்வம் ஶிவஸ்த்வம் ச ஶக்திஸ்த்வமேவ
த்வமேவாஸி மாதா பிதா ச த்வமேவ ।
த்வமேவாஸி வித்யா த்வமேவாஸி பந்து:
கதிர் மே மதிர் தேவி ஸர்வம் த்வமேவ ॥

त्वं-நீதான், गुरुः-குரு, त्वं-நீதான், शिवः-பரமசிவன், त्वं एव-நீயே, शक्तिः च-சக்தியும், त्वमेव-நீயே, माता-தாயாராக, असि-இருக்கிறாய். त्वमेव-நீயே, पिता च-தகப்பனாரும், त्वं एव-நீயே, विद्या-வித்யையாக, असि-இருக்கிறாய், त्वं एव-நீயே, बन्धुः-பந்துவாக, असि-இருக்கிறாய். मे-எனக்கு, गतिः-அடையவேண்டியதும், मतिः-ஞானமும், सर्वं-எல்லாமே, देवि-ஹே தேவி, त्वं एव-நீதான்.

உலகத்தில் ஆராதிக்கவேண்டியதாக மாதாபிதாக்கள், குரு, தைவம், எல்லாமிருக்கையில் அவர்களை விட்டு அம்பிகையை பஜிப்பது நியாயமாவென்றால் அவர்களும் உன் ஸ்வரூபமாகவே இருப்பதால் உன்னை ஆராதித்தால் அவர்களையும் ஆராதித்ததாக ஆகிவிடும். தவிரவும் அவர்கள் கொஞ்சதூரம் தான் ஸஹாயம் செய்து வழிகாட்டிகளாக இருப்பார்கள். நீயோ அடைய வேண்டிய லக்ஷ்யமாகவும் அதன் உபாயமான ஞானமாகவும் இருப்பதால் உன்னை ஆசிரயிப்பதே நியாயம் என்கிறார். (14)

शरण्ये वरेण्ये सुकारुण्यमूर्ते
हिरण्योदराद्यैः अगण्ये सुपुण्ये ।
भवारण्यभीतेश्च मां पाहि भद्रे
नमस्ते नमस्ते नमस्ते भवानि ॥ १५ ॥

ஶரண்யே வரேண்யே ஸுகாருண்யமூர்த்தே
ஹிரண்யோதராத்யைரகண்யே ஸுபுண்யே ।

*பவாரண்யபீதேச்ச மாம் பாஹி பத்ரே*
*நமஸ்தே நமஸ்தே நமஸ்தே பவானி ॥*

**शरण्ये**–எல்லாராலேயும் சரணம் அடையத்தகுந்தவளே, **वरेण्ये**-ஸர்வோத்கிருஷ்டமானவளே, **सुकारुण्य-मूर्त्ते**-மிகக்காருண்ய மூர்த்தியே **हिरण्योदराद्यैः**-ஹிரண்யகர்ப்பர் முதலானவர்களால், **अगण्ये**-அளவிட முடியாதவளே, **सुपुण्ये**-நன்கு பரிசுத்தமாயிருப்பவளே, **भद्रे**-மங்கள ஸ்வரூபிணியே, **भवानि**-ஹே பவானி, **भवारण्य-भीतेश्च**-ஸம்ஸாரமாகிற அரண்யத்தினுல் அடைந்திருக்கும் பயத்திலிருந்து, **मां**-என்னை, **पाहि**-காப்பாற்று. **ते**-உனக்கு, **नमः**-நமஸ்காரம். **ते**-உனக்கு, **नमः**-நமஸ்காரம். **ते**-உனக்கு, **नमः**-நமஸ்காரம்.

*உன்னிடத்தில் மிகுந்த கருணையும் யாவரையும் காப்பாற்றும் திறமையும் பூர்ணமாக இருப்பதால் எல்லோராலும் சரணவரணம் செய்யத்தக்க உத்கிருஷ்டமான கருணாமூர்த்தி நீ ஒருவள் தான். புண்யமான உனது மஹிமைகளை ஸர்வலோக பிதாமஹரான பிரஹ்மாவும் அளவிட்டுக் கூறமுடியாது. மந்தபுத்தியுள்ள நான் எப்படிக் கூறமுடியும்? தவிரவும் ஸம்ஸாரமென்னும் கொடிய காட்டின் நடுவில் அகப்பட்டுக்கொண்டு வெளியேற வழி தெரியாமல் பயத்தால் தவிக்கிறேன். நீ தான் காப்பாற்ற வேண்டும் எனக்கு வேறு ஒன்றும் தெரியாது உன் திவ்ய சரணங்களில் திருப்பித்திருப்பி நமஸ்காரம் செய்கிறேன். என்று கூறி ஸ்தோத்திரத்தை முடிக்கிருர்.* (15)

(அ) இவ்விதமாக ஸ்தோத்திரத்தை முடித்துவிட்டு அதை வாசிப்போருக்கு ஏற்படும் பலனைச் சொல்கிருர் :—

इतीमां महच्छ्रीभवानीभुजङ्ग-
स्तुतिं यः पठेद् भक्तियुक्तश्च तस्मै ।
स्वकीयं पदं शाश्वतं वेदसारं
श्रियं चाष्टसिद्धिं भवानी ददाति ॥ १६ ॥

*இதீமாம் மஹத் ஶ்ரீபவாநீபுஜங்க*
*ஸ்துதிம் ய: படேத் பக்தியுக்தச்ச தஸ்மை ।*

*ஸ்வகீயம் பதம் ஶாச்வதம் வேதஸாரம்*
*ச்ரியம் சாஷ்டஸித்திம் பவாநீ ததாதி* ॥

**इति**-இவ்விதமாயுள்ள, **इमां**-இந்த, **महत्-श्रीभवानी-भुजङ्गस्तुति**-மஹிமை பொருந்திய ஸ்ரீபவானியைப்பற்றிய புஜங்கப்ரயாத விருத்தத்தில் அமைத்திருக்கும் ஸ்தோத்ரத்தை, **यः**–எவன், **भक्ति-युक्तः च**-பக்தியுடன்கூட, **पठेत्**–வாசிப்பானோ (சொல்வானோ), **तस्मै**–அவனுக்கு, **भवानी**–பவானியானவள், **वेद-सारं**–வேதங்களின் ஸாரமாயிருக்கிற, **स्वकीयं**–தன்னுடைய, **शाश्वतं**–நித்யமான, **पदं**–ஸ்தானத்தையும், **श्रियं**–ஸம்பத்தையும், **अष्ट-सिद्धिं च**–அஷ்டவித ஸித்தியையும், **ददाति**-கொடுக்கிறாள்.

*பக்தியுடன் இந்த பவானீ புஜங்கஸ்துதியைப் படிப்பவருக்கு பவானியானவள் இவ்வுலகில் எல்லா ஸம்பத்துக்களையும் அணிமா முதலான அஷ்டஸித்திகளையும் கொடுப்பதுடன், திவ்ய ஞானத்தைத் தந்து தனது ஸாயுஜ்யத்தையும், கடைசியில் உபநிஷத்துக்கள் கருத்துடன் போற்றும் ப்ரஹ்மானந்த நிலையையும் தந்தருளுகிறாள்.* (16)

भवानी भवानी भवानी त्रिवारं
उदारं मुदा सर्वदा ये जपन्ति ।
न शोको न मोहो न पापं न भीतिः
कदाचित् कथंचित् कुतश्चित् जनानाम् ॥ १७ ॥

*பவாநீ பவாநீ பவாநீ த்ரிவாரம்*
*உதாரம் முதா ஸர்வதா யே ஜபந்தி* ।
*ந ஶோகோ ந மோஹோ ந பாபம் ந பீதி:*
*கதாசித் கதஞ்சித் குதச்சித் ஜநாநாம்* ॥

**भवानी भवानी भवानी**-பவானி பவானி பவானி என்று, **त्रिवारं**-மூன்று தடவை, **उदारं**–மனப்பூர்வமாக, **मुदा**–ஸந்தோஷமாக, **सर्वदा**-எப்பொழுதும், **ये**–எவர்கள், **जपन्ति**–ஜபிக்கிறார்களோ அந்த, **जनानां**-ஜனங்களுக்கு, **कदाचित्**–எக்காலத்திலாவது, **कथंचित्**–எவ்விதமாகவாவது, **कुतश्चित्**–எவ்வித காரணத்தையிட்டாவது, **शोकः**–சோகம்,

**न**–கிடையாது, **मोहः**–மோஹம், **न**–                , **पापं**–பாபம், **न**–கிடையாது, **भीतिः**–பயம், **न**–கிடையாது.

*இந்த ஸ்தோத்ரம் சொல்லக்கூடிய சக்தியற்று இருந்தால் பவானி பவானி பவானி என்று மூன்று தடவை ஸதாகாலம் உச்சரித்துக்கொண்டிருந்தாலுமே ஸகலவித சோகம், மோஹம், பாபம், பயம் எல்லாம் விலகிவிடுமென்று ஸ்ரீமத் ஆசார்யாள் உறுதி சொல்லி முடிக்கிருர்.* (*17*)

பவானீ புஜங்கம் முற்றும்.

॥ श्रीः ॥

# ॥ कल्याणवृष्टिस्तवः ॥

# கல்யாண வ்ருஷ்டி ஸ்தவம்

[ஸ்ரீ சங்கரபகவத்பாதர் அருளிய ஸ்தோத்ரங்களில் அந்தந்த தேவதையின் மூலமந்திரங்களைக்கொண்டே அதாவது மூல மந்திரத்திலுள்ள ஒவ்வொரு அக்ஷரத்தையும் ஒவ்வொரு சுலோகத்தில் அதே வரிசைப்படி முதலில் வைத்து சில ஸ்தோத்திரங்களை இயற்றியுள்ளார்கள். தக்ஷிணாமூர்த்தி வர்ணமாலா ஸ்தோத்ரமும், மந்த்ரமாத்ருகா புஷ்பமாலா ஸ்தவமும் இந்த கல்யாண வ்ருஷ்டி ஸ்தவமும் இம்மாதிரி அமைந்துள்ளவை. ஒவ்வொரு சுலோகத்திலும் பஞ்சாக்ஷர மந்திரம் முழுவதையும் வைத்து சிவபஞ்சாக்ஷர ஸ்தோத்ரம், சிவ பஞ்சாக்ஷர நக்ஷத்ரமாலா ஸ்தோத்ரம் என்ற இரண்டு ஸ்தோத்ரங்கள் செய்துள்ளார்கள். 'कल्याणवृष्टिभिः' என்று ஆரம்பிப்பதால் இதற்கு 'கல்யாண வ்ருஷ்டி ஸ்தவம்' என்றே பெயர் அமைந்துள்ளது. 16 சுலோகங்கள் கொண்ட இதில் பரதேவதையின் பெருமை அழகாக வர்ணிக்கப்படுகிறது. இந்த ஸ்தோத்ரத்தில் உள்ள ஒவ்வொரு சுலோகத்திலும் ஆரம்பத்தில் ஸ்ரீ வித்யா மஹா மந்திரத்திலுள்ள 15 அக்ஷரங்களும் வரிசையாகக்காணப்படுகிறது. பலனைக்கூறும் 16வது சுலோகத்தின் ஆரம்பத்தில் தேவீ பீஜாக்ஷரத்தைக்காணலாம்.]

कल्याणवृष्टिभिरिवामृतपूरिताभि-
लक्ष्मीस्वयंवरणमङ्गलदीपिकाभिः ।
सेवाभिरम्ब तव पादसरोजमूले
नाकारि किं मनसि भाग्यवतां जनानाम् ॥ १ ॥

கல்யாண வ்ருஷ்டிபிரிவாம்ருத பூரிதாபிர்
லக்ஷ்மீ ஸ்வயம்வரண மங்கள தீபிகாபி:।
ஸேவாபிரம்ப தவ பாதஸரோஜமூலே
நாகாரி கிம் மநஸி பாக்யவதாம் ஜநாநாம் ॥

**अमृतपूरिताभिः**-அமிருதத்தால் நிரப்பப்பட்ட, **कल्याणवृष्टिभिरिव**-மங்களமாரி போன்றதும், **लक्ष्मीस्वयंवरणमङ्गळदीपिकाभिः**-லக்ஷ்மீதேவி தானே வரிக்கின்ற மங்கள தீபமாக விளங்குவதுமான, **तव**-உன்னுடைய **पादसरोजमूले**-தாமரைபோன்ற காலடியில், **सेवाभिः**-(செய்யும்) பணிவிடைகளால், **अम्ब**-தாயே, **भाग्यवतां**-பாக்யங்களுடன்கூடிய, **जनानां**-ஜனங்களுடைய, **मनसि**-மனதில், **किं नाकारि**-எதுதான் செய்யப்படவில்லை ?

*முற்பிறவிகளில் ஏராளமான புண்யம் செய்தவர்களுக்குத்தான் அம்பிகையின் திருவடிகளில் ஸேவை செய்யும் பாக்யம் கிடைக்கும் அவர்களே அதிருஷ்டமுள்ளவர்கள். அமிருதம் நிறைந்து மங்களங்களையே பொழியும் மேகம் போன்றது தேவியின் திருவடி ஸேவை. லக்ஷ்மீ தானே ஸாந்நித்யம் கொள்ளும் மங்கள தீபம் போன்றது. இந்த பாதஸேவை பக்தர்களுக்கு எதைத்தான் தராது? லக்ஷ்மீகடாக்ஷம், திவ்யாமிருதம், மங்கள பரம்பரை, திவ்யஞானம் மற்றும் வேண்டியதையெல்லாம் இந்த சரண ஸேவையின் மூலம் பெறலாம்.* (1)

*(அ) பக்தியின் லக்ஷணத்தைக் காட்டுகிறார்:—*

**एतावदेव जननि स्पृहणीयमास्ते**
**त्वद्वन्दनेषु सलिलस्थगिते च नेत्रे ।**
**सांनिध्यमुद्यदरुणायुतसोदरस्य**
**त्वद्विग्रहस्य परया सुधयाप्लुतस्य ॥ २ ॥**

*ஏதாவதேவ ஜநநி ஸ்ப்ருஹணீயமாஸ்தே*
*த்வத்வந்தநேஷு ஸலில ஸ்தகிதே ச நேத்ரே ।*
*ஸாந்நித்யமுத்யதருணாயுத ஸோதரஸ்ய*
*த்வத்விக்ரஹஸ்ய பரயா ஸுதயாப்லுதஸ்ய ॥*

**जननि**-தாயே, **उद्यदरुणायुतसोदरस्य**-பதினாயிரம் உதயகால ஸூர்யர்களுக்கு ஒப்பானதும், **परया**-சிறந்த, **सुधया**-அமிருதத்தால், **आप्लुतस्य**-நீராட்டப்பட்டதுமான **त्वद्विग्रहस्य**-உன் சரீரத்தின், **सान्निध्यं**-ஸாந்நித்யமும் (அருகில் விளங்குவதும்), **त्वद्वन्दनेषु**-உன்னைக் குறித்து நமஸ்காரங்களில், **सलिलस्थगिते**-நீர்மல்கும் ஸ்தப்தமான, **नेत्रे च**-

கண்களும், **एतावदेव**-இதுதான், **स्पृहणीयं**-ஆசைப்பட த்தகுந்ததாக **आस्ते**-இருக்கிறது.

*உலகிலுள்ள ஜனங்கள் அறியாமையால் எதை எதையோ விரும்புகிறார்கள். அவைகளால் யாது பயன்? ஆயிரக்கணக்கான உதய சூரியர்கள் போன்று செந்நிறம் கொண்டதும் சிறந்த அமிருதத்தில் மூழ்கியதும் அமிருதம் பெருகுவதுமான உன் திவ்ய மூர்த்தியின் ஸாந்நித்யமும் உன்னை தர்சித்து வணங்கும்பொழுது கண்களில் ஆனந்தகண்ணீர் பெருக அசையாமல் உன் திவ்ய மங்கள மூர்த்தியிலேயே ஈடுபட்டிருக்கும் நிலையும்தான் யாவராலும் விரும்பி வேண்டத்தக்கது. உன் ஸந்நிதியில் அமர்ந்து நேத்ரங்களில் ஆனந்தபாஷ்பம் பெருக வேறொன்றையும் பாராமல் உன்னையே தர்சித்துக்கொண்டும் வணங்கிக்கொண்டும் நான் இருக்கவேண்டும். இதையே எனக்கு அருள்வாயாக. இங்கு* **'परया'** *என்ற அடைமொழியால் தேவாமிருதத்தை விலக்கி அதைவிட எவ்வளவோ சிறப்பு வாய்ந்தது என்பதை காட்டுகிறார். அந்த அமிருகத்தைப்பருகியும் தேவர்கள் துன்பப்பட்டுக்கொண்டு தானே இருக்கிறார்கள்!* (2)

*(அ) ப்ரணமத்தின் மஹிமையைக் கூறுகிறார்:—*

ईशत्वनामकलुषाः कति वा न सन्ति
  ब्रह्मादयः प्रतिभवं प्रलयाभिभूताः ।
एकः स एव जननि स्थिरसिद्धिरास्ते
  यः पादयोस्तव सकृत्प्रणतिं करोति ॥ ३ ॥

*ஈசத்வ நாம கலுஷா: கதி வா ந ஸந்தி*
  *ப்ரஹ்மாதய: ப்ரதிபவம் ப்ரளயாபிபூதா: ।*
*ஏக: ஸ ஏவ ஜநநி ஸ்திரஸித்திராஸ்தே*
  *ய: பாதயோஸ்தவ ஸக்ருத் ப்ரணதிம் கரோதி ॥*

**प्रतिभवं**-ஸிருஷ்டிதோறும், **प्रलयाभिभूताः**-அழிவால் தாக்கப்பட்ட **ईशत्वनामकलुषाः**-ஈசத்தன்மையில் பெயரளவிலேயே கலக்கமுள்ள **ब्रह्मादयः**-ப்ரஹ்மா முதலானவர்கள், **कति वा न सन्ति**-எத்தனை பேர் தான் இல்லை? **जननि**-தாயே, **यः**-எவன், **तव**-உன்னுடைய, **पादयोः**-

இரு திருவடிகளிலும், **सकृत्**-ஒரு தடவை, **प्रणतिं**-நமஸ்காரத்தை, **करोति**-செய்கிறானோ, **स एक एव**-அவன் ஒருவன்தான், **स्थिरसिद्धिः**-நிலையான ஸித்திபெற்றவனாக, **आस्ते**-இருக்கிறான்.

*ப்ரஹ்மாதிகளெல்லாம் உலகிற்கு ஈசர்கள். அடக்கி ஆள்பவர்கள். இவ்வாறே தங்களை ஈசர்களாக எண்ணிக் கொண்டு தன் நிலை மறந்து மனம் கலங்கி நிற்கின்றனர். ஆனால் நன்கு கவனித்துப்பார்த்தால் ஈசர் என்பது அவர்களுக்குப் பெயரளவில்தான். ஏனெனில் அவர்களும் மஹாபிரளயத்தில் அழிந்துவிடுகின்றனர். இவ்விதமான ப்ரஹ்மா ஒருவரா? இருவரா? எத்தனையோ கணக்கிலடங்காத பிரஹ்மாதிகள் பிறந்து அழிந்துவிட்டனர். ஒவ்வொரு ஸ்ருஷ்டியிலும் வெவ்வேறான பிரஹ்மாதிகள் தோன்றி மறைந்துவிடுகின்றனர். இவ்வித பிரஹ்மாதிகளை ஆச்ரயித்தால் நமக்கு சாச்வத நிலை எப்படி ஏற்படும்? ஜகன்மாதாவான பரதேவதையின் திருவடிகளில் பக்தியுடன் ஒருதட்வையாவது வணங்குபவன்தான் அவள் அருளால் அழியாத நிலையான ஸ்தானத்தைப் பெறுகிறான். (3)*

*(அ) கடாக்ஷத்தின் சிறப்பைச் சொல்கிறார்:—*

**लब्ध्वा स**
**कारुण्यकन्दलितकान्तिभरं कटाक्षम् ।**
**कंदर्पकोटिसुभगास्त्वयि भक्तिभाजः**
**संमोहयन्ति तरुणीर्भुवनत्रयेऽपि ॥ ४ ॥**

*லப்த்வா ஸக்ருத் த்ரிபுரஸுந்தரி தாவகீநம்*
*காருண்ய கந்தளித காந்தி பரம் கடாக்ஷம் |*
*கந்தர்ப்ப கோடி ஸுபகாஸ் த்வயி பக்திபாஜ:*
*ஸம்மோஹயந்தி தருணீர் புவநத்ரயேऽபி ||*

**त्रिपुरसुन्दरि**-ஹே த்ரிபுரஸுந்தரி, **त्वयि**-உன்னிடத்தில், **भक्तिभाजः**-பக்தி பெற்றவர்கள், **कारुण्यकन्दलित**-கருணை என்னும் முளை கிளம்பிய, **कान्तिभरं**-ஒளி நிறைந்த, **तावकीनं**-உன்னுடைய, **कटाक्षं**-

கடைக்கண் பார்வையை, **सकृत्**–ஒரு தடவை, **लब्ध्वा**–பெற்று, **कन्दर्पकोटिसुभगाः**–கோடி மன்மதர்கள்போல் அழகுள்ளவர்களாக, **भुवनत्रयेऽपि**–மூவ்வுலகிலும், **तरुणीः**–யுவதிகளை, **संमोहयन्ति**–மயங்கச் செய்கிறார்கள்.

*ஹே த்ரிபுரஸுந்தரி! ஒரு தடவையாவது கருணையொளி நிறைந்த உன் திவ்ய கடாக்ஷத்திற்குப் பாத்ரமாகும் பக்தர்கள் கோடி மன்மதாகாரர்களாக ஆகி திவ்ய லாவண்யம் பெற்று மூவுலகிலுமுள்ள திவ்ய ஸௌந்தர்யம் கொண்ட யுவதிகளை மயங்கச் செய்கிறார்கள். உலகிலேயே சிறந்த அழகு வாய்ந்த தேவஸ்திரீகளும் கூட உன் பக்தனின் ஸௌந்தர்யத்தில் மயங்குகின்றனர். அம்பிகையின் அருளால் திவ்ய ஸௌந்தர்யம் பெறலாம். இதே கருத்தை ஸௌந்தர்யலஹரி 13வது சுலோகத்திலும் காணலாம். "விஷ்ணு மோஹினி உருக்கொண்டு காமாரியை மயங்கச்செய்ததும் காமன் முனிவர்களின் மனதில் மோஹத்தை உண்டுபண்ணுவதும் உன் பூஜா பலன்தான்" என்று 5வது சுலோகத்தில் கூறியுள்ளார்.* (4)

*(அ) தேவியின் ஸ்மரணம் யமபயத்தைப்போக்குமென்கிறார்:-*

ह्रींकारमेव तव नाम गृणन्ति वेदा
मातस्त्रिकोणनिलये त्रिपुरे त्रिनेत्रे ।
त्वत्संस्मृतौ यमभटाभिभवं विहाय
दीव्यन्ति नन्दनवने सह लोकपालैः ॥ ५ ॥

*ஹ்ரீங்காரமேவ தவ நாம க்ருணந்தி வேதா*
*மாதஸ்த்ரிகோண நிலயே த்ரிபுரே த்ரிநேத்ரே ।*
*த்வத்ஸம்ஸ்ம்ருதௌ யமபடாபிபவம் விஹாய*
*தீவ்யந்தி நந்தநவநே ஸஹ லோகபாலை: ॥*

**त्रिकोणनिलये**–முக்கோணத்தை இருப்பிடமாகக்கொண்ட, **मातः**–தாயே! **त्रिपुरे**–த்ரிபுரஸுந்தரி! **त्रिनेत्रे**–மூன்று கண்களுள்ளவளே, **तव नाम**–உனது பெயரான **ह्रींकारमेव**–ஹ்ரீங்காரத்தையே, **वेदाः**–வேதங்கள், **गृणन्ति** – போற்றுகின்றன, **त्वत्संस्मृतौ** – உன் ஸ்மரணம் ஏற்பட்டதும (பக்தர்கள்) **यमभटाभिभवं**–யமகிங்கரர்களின் அவமதிப்பை,

**विहाय**—விலக்கி, **लोकपालैः सह**—திக்பாலர்களுடன், **नन्दनवने**—நந்தன வனத்தில், **दीव्यन्ति**—விளையாடுகின்றனர்.

அம்பிகை த்ரிகோணத்தில் வஸிக்கிருள். த்ரிகோணத்தி பிந்து ஸ்தானத்தில் வஸிப்பவள் என்று பொருள். ஸ்ரீசக்ரத்திலுள்ள எல்லாமே முக்கோணவடிவமாக இருப்பதால் ஸ்ரீ சக்ரநிவாஸினி என்றும் பொருள் கொள்ளலாம். மும்மூர்த்தி களுக்கும் ஆதியாக, ஸ்ருஷ்டி ஸ்திதி லயங்களுக்கு முன்னல் இருப்பதாலும், உலகில் மும்மூன்ருக விளங்கும் பொருள்களில் எல்லாம் வியாபித்திருப்பதாலும் த்ரிபுரா என்று பெயர். மூன்று கண்களுள்ளவள். அம்பிகையின் மந்திரங்களில் மிக முக்யமான 'ஹ்ரீம்' என்பதையே அவள் பெயராகக்கூறி உபநிஷத்துக்கள் போற்றுகின்றன. அம்பிகையை ஸ்மரிப்பவர்களின் அருகில் யம கிங்கரர்கள் நெருங்கவேமாட்டார்கள். உத்தமமான தேவ பாவத்தையடைந்து இந்திரன் முதலான திக்பாலர்களுக்குச் சமமான பெருமைகளைப்பெற்று தேவலோகத்திலுள்ள நந்தனம் என்னும் உத்யான வனத்தில் அவர்களுடன் விளையாடுகிருர்கள்.

हन्तुः पुरामधिगलं परिपीयमानः
क्रूरः कथं न भविता गरलस्य वेगः ।
नाश्वासनाय यदि मातरिदं तवार्धं
देहस्य शश्वदमृताप्लुतशीतलस्य ॥ ६ ॥

ஹந்து: புராமதிகலம் பரிபீயமாந:
க்ரூர: கதம் ந பவிதா கரளஸ்ய வேக: ।
நாச்வாஸநாய யதி மாதரிதம் தவார்த்தம்
தேஹஸ்ய ஶச்வதம்ருதாப்லுதஶீதளஸ்ய ॥

**मातः**—தாயே, **तव**—உன்னுடைய, **शश्वत्**—எப்பொழுதும், **अमृताप्लुत**—அமிருதத்தால் நனைந்து, **शीतलस्य**—குளிர்ச்சியடைந்த, **देहस्य**—சரீரத்தின், **इदं अर्धं**—இந்தப் பாதியானது, **आश्वासनाय**—ஆறுதல் செய்வதற்கு, **यदि न**—இல்லாவிடில், **पुरां हन्तुः**—த்ரிபுரர்களைக் கொன்ற பரமசிவனின், **अधिगलं**—கழுத்தில், **परिपीयमानः**—பானம் செய்யப்படுகிற, **गरलस्य**—விஷத்தின், **वेगः**—வேகம், **क्रूरः**—க்ரூரமாக, **कथं**—எப்படி, **न भविता**—இல்லாமலிருக்கும்?

தேவர்கள் அமிருதத்திற்காக பாற்கடலைக் கடையும்பொழுது முதலில் உண்டான ஹாலாஹல விஷத்தை, உலகைக்காப்பாற்ற த்ரிபுராரியான பரமசிவன் பானம் செய்து தன் கழுத்திலேயே நிறுத்தி வைத்துக்கொண்டார். உலகம் முழுவதையும் சாம்பலாக்கும் சக்தி படைத்த அந்தக்கொடிய விஷத்தின் வேகம் எவ்வாறு அடங்கியது? பரமசிவனின் சரீரத்தை ஏன் சாம்பலாக செய்யவில்லை? தாயே! இதற்குக்காரணம் நீதான். உன் சரீரம் எப்பொழுதும் அமிருதத்தில் மூழ்கிக் குளிர்ந்திருப்பது அர்த்த நாரீச்வர மூர்த்தியில் பரமசிவனது பாதி சரீரமாக நீ இருக்கிறாய். அமிருத ஸம்பந்தமுள்ள உனது பாதி சரீரம்தான் விஷ வேகத்தைத்தடுத்து பரமசிவனுக்கு துன்பமொன்றும் ஏற்படாமல் செய்தது இது இல்லாவிட்டால் விஷவேகத்தை யார்தான் தடுத்திருக்கமுடியும்? முன் சுலோகத்தில் யமகிங்கரபயம் நீங்கும் என்று கூறினர். இது ஆச்சர்யமல்ல. யமனை நிக்ரஹம் செய்த கால காலனுக்கு ஹாலாஹல விஷபயத்தை நீக்கினாள் தேவி. என்று இங்கு கூறப்படுகிறது. (6)

सर्वज्ञतां सदसि वाक्पटुतां प्रसूते
देवि त्वदङ्घ्रिसरसीरुहयोः प्रणामः ।
किं च स्फुरन्मकुटमुज्ज्वलमातपत्रं
द्वे चामरे च महतीं वसुधां ददाति ॥ ७ ॥

ஸர்வஜ்ஞதாம் ஸதஸி வாக்படுதாம் ப்ரஸூதே
தேவி த்வதங்க்ரி ஸரஸீருஹயோ: ப்ரணாம: ।
கிம்ச ஸ்புரன்மகுடமுஜ்வலமாதபத்ரம்
த்வே சாமரே ச மஹதீம் வஸுதாம் ததாதி ॥

**देवि**-ஹே தேவி, **त्वदङ्घ्रिसरसीरुहयोः**-உனது இரு தாமரைத் திருவடிகளில், **प्रणामः**-நமஸ்காரமானது, **सर्वज्ञतां**-எல்லாம் அறியும் தன்மையையும், **सदसि**-ஸபையில், **वाक्पटुतां**-பேச்சுத்திறமையையும், **प्रसूते**-உண்டுபண்ணுகிறது, **किंच**-மேலும், **स्फुरन्मकुटं**-பிரகாசிக்கிற கிரீடத்தையும், **उज्ज्वलं**-ஒளியுள்ள, **आतपत्रं**-வெண் குடையையும், **द्वे चामरे**-இரு சாமரங்களையும், **महतीं**-விஸ்தீர்ணமான, **वसुधां च**-பூமியையும், **ददाति**-கொடுக்கிறது,

உன் திருவடித்தாமரையில் வணங்குபவர்கள் உனது அருளால் ஸர்வக்ஞர்களாக (எல்லாம் அறிந்தவர்களாக) ஆகிவிடுகின்றனர் எந்த ஸபையிலும் நன்றாகப் பேசும் திறமை அவர்களுக்கு ஏற்படுகிறது இது மட்டுமா? உனது பக்தர்கள் சக்ரவர்த்தி ஸ்தானம் பெற்று கிரீடமணிந்து சத்ர சாமராத்யுபசாரங்களுடன் விஸ்தீர்ணமான பூமண்டலம் முழுவதையும் அரசாளுகின்றனர். (7)

कल्पद्रुमैरभिमतप्रतिपादनेषु
कारुण्यवारिधिभिरम्ब भवत्कटाक्षैः ।
आलोकय त्रिपुरसुन्दरि मामनाथं
त्वय्येव भक्तिभरितं त्वयि बद्धतृष्णम् ॥ ८ ॥

கல்பத்ருமைரபிமத ப்ரதிபாதநேஷு
காருண்ய வாரிதிபிரம்ப பவத் கடாக்ஷை: ।
ஆலோகய த்ரிபுரஸுந்தரி மாமநாதம்
த்வய்யேவ பக்திபரிதம் த்வயி பத்தத்ருஷ்ணம் ॥

**अभिमतप्रतिपादनेषु**-விரும்பியவைகளை எல்லாம் கொடுக்கும் விஷயத்தில், **कल्पद्रुमैः**-கல்பகவிருக்ஷமாயுள்ளதும், **कारुण्यवारिधिभिः**-கருணைக் கடல்களாகவுமுள்ள, **भवत्कटाक्षैः** – உன்னுடைய கடாக்ஷங்களால், **अम्ब**-தாயே! **त्रिपुरसुन्दरि**–ஹே த்ரிபுரஸுந்தரி! **अनाथं**–ரக்ஷகனில்லாதவனும், **त्वय्येव**–உன்னிடத்திலேயே, **भक्तिभरितं** –பக்தி நிறைந்தவனும், **त्वयि**–உன்னிடம், **बद्धतृष्णं**–ஆவல்கொண்டவனுமான, **मां**–என்னை, **आलोकय**-பார்ப்பாயாக.

உலகில் அவரவர் வேண்டுவதையெல்லாம் தருவது தேவலோகத்திலுள்ள கல்பவிருக்ஷம். இதுபோல் உனது கடாக்ஷமும் அபீஷ்டங்களையெல்லாம் நிறைவேற்றுகிறது. இக்கடாக்ஷம் கடல்போல வற்றாத அளவற்ற கருணாரஸம் நிரம்பியது அதனால் துன்பங்களையெல்லாம் போக்கி விடுகிறது. உன் விஷயமான பக்தியே என் மனதில் நிறைந்திருக்கிறது. வேறு ஒன்றிலும் ஆசைகொள்ளாது உன் அருளைப் பெறுவதிலேயே மாறாத தீவ்ரமான ஆவல் கொண்டுள்ளேன். நான் அனாதன். என்னைக் காப்பாற்ற உன்னைத்தவிர வேறு ஒருவரும் இல்லை. என் பேரில் உனது கருணைகடாக்ஷத்தைச் செலுத்திக் காப்பாற்றவேணும்.

பூவுலகிலுள்ள மனிதன் தேவலோகத்திலுள்ள கல்பகவிருக்ஷத்திடமிருந்து அபீஷ்டத்தைப் பெறமுடியாது ஸத்கர்மாக்களைச்செய்து மறுபிறவியில் தேவலோகத்தில் தேவப்பிறவி கிடைத்தால் தான் கல்பகவிருக்ஷத்தையண்டி அபீஷ்டத்தை நிறைவேற்றிக்கொள்ள முடியும். ஆனால் மனிதப்பிறவியிலேயே பக்தி கொண்டால் அம்பிகையின் கருணைகடாக்ஷத்திற்குப் பாத்ரமாகி அபீஷ்டங்களை நிறைவேற்றிக்கொள்ளலாம். கல்பதருவைவிடச் சிறந்தது உன் கருணைகடாக்ஷம். (8)

हन्तेतरेष्वपि मनांसि निधाय चान्ये
भक्तिं वहन्ति किल पामरदैवतेषु ।
त्वामेव देवि मनसा समनुस्मरामि
त्वामेव नौमि शरणं जननि त्वमेव ॥ ९ ॥

ஹந்தேதரேஷ்வபி மநாம்ஸி நிதாய சாந்யே
பக்திம் வஹந்தி கில பாமரதைவதேஷு ।
த்வாமேவ தேவி மநஸா ஸமநுஸ்மராமி
த்வாமேவ நௌமி ஶரணம் ஜநநி த்வமேவ ॥

**अन्ये**-வேறு சிலர், **इतरेषु**-மற்ற, **पामरदैवतेष्वपि**-பாமர தேவதைகளிடத்திலும், **मनांसि**-மனதுகளை, **निधाय**-வைத்து, **भक्तिं वहन्ति किल**-பக்தி புரிகிறார்களல்லவா, **हन्त**-ஐயோ கஷ்டம்! **देवि**-ஹே தேவி! **मनसा**-மனதால், **त्वामेव**-உன்னையே, **समनुस्मरामि**-(நான்) நன்கு ஸ்மரிக்கிறேன். **त्वामेव**-உன்னையே, **नौमि**-வணங்குகிறேன். **जननि**-தாயே, **त्वमेव**-நீதான், **शरणं**-ரக்ஷிப்பவள்.

தேவியின் தத்வத்தையறிந்துகொள்ளாது நம்மைப்போலவே உலக விஷய இன்பங்களில் மூழ்கிக்கிடக்கும் பாமர தேவதைகளிடம் மனதைச் செலுத்தி சிலர் பக்திபுரிகின்றனர். ஐயோ கஷ்டம்! இவர்களின் அறியாமையைப்பற்றி என்ன சொல்வது? அழிவற்ற பேரானந்தத்தை இவர்களிடமிருந்து பெறமுடியுமா? நான் அவர்கள் வழியில் செல்லவில்லை. உன்னையே மனதால் நன்றாக ஸ்மரிக்கிறேன். உன்னையே வணங்குகிறேன். தாயாரான நீதான் எனக்கு சரணம், வேறு கதியில்லை. (9)

लक्ष्येषु सत्स्वपि कटाक्षनिरीक्षणाना-
मालोकय त्रिपुरसुन्दरि मां कदाचित् ।
नूनं मया तु सदृशः करुणैकपात्रं
जातो जनिष्यति जनो न च जायते वा ॥ १० ॥

*லக்ஷ்யேஷு ஸத்ஸ்வபி கடாக்ஷநிரீக்ஷணானா-*
*மாலோகய த்ரிபுரஸுந்தரி மாம் கதாசித் ।*
*நூநம் மயா து ஸத்ருஶ: கருணைக பாத்ரம்*
*ஜாதோ ஜநிஷ்யதி ஜநோ ந ச ஜாயதே வா ॥*

**त्रिपुरसुन्दरि**-ஹே த்ரிபுரஸுந்தரி! **कटाक्षनिरीक्षणानां**-கடைக் கண் பார்வைகளுக்கு, **लक्ष्येषु**-இலக்காகத்தக்கவர் பலர், **सत्स्वपि**-இருந்தபோதிலும், **कदाचित्**-ஒரு சமயமாவது, **मां**-என்னை, **आलोकय**-பார்ப்பாயாக. **करुणैकपात्रं**-உன் கருணைக்கு மிகவும் தகுதியான, **जनः**-மனிதர், **मया तु सदृशः**-எனக்கு ஒப்பாக **न जातः**-பிறந்ததில்லை, **न जनिष्यति**-பிறக்கப்போவதுமில்லை, **न च जायते वा**-பிறக்கிறதுமில்லை, **नूनं**-நிச்சயம்.

*ஹே த்ரிபுரஸுந்தரி! உனது கடைக்கண் பார்வை தன் மேல் விழுவதற்கு வேண்டிய பாக்யமுள்ளவர்கள் உலகில் ஏராளமாக இருக்கின்றனர். அந்தத் தகுதி என்னிடம் இல்லைதான். ஆனாலும் ஏதாவது ஒரு சமயம் என்னையும் கடாக்ஷித்தருள வேணும். ஏனெனில் உனது கருணைக்கு முக்ய பாத்ரமாகத் தக்கவர் என்னைப்போல ஒருவரும் உலகில் இதுவரை இருந்ததில்லை. இப்பொழுதும் இல்லை. இனி வருங்காலத்திலும் பிறக்கப்போவதில்லை. துன்பப்படுபவர்களிடம்தான் கருணையைச் செலுத்தவேண்டும். கருணைக்குப் பாத்திரமாகத் தக்கவர்கள் அவர்கள் தான். என்னைப்போல துன்பப்படுபவர் உலகில் முக்காலங்களிலும் வேறு ஒருவரும் கிடையாது.* (10)

ह्रीं ह्रीमिति प्रतिदिनं जपतां तवाख्यां
किं नाम दुर्लभमिह त्रिपुराधिवासे ।
मालाकिरीटमदवारणमाननीयान्
तान्सेवते वसुमती स्वयमेव लक्ष्मीः ॥ ११ ॥

*ஹ்ரீம் ஹ்ரீமிதி ப்ரதிதிநம் ஜபதாம் தவாக்யாம்*
*கிம் நாம துர்லபமிஹ த்ரிபுராதிவாஸே ।*
*மாலா கிரீட மதவாரண மாநநீயான்*
*தான் ஸேவதே வஸுமதீ ஸ்வயமேவ லக்ஷ்மீ: ॥*

**त्रिपुराधिवासे**-த்ரிபுரங்களில் வஸிப்பவளே, **ह्रीं ह्रीमिति**-ஹ்ரீம் ஹ்ரீம் என்று, **तव आख्यां**-உன்னுடைய பெயரை, **प्रतिदिनं**-தினந் தோறும், **जपतां**-ஜபிக்கிறவர்களுக்கு, **इह**-இங்கு, **दुर्लभं**-அடைய முடியாதது, **किं नाम**-என்னதான் உள்ளது? **मालाकिरीटमदवारण-माननीयान्**-மாலைகள், மகுடம், மத்தகஜம் இவைகளால் கௌரவிக்கத் தக்க, **तान्**-அவர்களை, **वसुमती**-பூமி, **सेवते**-ஸேவிக்கிறாள். **लक्ष्मीः**-லக்ஷ்மீதேவியும், **स्वयमेव**-தானாகவே ஸேவிக்கிறாள்.

*அம்பிகையின் பீஜாக்ஷரமான 'ஹ்ரீம்' என்ற மந்திரத்தை ஜபிப்பவர்கள் ஆசைப்பட்டால் எந்தப்பொருளையும் அடைந்து விடலாம். அவர்களுக்குக் கிடைக்காதது உலகில் ஒன்றுமே இல்லை. ஸ்ரீ தேவியும் பூதேவியும் தானாகவே அவனை ஸேவிக்கிறார்கள். பூமண்டலம் முழுவதற்கும் ஏகசக்ராதிபதியாக அவனை ஆக்கிவிடுகிறாள் பூதேவி. மாலைகள் மகுடம் மத்தகஜம் முதலான மஹாராஜ சிஹ்னங்களையெல்லாம் அருளி ச்ரீதேவி எல்லா ஸம்பத்துக்களையும் தந்து அருள்கிறாள்.* (11)

**संपत्कराणि सकलेन्द्रियनन्दनानि**
**साम्राज्यदाननिरतानि सरोरुहाक्षि ।**
**त्वद्वन्दनानि दुरिताहरणोद्यतानि**
**मामेव मातरनिशं कलयन्तु मान्ये ॥ १२ ॥**

*ஸம்பத்கராணி ஸகலேந்த்ரிய நந்தனானி*
*ஸாம்ராஜ்ய தாநநிரதானி ஸரோருஹாக்ஷி ।*
*த்வத்வந்தனானி துரிதாஹரணோத்யதாநி*
*மாமேவ மாதரநிஶம் கலயந்து மாந்யே ॥*

**सरोरुहाक्षि**-தாமரை மலர்போன்ற நேத்ரங்கள் உள்ளவளே! **संपत्कराणि**-ஐசுவர்யங்களை உண்டுபண்ணுவதும், **सकलेन्द्रिय-**

**नन्दनानि**-எல்லாப் புலன்களையும் ஆனந்தப்படுத்துவதும், **साम्राज्य-दाननिरतानि**-ஸாம்ராஜ்யத்தைத் தருவதில் ஈடுபட்டதும், **दुरिता-हरणोद्यतानि**-பாபங்களைப் போக்குவதில் ஊக்கமுள்ளதுமான, **त्वद्वन्दनानि**-உன்னைக் குறித்த ப்ரணாமங்கள், **मान्ये**-பூஜிக்கத்தக்க, **मातः**-தாயே, **अनिशं**-எப்பொழுதும், **मामेव**-என்னையே, **कलयन्तु**-செயல்படுத்தட்டும்.

*தாமரை மலர்போல் அழகிய கண்களுள்ள ஜகன்மாதாவைக் குறித்து நமஸ்காரம் செய்பவர்களுக்கு எல்லா ஐசுவர்யங்களும் ஏற்படும். கண், காது, மூக்கு, நாக்கு, த்வக், மனம் என்ற எல்லா இந்திரியங்களுக்கும் சிறந்த ரூபம், சப்தம், மணம், ரஸம், ஸ்பர்சம் இவை கிடைத்து அவை திருப்தியை அடையும். சக்ரவர்த்தியாக ஆவான். எல்லா பாபங்களையும் போக்கிவிடும். பூஜிக்கத்தக்க தாயே! இவ்வளவு மஹிமையுள்ள நமஸ்காரங்களை உன்னைக் குறித்து நான் எப்பொழுதும் செய்துகொண்டிருக்கும்படி நீ அருளவேண்டும்.* (12)

**कल्पोपसंहृतिषु कल्पिततांण्डवस्य**
**देवस्य खण्डपरशोः परभैरवस्य ।**
**पाशाङ्कुशैक्षवशरासनपुष्पबाणा**
**सा साक्षिणी विजयते तव मूर्तिरेका ॥ १३ ॥**

*கல்போபஸம்ஹ்ருதிஷு கல்பித தாண்டவஸ்ய*
*தேவஸ்ய கண்டபரசோ: பரபைரவஸ்ய ।*
*பாசாங்குசைக்ஷவ சராஸந புஷ்பபாணா*
*ஸா ஸாக்ஷிணீ விஜயதே தவ மூர்த்திரேகா ॥*

**कल्पोपसंहृतिषु**-கல்பங்களின் முடிவுகளான ப்ரளயகாலங்களில், **कल्पिततांण्डवस्य**-தாண்டவம் புரிகின்ற, **देवस्य**-தேவரான, **खण्ड-परशोः**-ஒடிந்த பரசு ஆயுதத்தை உடைய, **परभैरवस्य**-பரபைரவருக்கு **तव**-உன்னுடைய, **पाश अंकुश ऐक्षव शरासन पुष्पबाणा**-பாசம், அங்குசம், கரும்புவில், புஷ்பபாணம் இவைகளை உடைய, **सा**-அந்த, **एका मूर्तिः**-ஒரு மூர்த்திதான், **साक्षिणी**-ஸாக்ஷியாக, **विजयते**-விளங்குகிறது.

*உலக ஸிருஷ்டிகளெல்லாம் முடிந்து மஹாப்ரளய காலத்தில் பிரபஞ்சம் முழுவதையும் அழித்து பரமசிவன் பயங்கர மூர்த்தி யாகத் தான்ஒருவனுகவே நின்றுகொண்டு மஹாதாண்டவம் செய்கிருர். அந்த சமயத்தில் வேறு ஒருவரும் இல்லை. எல்லாம் அழிந்து விட்டது. ஆனுலும் அச்சமயத்திலும் வில், அம்பு, பாசம், அங்குசம் இந்த ஆயுதங்களை தரித்துக்கொண்டு நீ அந்த தாண்டவத்தைப் பார்த்துக்கொண்டு ஸாக்ஷியாக விளங்குகிருய். மஹாப்ரளய காலத்தில் பரமசிவன் புரியும் மஹாதாண்டவத்தைப் பார்க்கும் சக்தி வேறு யாருக்கு உண்டு? ஸச்சிதானந்த ரூபியான பரமாத்மா உன் சக்தியால்தான் பிரளயத்தையும் தாண்டவத்தையும் புரிகிருர்.* (13)

लग्नं सदा भवतु मातरिदं तवार्धं
तेजः परं बहुलकुङ्कुमपङ्कशोणम् ।
भास्वत्किरीटममृतांशुकलावतंसं
मध्येत्रिकोणनिलयं परमामृतार्द्रम् ॥ १४ ॥

லக்நம் ஸதா பவது மாதரிதம் தவார்த்தம்
தேஜ: பரம் பஹுள குங்கும பங்கஶோணம் ।
பாஸ்வத் கிரீடமம்ருதாம்ஶு கலாவதம்ஸம்
மத்யேத்ரிகோணநிலயம் பரமாம்ருதார்த்ரம் ॥

**मातः**–தாயே, **बहुलकुंकुमपङ्कशोणं**–அதிகமான குங்குமச் சேற்றினுல் செந்நிறமுள்ளதும், **भास्वत्किरीटं**–ஒளியுள்ள கிரீடமுள்ளதும், **अमृतांशुकलावतंसं**–அமிருத கிரணனுன சந்திரனை சிரோபூஷணமாகக் கொண்டதும், **मध्येत्रिकोणनिलयं**–த்ரிகோண சக்ரத்தின் நடுவில் உள்ளதும், **परमामृतार्द्रं**–சிறந்த அமிருதத்தால் நனைந்ததும், **परं तेजः**–சிறந்த ஒளிமயமானதுயான, **इदं**–இந்த, **तव**–உன்னுடைய, **अर्धं**–ஸ்வரூபம், **सदा**–எப்பொழுதும், **लग्नं**–(மனதில்) பதிந்ததாக, **भवतु**–

*அதிகமான குங்குமப்பூ கலந்த நீரால் (அல்லது குங்குமப்பூ நீர்போல்) செந்நிறம் கொண்டதும் சிரஸில் ஒளியுள்ள திவ்ய கிரீடமும் அதில் சந்திர கலையும் அணிந்துள்ளதும், திவ்யாமிருதத் தால் நனைந்ததும் த்ரிகோண சக்ரத்தில் அமர்ந்துள்ளதும் ஒளி*

மயமானதுமான உன் ஸ்வரூபம் என் மனதில் எப்பொழுதும் நிலைத்திருக்கவேண்டும். இந்த உன் ஸ்வரூபத்தை நான் எப்பொழுதும் தியானம் செய்துகொண்டிருக்கும்படி அருள்புரியவேண்டும். (14)

ह्रींकारमेव तव नाम तदेव रूपं
त्वन्नाम दुर्लभमिह त्रिपुरे गृणन्ति ।
त्वत्तेजसा परिणतं वियदादिभूतं
सौख्यं तनोति सरसीरुहसंभवादेः ॥ १५ ॥

*ஹ்ரீங்காரமேவ தவ நாம ததேவ ரூபம்*
*த்வந்நாம துர்லபமிஹ த்ரிபுரே க்ருணந்தி ।*
*த்வத்தேஜஸா பரிணதம் வியதாதிபூதம்*
*ஸௌக்யம் தநோதி ஸரஸீருஹஸம்பவாதே: ॥*

**त्रिपुरे**-ஹே த்ரிபுரஸுந்தரி, **ह्रींकारमेव**-ஹ்ரீங்காரத்தையே, **तव नाम**-உனது பெயராகவும், **तदेव**-அதையே, **रूपं**-ஸ்வரூபமாகவும், **गृणन्ति**-போற்றுகின்றனர் **इह** - இங்கு, **त्वन्नाम**-உனது நாமா, **दुर्लभम्** -கிடைத்தற்கரியது. **त्वत्तेजसा**-உன்னுடைய தேஜஸ்ஸால், **वियदादिभूतं**-ஆகாசம் முதலான பூதங்கள், **परिणतं**-பரிணமத்தை அடைந்திருக்கிறது. **सरसीरुहसंभवादेः**-தாமரையில் உண்டான பிரஹ்மா முதலியவருக்கு, **सौख्यं**-ஆனந்தத்தை, **तनोति**-உண்டுபண்ணுகிறது.

*பரமாத்மாவின் நாமாக்களுள் பிரணவத்தையே சிறந்ததாக உபநிஷத்துக்கள் கூறுகின்றன. ஹ்ரீங்காரம் தேவீப்ரணவமானதால் தேவீ நாமாக்களுக்குள் இதுவே சிறந்தது. இதுமட்டுமல்ல. இதுவே அவளை தியானம் செய்வதற்கு ப்ரதீகமாகவும் உள்ளது. ஆகையால் ஹ்ரீங்காரமே அவளுடைய ஸ்வரூபம். தேவியின் சிறந்த நாமாவாகவும் ப்ரதீகமாகவும் உள்ள ஹ்ரீங்காரம் சுலபமாக யாருக்கும் கிடைக்காது. இவ்வாறு சாஸ்திரங்களும் பெரியோர்களும் ஹ்ரீங்காரத்தைப் போற்றுகின்றனர். உனது தேஜஸ்ஸால் இந்த ஹ்ரீங்காரத்திலிருந்துதான் ஆகாசம் முதலான ஸமஸ்த பிரபஞ்சமும் உண்டாகியிருக்கிறது. இதுவே பிரஹ்மா முதலானவர்களுக்கும் பேரானந்தத்தைத் தருகிறது.*

ह्रींकारत्रयसंपुटेन महता मन्त्रेण संदीपितं
स्तोत्रं यः प्रतिवासरं तव पुरो मातर्जपेन्मन्त्रवित् ।
तस्य क्षोणिभुजो भवन्ति वशगा लक्ष्मीश्चिरस्थायिनी
वाणी निर्मलसूक्तिभारभरिता जागर्ति दीर्घं वयः ॥

*ஹ்ரீங்கார த்ரய ஸம்புடேந மஹதா மந்த்ரேண ஸந்தீபிதம்*
*ஸ்தோத்ரம் ய: ப்ரதிவாஸரம் தவ புரோ மாதர் ஜபேன் மந்த்ரவித் I*
*தஸ்ய க்ஷோணிபுஜோ பவந்தி வஶகா லக்ஷ்மீச்சிரஸ்தாயினீ*
*வாணீ நிர்மல ஸூக்திபாரபரிதா ஜாகர்த்தி தீர்க்கம் வய: ॥*

**मातः**-தாயே, **मन्त्रवित्**-மந்திரமறிந்த, **यः**-எவன், **प्रतिवासरं**-தினந்தோறும், **तव पुरः**-உன் மூர்த்திக்கு முன்னால் அமர்ந்து, **ह्रींकारत्रय-संपुटेन**-மூன்று ஹ்ரீங்காரங்கள் சேர்ந்துள்ள, **महता मन्त्रेण**-மஹா மந்திரத்தால், **संदीपितं** - பிரகாசிக்கும்படி செய்யப்பட்ட, **स्तोत्रं**-ஸ்தோத்ரத்தை, **जपेत्**-ஜபிப்பானோ, **तस्य**-அவனுக்கு, **क्षोणिभुजः**-பூமியை பரிபாலிக்கும் சக்ரவர்த்திகள், **वशगाः**-ஸ்வாதீனர்களாக, **भवन्ति**-ஆகின்றனர். **लक्ष्मीः**-லக்ஷ்மீ, **चिरस्थायिनी**-வெகுகாலம் நிலைபெற்றிருக்கிறாள். **वाणी**-ஸரஸ்வதீ, **निर्मलसूक्तिभारभरिता**-தோஷமில்லாத ஏராளமான நல்ல வாக்குகள் நிறைந்தவளாக, **जागर्ति**-ஸாந்நித்யம் கொள்கிறாள். **दीर्घं वयः**-நீண்ட ஆயுள் ஏற்படுகிறது.

*ஸ்ரீ வித்யா பஞ்சதசாக்ஷரீ மந்திரத்தில் நடுவில் இரண்டும் கடைசியில் ஒன்றுமாக மூன்று ஹ்ரீங்காரங்கள் உள்ளன. இந்த மூன்று ஹ்ரீங்காரங்களுடன் கூடிய ஸ்ரீ வித்யா மந்திரத்தால் இந்த ஸ்தோத்திரத்திற்குச் சிறந்த சோபை ஏற்பட்டுள்ளது. 15 அக்ஷரங்கள்கொண்ட ஸ்ரீ வித்யா மந்திரத்தில் உள்ள ஒவ்வொரு அக்ஷரமும் அதில் காணும் வரிசைப்படியே இந்த ஸ்தோத்திரத்தில் ஒவ்வொரு சுலோகத்திலும் முதல் அக்ஷரமாக அமைக்கப்பட்டு உள்ளது. இவ்வாறு 15 சுலோகங்கள். பலனைக்கூறும் கடைசி 16வது சுலோகத்திலும் ஆரம்பத்தில் ஹ்ரீங்காரம் காணப்படுகிறது. இத்தனை பெருமை வாய்ந்த மஹாமந்த்ரத்துடன்*

விளங்கும் இந்த ஸ்தோத்ரத்தை மந்திர மஹிமையறிந்து எவன் தினந்தோறும் உனது திவ்யமூர்த்தியின் ஸந்நிதியில் ஜபிக்கிறனோ, (மந்திராக்ஷரங்கள் அடங்கியிருப்பதால் ஜபம் என்ற சொல்லை உடயோகித்திருக்கிறர்) அவனுக்கு சக்ரவர்த்திகள் ஸ்வாதீனர்களாகின்றனர். அவன் உத்தரவை சிரமேற்கொண்டு அதன்படியே நடந்துவருகின்றனர். சஞ்சலஸ்வபாவமுள்ள லக்ஷ்மீதேவி அவனிடம் மட்டும் வெகுகாலம் நிலையாக வாஸம் செய்கிறள். லக்ஷ்மீ கடாக்ஷத்தால் அழிவற்ற நீங்காத எல்லாச் செல்வங்களையும் பெறுகிறன். ஸரஸ்வதியின் அருளால் வாக் ஸித்தி பெறுகிறன். அவனுடைய அளவற்ற ஸெளக்கியங்களில் சிறிதும் குற்றம் காணமுடியாது. நீண்ட ஆயுளும் ஏற்படுகிறது.

கல்யாண வ்ருஷ்டி ஸ்தவம் முற்றும்.

॥ श्रीः ॥

# श्लोकानुक्रमणिका ॥

—o—


| ச்லோகம் | பக்கம் |
| --- | --- |
| अ | |
| अयः स्पर्शे लग्नं | 67 |
| अशेषब्रह्माण्डप्रलय | 72 |
| आ | |
| आदिक्षन्तामक्षर | 13 |
| आशापाशक्लेशविनाश | 20 |
| इ | |
| इति गिरिवरपुत्री | 52 |
| इति श्रीभवानि | 94 |
| इतीमां महच्छ्री | 99 |
| ई | |
| ईशत्वनामकलुषाः | 104 |
| ईशानादिपदं | 36 |
| ए | |
| एणाङ्कानलभानुमण्डल | 35 |
| एतावदेव जननि | 103 |
| क | |
| कटाक्षे दयार्द्रां | 79 |
| कदम्बवनचारिणीं | 23 |
| कदम्बवनमध्यगां | 26 |
| कदम्बवनवासिनीं | 24 |
| कदम्बवनशालया | 25 |
| कन्याभिः कमनीय | 47 |
| कल्पद्रुमैरभिमत | 109 |
| कल्पोपसंहृतिषु | 113 |
| कल्याणवृष्टिभिरिवा | 102 |
| कल्लोलोल्लसिता | 34 |
| कल्हारोत्पल | 42 |
| कुचाञ्चितविपञ्चिकां | 27 |
| कुरङ्गे तुरङ्गे | 83 |
| कृपापाङ्गालोकं | 66 |
| क्वणत्किङ्किणी | 88 |
| ग | |
| गणेशाणिमाद्याखिलैः | 94 |
| गुरुस्त्वं शिवस्त्वं च | 98 |
| घ | |
| घृतक्षीरद्राक्षामधु | 55 |
| च | |
| चन्द्रापीडानन्दित | 21 |
| चलत्कुन्तलान्त | 93 |
| ज | |
| ज्वलत्कान्तिवह्नि | 84 |

| சுலோகம் | பக்கம் |
|---|---|
| ज्वलत्कोटिबालार्क | 87 |
| **त** | |
| त्वदन्यस्मादिच्छा | 68 |
| त्वदीयं सौन्दर्यं | 74 |
| त्वमर्कस्त्वमिन्दु | 95 |
| **न** | |
| नवीनार्कभ्राज | 59 |
| नानाकारैः शक्ति | 19 |
| नित्यः शुद्धो निष्कल | 15 |
| निवासः कैलासे | 71 |
| **प** | |
| पुरन्दरपुरन्ध्रिका | 31 |
| प्रत्याहारध्यान | 10 |
| प्रभूता भक्तिस्ते | 65 |
| प्रातःकाले भाव | 21 |
| प्रातर्नमामि | 3 |
| प्रातर्भजामि | 2 |
| प्रातर्वदामि | 6 |
| प्रातः स्तुवे | 4 |
| प्रातः स्मरामि | 1 |
| **भ** | |
| भवानि स्तोतुं त्वां | 54 |
| भवानी भवानी भवानी | 100 |
| भवाम्भोजनेत्राज | 84 |
| **म** | |
| महान्तं विश्वासं | 67 |
| मुखे ते ताम्बूलं | 57 |
| मूलाधारादुत्थित | 14 |
| **य** | |
| यः श्लोकपंचकमिदं | 7 |
| यस्याः कुक्षौ लीन | 17 |
| यस्यामोतं प्रोत | 18 |
| **ल** | |
| लक्ष्मीमुज्वलयामि | 44 |
| लक्ष्मीमौक्तिकलक्ष | 48 |
| लक्ष्ये योगिजनस्य | 37 |
| लक्ष्येषु सत्स्वपि | 111 |
| लग्नं सदा भवतु | 114 |
| लब्ध्वा सकृत्त्रिपुर | 105 |
| ललामाङ्कफालां | 80 |
| लसद्वृत्तमुत्तुङ्ग | 89 |
| लीलालब्धस्थापित | 9 |
| **व** | |
| वसन्ते सानन्दे | 76 |
| विधात्री धर्माणां | 63 |
| विराजन्मन्दारद्रुम | 58 |
| विशालश्रीखण्डद्रव | 75 |
| वृषो वृद्धो यानं | 71 |
| **श** | |
| शरण्ये वरेण्ये | 98 |

| ச்லோகம் | பக்கம் |
|---|---|
| शरत्पूर्णचन्द्र | 91 |
| शिरीषप्रसूनोल्लस | 90 |
| श्रीमन्त्राक्षरमालया | 51 |
| श्रुतीनामगम्ये | 97 |
| **ष** | |
| षडाधारपंकेरुहा | 86 |
| **स** | |
| सकुंकुमविलेपना | 29 |
| सच्छायैर्वरकेतकी | 46 |
| सपर्णामाकीर्णां | 61 |
| संपत्कराणि सकलेन्द्रिय | 112 |
| सर्वज्ञतां सदसि | 108 |
| सर्वाङ्गे घनसार | 41 |
| सुनासापुटं सुन्दर | 92 |
| सुवक्षोजकुम्भां | 78 |
| सुशान्तां सुदेहां | 82 |
| सुशोणाम्बराबद्ध | |

| ச்லோகம் | பக்கம் |
|---|---|
| सुसीमन्तवेणीं | 81 |
| स्फुरन्नानारत्न | 70 |
| स्मरेत्प्रथमपुष्पिणीं | 29 |
| **ह** | |
| हन्तारं मदनस्य | 43 |
| हन्तुः पुरामधिगलं | 107 |
| हन्तेतरेष्वपि | 110 |
| हंसैरप्यतिलोभनीय | 40 |
| हिमाद्रेः संभूता | 60 |
| ह्रींकारत्रयसंपुटेन मनु | 49 |
| ह्रींकारत्रयसंपुटेन महता | 116 |
| ह्रींकारमेव तव नामगृ | 106 |
| ह्रींकारमेव तव नाम तदेव | 115 |
| ह्रींकाराङ्कितमन्त्र | 39 |
| ह्रींकारेश्वरि तप्त | 45 |
| ह्रीं ह्रीमिति प्रतिदिनं | 111 |